# பிரபுலிங்க லீலை

## மூலமும் - உரையும்




பொம்மபுரம் - மயிலம் ஆதீன வெளியீடு

விலை ரூ. 3—0—0

உ

நல்லாற்றூர் - சிவப்பிரகாச சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

# பிரபு லிங்க லீலை

## (மூலமும் - விளக்க உரையும்)

முதற் பகுதி



ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் மகா சந்நிதானத்தின்

திருவுளக் கருத்தின்படி

வெளியிடப்பட்டது

[இரண்டாம் பதிப்பு]

உரையாசிரியர் :

வித்துவான் - S. துரைசாமி அய்யர்

தலைவர்

ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க்கல்லூரி

மயிலம்



1953

உ

நல்லாற்றூர் - சிவப்பிரகாச சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

# பிரபு லிங்க லீலை

## (மூலமும் - விளக்க உரையும்)




முதற் பகுதி






ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் மகா சந்நிதானத்தின்

திருவுளக் கருத்தின்படி

வெளியிடப்பட்டது

[இரண்டாம் பதிப்பு]


உரையாசிரியர் :

வித்துவான் - S. துரைசாமி அய்யர்

தலைவர்

ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க்கல்லூரி

மயிலம்



காப்பிரைட்]

1953

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பேராசிரியரும்
தமிழ்த்துறைத் தலைவரும் ஆகிய
**டாக்டர் - அ. சிதம்பரநாதச் செட்டியார், எம். ஏ., எழுதிய**

# முன்னுரை

கற்பனைக் களஞ்சியமெனப் புலவர்களாற் சிறப்பிக்கப்பட்டுப் பதினேழாம் நூற்றாண்டில் தமிழகத்தே வாழ்ந்து தமிழ்த்தொண்டாற்றிய சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றிய பிரபந்தங்கள் சுவைநலங் கனிந்து பயில்வோருள்ளத்தைக் கவர்ந்து இன்புறுத்துவன என்பது அறிஞர்கள் அறிந்தது. அடிகள் இயற்றிய நூல்களுட் பிரபுலிங்கலீலை யென்பது காப்பியத்தின் இயல்பு முழுதும் நிரம்பியதொன்று. இறைவனது அருளுருவாக விளங்கும் "அல்லமன்" என்னுந் தன்னிகரற்ற தலைவனுடைய அருள் விளையாடல்களை விரித்துரைப்பதாகிய இந்நூல் கன்னட நூலினின்று மொழி பெயர்த்து அமைக்கப்பட்டுளது. வீரசைவ சமயத்தின் தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டு இக்காப்பியத்தின் வரலாறு அமைந்து செல்கிறது. காப்பிய நலனுங் கற்பனைத்திறனும் ஒருங்கமைந்த இந்நூலின் முதற்பகுதி சென்னைப் பல்கலைக்கழக வித்துவான் தேர்வுக்குப் பாடமாக அமைந்துளது. மயிலம் அருட்டிரு, சிவஞான பாலைய சுவாமிகள் தமிழ்க் கல்லூரித் தலைவராகிய திருவாளர். சி. துரைசாமி ஐயரவர்கள் மாணவர் நலங்கருதிப் பிரபுலிங்க லீலையிற் "பிரபுதேவர் வந்த கதி" வரையிலுள்ள பகுதிக்குச் சிறந்ததோர் உரையெழுதி வெளியிட்டுள்ளார்கள் இவ்வுரை முன்னிருந்த உரையாசிரியர்களில் ஒருவராகிய சரவணப்பெருமாளையர் உரையைப் பெரும்பாலுந் தழுவி மேலும் விளக்குவதாய் அமைந்திருக்கிறது. இது பதப்பொருளும் விசேடவுரையும் வேண்டுமிடங்களில் இன்றியமையாத இலக்கணக் குறிப்பும் அமையப்பெற்று விளங்குகிறது. இவ்வுரையாசிரியர் இலக்கிய இலக்கண நூல்களிலிருந்து சிறந்த மேற்கோள்களை எடுத்துக் காட்டி இந்நூலின் பொருள் நயங்களைப் பல இடங்களில் தெளிவுபடுத்துகின்றார். இந்நூலின் பாடப்பகுதியில் வந்த தருக்கம் சோதிடம் பற்றிய குறிப்புக்களை இவ்வுரையின்கண் நன்கு விளக்குகின்றார். இவ்வுரையில் மேலும் விளக்கம் பெறவேண்டிய இடங்கள் சில உள. சில இடங்களிற் புராண வரலாறுகள் உரிய முறையிலன்றிக் கற்பனையால் விளக்கப்படுகின்றன. அச்சுப்பிழைகளும் மலிந்துள்ளன. இவை யாவும் அடுத்த பதிப்பில் திருத்தம் பெறுமென நம்புகின்றேன். வீர சைவ சமயத்தின் கருத்துக்கள் நன்கு விளங்குமாறு இந்நூற்கு உரையெழுதிய திருவாளர் சி. துரைசாமி ஐயரவர்கள் இந்நூலின் எஞ்சிய பகுதிக்கும் தெளிவுரையெழுதி வெளிப்படுத்துவார்கள் என எதிர்பார்ப்போமாக.

அண்ணாமலைநகர், 
1—9—50.

**அ. சிதம்பரநாதன்.**

உ

முருகன் துணை

மயிலம் - சி. பா. சு. தமிழ்க்கல்லூரி விரிவுரையாளன்

சு. குமாரஸ்வாமி ஆச்சாரி B. O. L., எழுதிய

# முன்னுரை

'பிரபுலிங்க லீலை'யென்னும் இந்நூல் காப்பிய நலன்கனியப் பெற்றது; கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் வளர்ச்சி யடைந்த வீர சைவ மதக்கொள்கைகளை விளக்குவது; இம்மத வளர்ச்சிக்குக் காரணர்களான பெரியார்களின் வரலாற்றைக் கூறுவது; வடமொழியில் வான்மீகி எழுதிய இராமாயணம் தமிழில் கம்பனால் தோற்றம் பெற்றதுபோல் கன்னட மொழியில் எழுந்த இந்நூல் கற்பனைக் களஞ்சியமும் கவி சார்வ பௌமருமாகிய சிவப்பிரகாச சுவாமிகளால் தமிழில் தோன்றியது. சமய குரவர்களது வரலாற்றினைக் கூறும் நூலெனினும் வித்துவான் தேர்வுக்குப் பாடமாக அமைந்துள்ள இந்நூற் பகுதி மதத்தின் அடிப்படையை உருவகப்படுத்திக் கூறுவதாகும். 'மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாதது இவ்வடிப் படை' யென்பதைத் தர்க்கமுறையில் தமிழ் நலனும் காப்பிய நலனும் கனியக் கூறும் முறை அறிந்தின்புறுதற்குரியதாம். ஆதலின் இச் சிறந்த பகுதிக்கு விளக்கமான உரை இன்றி யமையாததுதானே!

எனது நண்பராகிய வித்துவான், உயர்திரு, சி. துரைசாமி ஐயர் அவர்கள் இலக்கியச் சுவையொடு மதக் கருத்துகளையும் இந்நூலினைக் கற்பார் தெள்ளிதினுணருமாறு விளக்கம் அமைத்தது மாத்திரமல்ல, தேர்வுக்கெனப்பயிலும் மாணவர் களுக்கும் பயன்படுமாறும் அமைத்திருக்கின்றார். வீர சைவ மதக்கருத்துக்களை விளக்கும் ஏனைய நூற்களுக்கும் இவ்வாறு எளிய முறையில் தெளிவான விளக்கம் எழுதியுதவுவாரென நம்புகின்றனன். வீர சைவ மதம் (வசவேசரது கொள்கைகள்) பரவுமாயின் இதுவரையிலும் இருந்த இருக்கிற சமயப் பூசல்க ளெல்லாம் இல்லாதொழியுமன்றோ!

தழைக வீர சைவம்!

மயிலம்,
2—9—50.

இங்ஙன்,
சு. குமாரஸ்வாமி.

# பிரபு லிங்க லீலை கதைச் சுருக்கம்

கயிலை மலையில் இறைவன் இறைவியொடு பல தேவர் கூட்டங்களும் சூழ்ந்திருப்ப வீற்றிருக்கிறான். அவ்வமயம் இறைவி இங்குள்ள அனைவரும் பிறப்பில் உழலுவார்களா? அன்றிப் பிறவாத இன்பம் அடைவார்களா? என வினவினாள். இறைவன், எத்தகைய பெரியோராயினும் நாமம் வடிவம் இருக்கும் வரை பிறப்பிறப்புத் துன்பம் உண்டு; அத் துன்பத்தைக் கடக்க வேண்டுமானால் கரும பூமியில் சென்று மெய்ஞ்ஞான மார்க்கமாகப் பேரின்பம் அடையவேண்டும் என்றார். கேட்ட இறைவி, கரும பூமியில் ஞானத்தை உபதேசிப்பவன் யார் என்ன, இறைவன் எனது வடிவத்தான்; அல்லமன் என்னும் பெயரினன்; உனக்கு அகப்படான் என்றார். இறைவி கேட்டனள்; உளங்கொதித்தாள்; என் மாயைக்கு அகப்படாதவன் உண்டோ என்றாள். கோபிக்காதே, அவன் நின் மாயைக்கு அகப்படாதவன் என்றான் இறைவன். இறைவி வஞ்சினம் கூறுகிறாள்; அவனை எனது வல்லமையாற் பற்றி வருவேன் என்று. முக்குணங்களுள் தமோகுண வடிவ மாயையை விளிக்கிறாள், கட்டளை யிடுகிறாள் அல்லமனைப் பற்றிவரும்படி. ஒப்புக்கொள்கிறாள் மாயை; விரைந்து வருகிறாள் பூமிக்கு.

விளவலதேயம்; தலைநகரம் வனவசை என்பது. அங்நாட்டிற்கு அரசன் மமகாரன் என்பவன். மோகினி என்னும் பேரழகி அவன் மனைவி. இல்வாழ்க்கை சிறப்பாக நடைபெறுகிறது. மகவில்லை. வருந்துகிறார்கள். அரிய நோன்பு நோற்கிறார்கள். நோன்பு பலித்தது. மோகினி கருப்பமடைகிறாள். பெண் மகவைப் பெறுகிறாள். மாயை எனப் பெயர் சூட்டப்படுகிறாள். பேரழகோடு வளர்கிறாள். மங்கைப்பருவம் அடைகிறாள். மணம் செய்ய யோசிக்கிறார்கள். அவ்வமயம் வருகிறார் அரசனின் குலகுருவான சாந்தவாங்காரனென்பவர். பெண்ணின் இலக்கணத்தை ஆராய்ந்து அறிகிறார். உலக அரசிளங் குமாரர்கள் இவளுக்குத் தலைவனாகார்; எல்லாம் வல்ல இறைவனே தலைவனாவான் என்று சொல்லுகிறார். மாயைக்கு ஞான உபதேசம் செய்து அல்லூரிலுள்ள இறைவனைப் பூசனை செய்து வருமாறு கட்டளையிட்டுச் செலகிறார்.

மாயை அங்நகரிலுள்ள மதுகேசன் ஆலயத்திற்குத் தோழியர்களோடு செல்கிறாள். விதிப்படி மதுகேசனைப் பூசிக்கிறாள். பூசையின் பின்பு தான் கற்ற நாட்டியத்தினை இறைவன் முன்பு ஆடுகிறாள்.

அல்லமன் மத்தளம் அடிப்பவனாக ஆண்டுத் தோற்றுகிறான். மாயை ஆடுதற்கேற்ப மத்தளம் கொட்டுகிறான் அல்லமன். மாயை புது மத்தள ஓசையைக் கேட்கிறாள். நடனத்தில் மனம செல்லவில்லை; மத்தள ஓசை வந்த பக்கம் பார்க்கிறாள். அல்லமனைக் காண்கிறாள்; இல்லை அவன்

அழகைக் காண்கிறாள்; அழகில் ஈடுபடுகிறாள்; காதல் கொள்கிறாள்; மயங்குகிறாள். தோழியர் மூலம் அவன் வரலாற்றினை அறிகிறாள். தனது அரண்மனைக்கு அழைத்துவரும்படித் தோழியரை ஏவிவிட்டுச் செல்கிறாள். மாயையின் மயக்கத்தைத் தோழியர் உணருகிறார்கள்; அல்லமனிடம் உரையாடுகிறார்கள். அல்லமன் மாயைக்கு இணங்குபவன்போல நடிக்கிறான்; அவர்களுடன் அரண்மனைக்கு வருகிறான். மாலைக்காலம் வருகிறது; மாயை ஆற்றாமை மிகுகிறாள். இரவு வருகின்றது; திங்கள் முதலியவற்றைப் பழிக்கிறாள். தோழியர் உணர்ந்து அல்லமனை மாயையிருக்கும் அறையில் விடுகிறார்கள்.

அல்லமனும் மாயையும் இரவில் தனியறையில் விடப்படுகின்றனர். மாயை அல்லமனைத் தழுவ முற்படுகிறாள்; வடிவம் கையில் அகப்படவில்லை. பலதடவை முயற்சிக்கிறாள், வடிவம் காணப்படுகிறதேயன்றி அகப்படவில்லை. உண்மையை உருவெளி என்று நினைக்கிறாள். ஒரே மயக்கம்; முடிவில் சிறு உறக்கம். அதில் ஒரு கனவு; அல்லமனைத் தழுவுவதாக; விடிகிறது. மீண்டும் உண்மையாகத் தழுவுவோம் என்ற நம்பிக்கை; அந்நம்பிக்கையோடு பிரிகிறாள்.

இச்செய்தியைச் சிலரால் மோகினி அறிகிறாள். விரைந்தனள் மாயை இருக்குமிடத்திற்கு; சினந்தனள் மகளை; வருந்தினள் மாயை. கண்டனள் தாய்; இரக்கம் உற்றனள்; தோழியரைக் கோபித்தனள். சமாதானம் சொன்னார்கள் தோழியர்கள். மோகினி போனது போகட்டும் அரசர்க்கு யாழோர் மணம் உரியதுதானே? அம்மத்தளிகனையே மணக்கும்படி செய்வோம்; அதுவரையில் அரசன் அறியாமல் பாதுகாமின் என்று சொல்லிப் போனாள்.

இச் செய்திகளை அல்லமன் அறிகிறான். தோழியரை வினவுகிறான். அரண்மனையில் அரசன் தவிர ஏனையோர் அனைவருக்கும் நும் செய்தி தெரிந்துவிட்டது. சிலநாள் வரை தாங்கள் புறத்து இருப்பது நன்றாம் என்றனர் தோழியர். அல்லமன் குறிப்பால் தன் கருத்தைப் புலப்படுத்தி வெளிப்படையில் அவர்களுக்கு இணங்குபவனைப்போலப்பேசிப் பிரிகிறான். பிரிந்த அவன் வெளியே தான் இருக்குமிடத்தில் இருந்து மாயை நடிக்கும்போது மத்தளம் வாசிக்கும் தொழிலை மேற்கொண்டிருக்கிறான்.

## இதுவரை பாடப்பகுதி.

காலம் செல்லுகிறது; மாயை வருவதைக் காணோம்; இறைவி யோசிக்கிறாள்; கயிலையில் ராஸத குணவடிவமான விமலையை அனுப்புகிறாள். அவள் மாயையை நாடி வருகிறாள்; காணுகிறாள் மாயையை. தான் வந்த செய்தியையும் மாயையின் பூர்வ நிலையையும் விளம்புகிறாள். கேட்ட மாயை நினைவு கூர்கிறாள்; துணுக்கம் உறுகிறாள், வந்த செயலை மறந்தேனென்று. இறைவனால் சுட்டப்பட்டவன் மத்தள முழக்குபவனாக இருக்கலாமோ என ஐயமுறுகின்றாள். விமலையிடத்து உரைக்கின்றாள். அன்று ஆலயத்திற்கு

விமலேயும் செல்கிருள், வழக்கம்போல் எல்லாம் நடைபெறுகின்றன. மத்த ளம் வாசிப்பவனைக் காட்டுகிருள் மாயை. காண்கிருள் விமலே. இறைவ ஞல் சுட்டப்பட்டவனே என்கிருள். உடனே மாயை அன்றே பற்றி இழுத் துச் சென்று இறைவியிடம் விடுவதாக அணுகுகிருள் விமலேயோடு அல்ல மனே. அல்லமன் மறைகிருன்; தோன்றுகிருன்; மாயம் செய்கிருன். பின் செல்கின்றனர் நங்கையர்கள் இருவரும். ஊரைக் கடந்தனர். கானகம் சென்றனர். அவ்விடத்து அல்லமனுக்கும் மாயைக்கும் தடை விடைகள் நிகழ் கின்றன. முடிவில் மாயை அல்லமனைத் தழுவிப் பிடிக்க நெருங்குகிருள். கண்டது தோல்விதான். அல்லமனைக் காணவில்லே. விமலேயோடு கயிலே யடைந்தனள் மாயை. இறைவி பார்த்தனள். வந்த நிலேயிலிருந்தே தோல்வி என்பதை உணர்ந்தாள். நாணமுறுகின்றனள். என் செயலாம் என வங்கு கிருள். சாத்வீககுண வடிவத்தை அனுப்புகிருள். அக்கமாதேவி என்னும் பெயரோடு இங்குளாபுரியில் தோன்றுகிருள். நந்தி வசவன் என்னும் பெயரோடு கல்யாணபுரத்தில் அவதரிக்கிருர். அல்லமன் வசவன், அக்கமா தேவி, கொக்கிதேவர், சித்தராமர், கோரக்கர் முதலிய அடியார்களுக்கு வீரசைவ சமய ஞான போதனைசெய்து திருவிளையாடல் செய்துகொண் டிருக்கிருர் என்பதோடு அல்லமன் கதை முடிவடைகிறது. சுபம்.



# சிறப்புப்பாயிரம்

தண்ணிலவு புனைசடிலத் திறைபுகழல்
லமதேவன் சரிதத் தீம்பாற்
புண்ணியரஞ் செவிவாயிற் றமிழ்ச்சங்கத்
தான்முகந்து புகட்டி னானல்
எண்ணரிய புகழ்மலயத் திருந்தவனோர்
வடிவெடுத்தா னென்று கூறப்
பண்ணியமுத் தமிழ்க்கவிதை சிவப்பிரகா
சப்பெரும்பேர் படைத்து ளானே.

[இ—ள்.] எண் அரிய-எண்ணமுடியாத, புகழ்-புகழினை உடைய, மலயத்து-பொதிய மலையின் கண்ணே எழுந்தருளி யிருக்கின்ற, இருந்தவன்-பெரிய தவத்தோனாகிய அகத்திய முனிவன், ஓர் வடிவு எடுத்தான்-ஒரு திருவுருவங்கொண்டு வந்தான், என்று கூற-என்று கண்டோர் சொல்லும்படிக்கு, பண்ணிய-(தன்னாலே) செய்யப்பட்ட, முத்தமிழ்க்கவிதை-இயல் இசை நாடகம் என்னும் மூவகைத் தமிழ்ப் பாக்களையும் உடைய, சிவப்பிரகாசப் பெரும் பேர்-சிவப்பிரகாசனென்னும் பெரிய பெயரை, படைத்துளான்-பெற்றிருக்கின்றவன், தண் நிலவு-குளிர்ச்சிபொருந்திய திங்களை, புனை-தரித்த, சடிலத்து-சடையினையுடைய, இறை-கடவுளால், புகழ்-புகழப்படுகின்ற, அல்லமதேவன்-அல்லமதேவனது, சரிதத்தீம்பால்-வரலாறாகிய இனிய பாலை, புண்ணியர்-புண்ணியத்தை யுடையவரது, அம் செவிவாயில்-உள் செவியாகிய வாயினுள், தமிழ்ச் சங்கத்தால்-தமிழ்ச் செய்யுளாகிய சங்கினால், முகந்து-மொண்டு, புகட்டி னான்-(உண்ணும்படி) புகவிட்டான். [எ—று]

[கு-ரை.] அகம் செவி என்பது "அகமுனர்ச்செவிகைவரினிடையன கெடும்" என்ற விதிப்படிக் ககரம்கெட்டு அம் செவி என நின்றது. புகவிடு என்ற சொல் புகட்டு என மருவியது. எண்ணமுடியாத புகழ், விந்தம் அடக்கினது, கடல் குடித்தது தொல்காப்பியர் முதலிய பன்னிரண்டு மாணவர்களுக்குச் செந்தமிழ் இலக்கணம் சீர்படவுரைத்தது அகத்தியம் என்னும் ஐந்திலக்கண நூல் சொன்னது முதலியன. சரிதமாகிய பால் என்றும் செவியாகிய வாயென்றும் தமிழ்ச் செய்யுளாகிய சங்கமென்றும் உருவகப்படுத்தினமையின் உருவக அணி. ஆல், ஏ, அசைகள். இப்பாயிரம் செய்தவர் இன்னாரென அறியக்கூடவில்லை. இவர் தம்பிகள் இருவரில் ஒருவராக இருக்கக்கூடுமோ என ஐயம் உறலாம்.

உ
முருகன் துணை.
ஸ்ரீமத் சிவஞான பாலய தேசிகர் திருவடி வாழ்க!

# முன்னுரை

புனையெழில் வடிவினுள்ளோர் பொதுமகட் கண்ட மைந்தர்
மனமெனப் புலவர்நெஞ்சம் மருளும் இன்தமிழ்ப் பாமாலை
சினவிடை யவர்க்கே சாற்றும் சிவப்பிரகாச னென்னும்
முனைவன் எம்அடிகள்பாத முளரிகள் சென்னி சேர்ப்பாம்,

1. அமிழ்தினும் இனிய தமிழ் மொழியினைப் பண்புற வளர்த்த செந்தமிழ் நூல்கள், சங்க மருவிய புலவர்களால் பாடப்பெற்றனவும், இடைப்பட்ட நாயன்மார்கள், ஆழவார்கள் முதலியோரால் பாடப்பெற்றனவும், பிற்பட்ட கம்பர் முதலியோரால் பாடப்பெற்றனவும் ஆம். காப்பியங்கள் என்னும் பெயருடன் சங்க காலத்துத் தோன்றியனவேயன்றித் தண்டியாரால் கூறப்பட்ட பெருங்காப்பியம் சிறுகாப்பியம் என்னும் இலக்கணங்களைத் தம்முட்கொண்டு, பிற்பட்ட காலத்தே பல காவியங்களும் எழுந்தன. அவற்றுள் பிரபுலிங்கலீலை என்பதும் ஒன்று. இந்நூல் தோன்றிய காலம் பதினேழாம் நூற்றுண்டாகும்.

2. பிரபுலிங்கலீலை என்பது எல்லாமாய் அல்லவுமாய் இருக்கும் தன்மையையுடைய ஆன்மாவின் திருவிளையாடல் என்று பொருள்படும். அல்லமாப்பிரபு என்னும் இறைவடிவத்தைப் பாட்டுடைத் தலைவனுகக் கொண்டு, இருபத்தைந்து பிரிவுகளாக, விருத்தப்பாக்களால் பாடப்பட்டுள்ள திந்நூல். கன்னடம், தெலுங்கு, சமஸ்கிருதம் முதலிய மொழிகளில் இதே பெயரோடு இந்நூல் செய்யப்பட்டுள்ளது. இந்நூலாசிரியர் கன்னடத்தினின்றும் செந்தமிழ் மொழியில் இந்நூலை ஆக்கித்தந்தனர்.

3. நூலாசிரியர் வரலாறு:—

சான்றோர் பலரை ஈன்றுதவிய தொண்டைமண்டலத்திலே காஞ்சிபுரத்திலே சைவ வேளாளருக்குத் தீட்சா குருவாக விளங்கிய குமாரசாமி தேசிகர் என்பவருக்கு அருணைவள்ளல் அருளால் பிறந்த மூன்று புதல்வர்களில் மூத்தவராவர் நூலாசிரியராகிய சிவப்பிரகாச சுவாமிகள். குமாரசாமி தேசிகர் என்பவர் அருணைக்குத் திருக்கார்த்திகைத் தீப தரிசனத்திற்குச் செல்லுங்கால் தான் பூசை செய்துவரும் உடையவரை வழியில் பூசைசெய்த இடத்தில் பெட்டகத்தோடு மறந்துவைத்து, அருணைசென்று நினைத்து எடுத்துவருவான்வேண்டித் தக்கவர்களை அனுப்பி, அன்றிரவு பூசையின்மையில் யாதொன்றும் உண்ணுது உறங்கினர். கனவில் அருணைவள்ளல் தோன்றி இலிங்கதாரணம் செய்துகொண்டு, வீரசைவ மதத்தைத் தழுவும்

படிக்கூறி, அதற்காக ஒரு குருவினையும் காட்டிச் சென்றதோடு, அந்தக் குருவிற்கும் இவர் வரலாற்றைக் கனவில்கூறி, இலிங்கதாரணம் செய்விக்கப் பண்ணி, மறைந்தார். அவ்வாறே குமாரசாமி தேசிகர் இலிங்கதாரணம் செய்துகொண்டு வீரசைவ சமயத்தைச் சார்ந்து மீண்டும் காஞ்சிக்குச்சென்று சீடர்களுக்கு உபதேசம் செய்து வாழ்ந்தனர். பின்னர் சிவப்பிரகாசர் முதலிய மூவரும், ஞானம்பிகை என்னும் பெண்ணும் தோன்றியபின்னர் சின்னாட்களில், தேசிகரும் அவரது மனைக்கிழத்தியும் இட்டலிங்க பரசிவத்திற் கலந்தருளினர். பின்னர் சிவப்பிரகாசர் தங்கை தம்பியர்களுடன் அருணைபோந்து சோணசைல மாலை பாடி, மலை வலம் வந்து இறைவனை வழிபட்டுச் சின்னாள் தங்கி, இலக்கணங் கற்பான்வேண்டித் தென்றிசை நோக்கிப் போந்தனர். வழியில் துறைமங்கலம் என்னும் ஊரில் இலிங்க பூசைக்காகத் தங்கி இருக்கும்போது அங்கு குறுநில மன்னராக விளங்கிய இலிங்கா ரெட்டியார் மகனர் அண்ணாமலை ரெட்டியார் அறிந்து சிவப்பிரகாச சுவாமிகள் பெருமை முதலியவற்றைக்கண்டு அங்கு ஓர் மடம் கட்டுவித்துப், பலநாள் தங்கச்செய்து சன்மார்க்கபோதம் பெறுவாராயினர்.

பலநாள் சென்றபின் சுவாமிகள் தங்கருத்தை ரெட்டியாரிடம் அறிவித்து மீண்டும் வருவதாகக்கூறி தென்றிசை நோக்கிச் சென்று திருநெல்வேலியைத் தம்பியரோடு அடைந்தனர்.

அங்கு, சிந்து பூந்துறையில் வெள்ளியம்பலத் தம்பிரான் என்னும் மாபெரும் புலவரைக்கண்டு, தங்கள் வேண்டுகோளை விளம்பினர். அதனைக் கேட்ட தம்பிரான் அவர்கள் 'இலக்கியப் பயிற்சி யுண்டோ? இருக்குமாயின், முதலும் இறுதியும் கு என்று வரவும் இடையில் ஊருடையான் என்று வரவும் ஓர் வெண்பா பாடுக' என்றனர். உடனே சிவப்பிரகாச சுவாமிகள்,

குடக்கோடு வானெயிறு கொண்டார்க்குக் கேழன்
முடக்கோடு முன்ன மணி வார்க்கு—வடக்கோடு
தேருடையான் தெவ்வுக்குத் தில்லைதோல் மேற்கொள்ளல்
ஊருடையான் என்னு முலகு.

என்று பாடினர்.

அதனைக்கேட்ட தம்பிரான் "வடக்கோடு தேருடையான்" என்ற சொற்றொடரைப் பெரிதும் பாராட்டிச் சுவாமிகளை அருகிருத்தி அவரது தம்பியர்களுக்கு ஐந்திலக்கணங்களையும், ஐயந்திரிபற பதினைந்து நாட்களுள் கற்பித்தனர்.

சுவாமிகள் பின்பு குருதக்கணை கொடுக்க விரும்பியதை யறிந்த தம்பிரான் அதனை மறுத்து, திருச்செந்தூரில் செருக்குற்றிருக்கும் ஓர் புலவனை அடக்கவேண்டுமென்று அறிவித்தனர். அக்கட்டளையை ஏற்றுக்கொண்ட சுவாமிகள் தம்பியரோடு திருச்செந்தூரை யடைந்து முருகனை வணங்கி அப்புலவனோடு அங்குள்ளோர் அறிய வாதுசெய்து நிரோட்டக யமக அந்தாதி

(இதழகலந்தாதி) பாடி செருக்கை அடக்கிச் சிந்து பூந்துறைக்கு அழைத்து வந்து தம்பிரான் அவர்களை வணங்கும்படிச் செய்வித்துத் தம்பிரான் அவர்கள் உத்திரவைப் பெற்று வடதிசை நோக்கித் திரும்பினர்.

திரும்பின சுவாமிகள் தம்பியரோடு மீண்டும் துறைமங்கலம் வந்து அங்கிருந்து பதின்மூன்று கல் தொலைவிலுள்ள வெங்கை நகரில், அண்ணாமலை ரெட்டியாரின் வேண்டுகோளுக்கு இணங்கி, அவ்வூரில் அவரால் அமைக்கப்பட்ட மடத்தில், பலநாள் தங்கியிருந்து தம்பியர் இருவருக்கும் திருமணம் முடித்தனர். அப்போது அங்குள்ள இறைவனைப்பற்றித் திருவெங்கை யுலா, திருவெங்கைக் கலம்பகம் திருவெங்கைக் கோவை, திருவெங்கை யலங்காரம் ஆகிய நூல்களைப் பாடியருளினார். ஆண்டு அவர் நிகழ்த்திய அருஞ்செயல்கள் சில.

பிறகு ரெட்டியாரிடம் பிரிதற்கரிதாகப் பிரிந்து திருமுதுகுன்றம் வந்து சிதம்பர பூபதியால் அமைக்கப்பெற்ற திருமடத்தில் தங்கியிருந்து இறை வழிபாடு செய்து வருவாராயினர். அதுகாலை பழமலை யந்தாதி, பெரிய நாயகி யம்மை கட்டளைக் கலித்துறை, பெரியநாயகி யம்மை நெடுவிருத்தம், பிட்சாடன நவமணி மாலை முதலிய நூல்களை இறைவன் சம்பந்தமாக இயற்றியும், பிரபு லிங்க லீலையைப் பாடியருளியும் தங்கியிருந்தனர். அக்காலத்து தங்கை ஞானம்பிகையை சாந்தலிங்க சுவாமிகளுக்குத் திருமணம் செய்வித்தனர்.

பின்னர் தில்லை முதலிய தலங்களைத் தொழுவான் விரும்பி, சாந்தலிங்க சுவாமிகளோடு, தில்லை முதலிய தலங்களுக்குச் சென்று வணங்கி, காஞ்சிபுரம் செல்வான் வேண்டி புதுவை மார்க்கமாக புதுவையைக் கடந்து வடக்கே சென்றவர், அங்குள்ள பொம்மபுரம் திருமடத்தைக் கண்டனர். அப்போது சாந்தலிங்க சுவாமிகள் அம்மடத்தில் எழுந்தருளியிருக்கும், இரண்டாம் பட்டம் சிவஞான சுவாமிகள் பெருமையைக்கூறி, அவர்மீது நூல்செய்து வணங்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். சிவப்பிரகாச சுவாமிகள் அதற்குடன்படாது யான் நரரைப் பாடுவதில்லை என்று மறுத்துக் கூறி, அவ்வூரைக் கடந்து அடுத்த ஊரில் சென்று தங்கினர். அன்றிரவு, முருகன் சுவாமிகள் கனவில் தோன்றி "யானும் சிவஞானியும் வேறன்று, அதனால் இவ்விடுதி மலர்களைக்கொண்டு மாலைக் கட்டி வருக" என்று மலரளித்து மறைந்தனர். விழித்தெழுந்த சுவாமிகள், சாந்தலிங்க சுவாமிகளோடு கண்ட கனவினைக்கூறி, நெஞ்சுவிடு தூது என்னும் நூலினைப்பாடி மடத்திற்குத் திரும்பிவந்து சிவஞான சுவாமிகளை வணங்கி, நூலை ஒப்படைத்து, ஞானோபதேசம்பெற்றுச், சிலநாள் அங்கேயே குருநாதனோடு அளவளாவியிருந்தனர்,

சிவப்பிரகாச சுவாமிகள் சிலநாள் கழித்து குருநாதனிடம் விடைபெற்று காஞ்சி முதலிய நகரங்களுக்குச் சென்று, மீண்டும் வந்து பொம்மபுர மடத்துக் கிளை மடங்களுள் ஒன்றாகிய நல்லாற்றூர் திருமடத்தில் தங்கியிருந்தனர்.

அப்போது சிவஞான பாலய சுவாமிகள் தாலாட்டு, சிவஞான பாலய சுவாமிகள் பிள்ளைத்தமிழ், சிவஞான பாலய சுவாமிகள் திருப்பள்ளியெழுச்சி ஆகிய நூல்களைப் பாடிப் பொம்மபுரம்சென்று குருநாதர் முன்னிலையில் அரங்கேற்றி, மீண்டு நல்லாற்றூர் மடத்திற்கு வந்து தங்கியிருந்தனர்.

பின்பு ஓர் நாள் வைகாசி விசாகத்தில் தனது குருநாதன் சிவலிங்க வடிவமானதையறிந்து வருத்தமுற்றுத் தான் பாடிய, சிவஞான பாலய சுவாமிகள் கலம்பகத்தைப் பொம்மபுரத்தில் குருநாதரின் சமாதி முன்பு படித்து மீண்டு நல்லாற்றூரில் வந்து தங்கி ஆன்ம விசாரணைசெய்து தமது முப்பத்திரண்டாம் வயதில் இட்டலிங்க பரசிவத்தில் கலந்தருளினர். வேலையர், கருணைச் சிவப்பிரகாச ஐயர் இருவரும் இவரது தம்பியராவர்.

4. இவர் இயற்றிய வேறு நூல்களாவன :—

1. சோணசைலமாலை.
2. திருச்செந்திலந்தாதி.
3. திருவெங்கைக்கோவை.
4. திருவெங்கைக்கலம்பகம்.
5. திருவெங்கையுலா.
6. திருவெங்கை அலங்காரம்.
7. சிவப்பிரகாச விகாசம்.
8. தருக்க பரிபாஷை.
9. நால்வர் நான்மணி மாலை.
10. சதமணிமாலை.
11. சிவஞான பாலய சுவாமிகள் நெஞ்சுவிடு தூது.
12. ,, தாலாட்டு.
13. ,, பிள்ளைத்தமிழ்.
14. ,, கலம்பகம்.
15. ,, திருப்பள்ளியெழுச்சி.
16. திருக்கூவப் புராணம்.
17. வேதாந்த சூடாமணி.
18. சித்தாந்த சிகாமணி.
19. பழமலையந்தாதி.
20. பிட்சாடன நவமணிமாலை.
21. பெரியநாயகியம்மை கட்டளைக் கலித்துறை.
22. ,, நெடுவிருத்தம்.
23. இயேசு மத நிராகரணம்.
24. நன்னெறி

25. சிவநாம மகிமை.

26. இட்டலிங்க அபிடேகமாலை.

27. நெடுங்கழிநெடில்

28. குறுங்கழிநெடில்.

29. நிரஞ்சனமாலை.

30. கைத்தலமாலை.

31. சீகாளத்திப் புராணம் இடைப்பகுதி என்பனவாகும். இவற்றுள் திருவெங்கையலங்காரம், தலவெண்பா, இயேசு மதநிராகரணத்தில் இரண்டு செய்யுள் தவிர ஏனையவை கிடைக்கப்பெறவில்லை. ஏனைய நூல்கள் தனித்தனியாகவும் தொகுதியாகவும் அச்சாகி வெளிவந்துள்ளன.

5. இந்நூலாசிரியர் காலம் :—

"பார்கெழு சகாப்த மூவைந் நூற்றெழுபானுன்காவதாகிய கரநாமங் கொள்" என்று பிரபுலிங்கலீலை இறுதிப்பகுதியில் இவரே கூறியிருப்பதால் கி. பி. 1652-ம் யாண்டு இந்நூல் அரங்கேறிய காலம் என்று தெரிகிறது. ஆகையால், இவரது காலமும் 17-ம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்று தெரிகிறது.

6. நூலாசிரியர் சமயம் :—

வீரசைவர்கள் கையில் இலிங்கத்தை வைத்துப் பூசை செய்தல் மரபு. இதனைக் "கரதலத்தில் மேவா அமர்ந்த மாமணியைத் தொழுது" என்பதாலும், வீரசைவ சமயகுரவர்களாகிய வசவேசர், சென்னவசவேசர் மடிவால மாச்சையர்போன்ற பெரியார்களைத் துதித்து இருப்பதாலும், வீரசைவ சமய நூலாகிய சித்தாந்த சிகாமணியை இயற்றியிருப்பதாலும் இவர் வீரசைவ சமயத்தவர் என்பது பெறப்படுகிறது. ஆயினும் சைவ சமய குரவர் துதிகளும், சதமணிமாலை, சிவப்பிரகாச விகாசம் ஆகிய சைவ சித்தாந்த நூல்களும், வேதாந்த சூடாமணி முதலிய வேதாந்த நூல்களும் செய்திருப்பதனால் மேற்கண்ட சமயங்களில் வெறுப்பில்லாததோடு, பற்றுள்ளவரென்பதும் பெறப்படுகிறது.

7. நூற்பெருமை முதலியன :—

இந்நூலை இவ்வாசிரியர் திருமுதுகுன்றத்திலிருந்து செய்தனரென்றும், இதனைப் படித்து மகிழ்ந்த கன்னடப்புலவரொருவர் தங்கள் மொழியில் உள்ளதைக் காட்டிலும் இந்நூல் மிகவும் நயமுடையதாக இருக்கக்கண்டு, அவர் அறியாமல் எடுத்துக்கொண்டுபோய் மணிமுத்தாற்றின் மணலில் புதைத்துவிட்டனரென்றும், சுவாமிகள் நூலைக்காணாது வருந்தி, பழமலைநாதரிடம் பலநாள் முறையிட்டனரென்றும், பின்பு ஒருநாள், ஆற்றில் பல் விளக்கிய குச்சியினை மணலில் புதைப்பான்வேண்டி தற்செயலாய் ஓரிடத்தைத் தோண்ட, அவ்விடத்தில் இந்நூல் மீண்டும் கிடைத்தது என்றும்

உ
குகமயம்.

# பிரபு லிங்க லீலை

## மூலமும் - உரையும்

சிவப்பிரகாசச் செம்மலர் நோன்றுள்
பவப்பிணியகற்றப் பற்றுவம் யாமே.

### விநாயகர் காப்பு

சுரர் குலாதிபன் தூய்மலர் நந்தனம்
பெருக வார்கடற் பெய்த வயிற்றினேன்
கரக நீரைக் கவிழ்த்த மதகரி
சரண நாளுந் தலைக்கணி யாக்குவாம்.

[இதன் பொருள்.] சுரர் - தேவர்களது, குலம் - கூட்டத்திற்கு, அதிபன் - தலைவனான இந்திரனுடைய, தூய்மலர் - நன்மையமைந்த மலர்களையுடைய, நந்தனம் - பூந்தோட்டம், பெருக - வளமெய்திச்சிறக்க, ஆர்கடல் - ஒலிமிக்க கடலினை, பெய்த - சிறு நீராகப்பெய்த, வயிற்றினேன் - வயிற்றையுடையவனாகிய அகத்தியனது, கரகநீரை - கமண்டலத்திலுள்ள தண்ணீரை, கவிழ்த்த - சிந்தும்படி கவிழ்த்துவிட்ட, மதகரி - யானைமுகத்தையுடைய விநாயகப் பெருமானின், சரணம் - திருவடிகளை, நாளும் - எப்பொழுதும், தலைக்கு - நமது சிரத்துக்கு, அணி ஆக்குவாம் - அலங்காரமாகப் புனைந்துகொள்ளுவாம், [என்றவாறு.]

[குறிப்புரை] அதிபனது நந்தனம் பெருகும் பொருட்டுக் கடலைச் சிறு நீராகக் கொண்டுள்ள அகத்தியனது கமண்டல தீர்த்தத்தைக் கவிழ்த்த மதகரி திருவடியைத் தலையில் சூடிக்கொள்ளுவாம்.

1. இந்திரன் விருத்திராசுரனைக் கொல்லும்பொருட்டுச் செய்த போரில் விருத்திரன் கடலுட்புக்கு ஒளித்த காலை இந்திரன் வேண்டுகோளின்படி கடல்நீரை அகத்தியன் குடித்துவிட ஆண்டு வெளிப்பட்ட விருத்திரனைக் கொன்றுனென்பதும் பின்னர் அகத்தியனுண்ட நீரைச் சிறு நீராகப் பெய்தானென்பதும் புராணக் கதை.

2. இந்திரன் தோணிபுரத்து நந்தவன மமைத்து இறைவனை வழி பட்டு வருங்கால் நீர் இல்லாது நந்தவனம் வாட, இந்திரன் கணபதியை வேண்டிக்கொண்டான். அதன்பொருட்டு அகத்தியன், இறைவன் ஆணையின்படித் தென்னாட்டிற்குச் செல்லுங்கால் அவரால் அளிக்கப்பட்ட தீர்த்தத்தோடு சென்றனன். குடகுமலை அண்மையில் அதனைக் கீழே வைத்துவிட்டுச் சிறுகடன் முடித்தற்பொருட்டு விலகின காலத்து கணபதி காக வடிவத்தோடு சென்று அதைக் கவிழ்த்துவிட்டனன்; அந்நீரே 'காவேரி' எனப் பெயர் பெற்று வெள்ளம் மிகுவதாயிற்று; அதனால் மீண்டும் நந்தவனம் செழிப்புற்றது என்பது புராணக் கதை.

'மதகரியின் சரணம் தலைக்கணியாக்குவம்' என்பது தாள் + தலை என்பது ஒன்றித் தாடலை என நின்றாற்போல், ஒன்றுவது விடுதலை என்பதைக் குறிப்பாகக் காட்டினார். 'சரண்' என்ற சொல், வீரசைவர்கள் இன்றும் சாதாரணமாகப் பெரியோர்களைக் கண்டாலும், தொழுதாலும் சரணம் என்று சொல்லுகிற வழக்கத்தை நினைவூட்டுகின்றமையின் இவ்வாசிரியர் வீரசைவர் என்பதும், இந்நூலுட் பெறப்படுவனவெல்லாம் வீரசைவ சமயக் கருத்துக்கள் என்பதும் அறிதற்பாலது. ஆர்கடற்பெய்த வயிற்றினனாதலின் அவனது கரகநீரும் கடல்போல்பெருகும் என்பது தோன்ற நின்றதால், "ஆர்கடற்பெய்த வயிற்றினோன்" என்பது கருத்துடை யடைகொளியணி. எடுத்துக்கொண்ட நூல் இனிது முடிதற்பொருட்டுக் கணபதி வணக்கம் கூறுவது பிற்காலத்து வழக்கமாதலின் இவ்வாறு கூறினார்.

குலம் + அதிபன் என்னும் வடசொற்கள் மகரம் கெட்டு 'குல' என நின்று, நிலைமொழியீறு வருமொழி முதல்களிலுள்ள இரண்டு 'அ' கரம் கெட்டு, ஒரு 'ஆ' காரம் தோன்றி, 'குலாதிபன்' என நின்றது வடமொழிச் சந்தி. 'நந்தவனம்' என்பது 'நந்தனம்' என மருவியது இயல்பு வழக்கு. (1)

## முதலாவது

# துதிகதி

### சிவபெருமான்

பூவாய் நெடுங்கோட் டுறுபசுந்தேன்
கைகான் முடங்கு பொறியிலிதன்
நாவாய் ஒழுகிற்றென வுலகம்
அளந்த மாலும் நான்முகனும்
காவாய் எனநின்றேத் தெடுப்பத்
தானே யுவந்தெங் கரதலத்தின்
மேவா வமர்ந்த மாமணியைத்
தொழுது வினைக்கு விடைகொடுப்பாம்.

[இ-ள்] பூவாய்-பூக்கள் வாய்க்கப்பெற்ற, நெடுங்கோட்டு-உயர்ந்த நீண்ட கிளைகளில், உறுபசுந்தேன்-பொருந்திய பசிய தேனானது, கைகால் முடங்கு பொறியிலிதன்-கையும் காலும் முடமாகிப்போன கட்பொறியற்ற ஒருவன், நாவாய் ஒழுகிற்று என - நாவினிடத்து ஒழுகின தன்மையைப்போல, உலகம் அளந்த மாலும்-உலகத்தைத் திருவிக்கிரம அவதாரங்கொண்டு அளந்த திருமாலும், நான்முகனும் - பிரமதேவனும், காவாய் எனநின்று ஏத்தி எடுப்ப-பாதுகாக்கவேண்டும் என்று வாழ்த்தி நிற்ப, (அவர்கட்கருளிச் செய்யாது) தானே உவந்து எம் கரதலத்தில்-தானே மகிழ்ந்து எமது கையின்கண், மேவா அமர்ந்த-மேவி விருப்புற்றுத் தங்கிய, மாமணியை - சிறந்த இட்டலிங்கப் பெருமானை, தொழுது-வணங்கி, வினைக்கு விடை கொடுப்பாம்- இருவினைகளும் நம்மினின்றும் நீங்கும்படி விடை கொடுத்து நீக்குவாம். [எ—று.]

[கு-ரை] கோடு என்பது மலையுச்சியுமாம். "குறுந்தாட் கூதளிர் ஆடிய நெடுவரைப் பெருந்தேன் கண்ட இருக்கை முடவன்" என்ற குறுந் தொகைப் பாட்டின் கருத்தை முன்னடி ஞாபகப்படுத்துகிறது.

தேன் பெருக்கெடுத்து வழியினும் உண்ணமுடியாது, சொட்டுச் சொட் டாகக் காலந் தாழ்த்து வீழினும் கழுத்துவலி தெரியுமேயன்றி வேண்டிய வளவு பயன்பெற முடியாது என்பது கருதி 'ஒழுகிற்று' என்றார். பொறி என்பது ஈண்டுக் கட்பொறியை; முடவனே யாயினும் கட்பொறி யுடைய வனாயின் நகர்ந்து தேனை நோக்கி அண்ணாந்து வாயைத் திறந்து தேனைச் சுவைக்கமுடியும்; கட்பொறி யற்றவனாயின் அதுவும் முடியாது ஆதலின் கட்பொறியற்றவன் நினையாதபோது அண்ணாத்தல் செய்து பெருமூச்சு வாய் வழியாக விடுங்காலத்து நாவில் விழுந்தால் அது பேராச்சரியமன்றோ! ஆதலின் ஈண்டுப்'பொறி' என்பதற்குக் 'கட்பொறி' எனப் பொருள் கூறு தலே சாலச் சிறந்தது. ஒழுகுதல்-மெல்லிய தாரையாக இடையறாது வீழ்தல்.

உலகம் அளந்த நெடுமாலாக இருப்பினும் அவரால் காணப்படவில்லை என்பதால் உலகத்திற்கு அப்புறப்பட்டவன் என்பதூஉம், நான்கு முகங்களி னாலும் ஒரேவமைத்து நான்கு திசைகளையும் பார்க்கவல்லனாயினும் ஊனக் கண்ணுக்கு அகப்படான் ஞானமூர்த்தி என்பதூஉம், அன்புடையாரகத்துத் தானே வெளிப்படுவான் என்பதூஉம் பின்னிரண்டடிகளின் கருத்து. வீர சைவர்கள் இட்டலிங்கப் பெருமானைக் கையில் வைத்துப் பூசனை செய்வது வழக்கம் என்பதனைக் "கரதலத்தமர்ந்த மணி" என்பதால் விளக்குகிறார், "இருள்சேர் இருவினை" யென்றார்; நல்வினையும் பிறத்தற்கேதுவாகலின்" என்ற பரிமேலழகர் உரையை உட்கொண்டு, நல்வினை, தீவினை இரண்டை யும் ஈண்டுப் பொதுவாக 'வினை' யென்றார். "தொழுது வினைக்கு விடை

கொடுப்பாம்'' என்றார்; இறைவனைத் தொழுதமட்டிலேயே விலகி நிற்கின்ற வினை 'சென்று வருகிறேன் இனி இங்கு வேலை இன்று' என்று உத்திரவு கேட்பதாகவும், அதனால் 'போய்விட்டு வா' என்று கட்டளை இடுவதைப் போலவும் பொருள்படும் பொருட்டு.

உயரத்திலுள்ள தேனைக் கைக்கொள்ள முடியாதபடி காலும் கையும் அற்றுப்போன ஒரு முடவனுக்குத் தேனானது நாவின்கண் விழுந்தாற்போல, ஞான வடிவாம் இறைவனை அடையமுடியாத என்னுடைய கரத்தில் 'உள்ளங்கை நெல்லி' என இறைவன் தங்கினன் என்பது **உவமையணி.** பொருளுக்கேற்ற ''உலகம் அளந்த மாலும் நான்முகனும் காவாய் என நின்றேத்தெடுப்ப'' என்ற அடைமொழியை உவமைக்கு ஏற்பக் கொள்ளுங்கால், வரையினும் மரத்தினும் ஏறிப் பயில்கின்றவரும், எல்லா உறுப்புக்களும் குறைவறப் பெற்றவரும் ஆகியோராலே பெற முடியாத 'தேன்' என்றும், ''கைகால் முடக்கு பொறியிலி'' என்ற உவமைக்கேற்ற அடையால் இறைவனைக் காண்டற்குரிய ஞானக்கண்ணும் பிறவும் அற்றவன் என்று பொருட்கண்ணும் கூட்டிக்கொள்க.

''தானே வந்து'' எனவும் பாடம். (2)

## உமாதேவியார்

ஆதிபகவன் தனதூடல்
தணிப்பான் பணிய வவ்விறைவன்
பாதமிறைஞ்சு மதற்கு நெற்றிப்
பகையு மல்குற் பகையுமாஞ்
சீதமதியு மரவும்விழுஞ்
செயற்கு வகை செயாமல்அலை
மாதுபணியு மதற்குமன
மகிழு முமையை வணங்குவாம்.

[இ-ள்,] ஆதிபகவன்-இறைவன், தனது ஊடல்-தனது (உமாதேவியினது) ஊடலைத், தணிப்பான்-போக்குவிக்கும் பொருட்டு, பணிய-வணங்க, அவ்விறைவன் பாதம் இறைஞ்சுதற்கும்-அப்பெருமான் தனது மலரடியை வணங்குதற்கும், நெற்றிப்பகை ஆம் சீதமதியும்-நெற்றிக்குப் பகையான குளிர்ந்த திங்களும், அல்குற் பகை ஆம் அரவும்-அல்குலுக்குப் பகையான பாம்பும், விழும்செயற்கும்-வணங்கும் செயலுக்கும், உவகை செயாமல்-மகிழ்ச்சியடையாமல், அலைமாது-கங்காதேவி, பணியும் அதற்கு-வணங்குகின்ற செயலுக்கு, மனமகிழும்-உளமகிழ்கின்ற, உமையை-தேவியாரை, வணங்குவாம்-பணிவாம்.

[எ-று.]

[கு-ரை] பெண்கட்குப் பகைவர் யாவரினும் தனது தலைவனால் விரும்பப் பட்டவளிடத்தே அதிக பகைமை உண்டென்பதும், அது காரணமாக வந்த ஊடற்காலத்தில் ஏனைப்பகைஞர் பணிவிற் கெல்லாம் மகிழாத உமை கங்காதேவியின் பணிவால் மகிழ்ந்தனள் என்ப ஆசிரியர். ஊடற்காலத்து, "கிழவோன் பணிவுங் கிழத்தி யுயர்வும், நிலையுங் காலைப் புலவியுள் உரிய" என்ற உலகநடைக்கேற்ப இறைவன் ஈண்டு பணிந்தான் என்பர். 'அலை மாதுபணிய அதற்கு மகிழ்ந்தனள் உமை' என்பதால் அலைமாது உமைக்கு மாற்றாள் என்பது பெறப்பட்டது. ஊடலுக்குங் காரணம் அதுவே. மதி முதலியன தாமாக வணங்கிலவேனும், கடவுள் முடியின்மேலுள்ளமை பற்றி அவன் முடியிலிருந்து அடியின் கண்ணுறுதலின் வணங்கினவாகக் கூறப் பட்டன. இறைவன் பணியவே, பணியக் கருத்திலாத இறைவன் முடிமே லுள்ள, அரவு, மதி முதலியவற்றோடு கங்கையும் கீழே வணங்கினளாதலின் உமாதேவிக்கு ஊடல் தீர்ந்தது. ஆகவே கடவுள்மேல் ஏற்பட்ட ஊடல் மற்றொரு காரண வுதவியால் எளிதாக முடிதலின். சமாகித அணி. நெற்றிப்பகை மதி, அல்குற் பகை அரவு நிரல்நிறை அணி. "நிரல் நிறுத்தியற்றுதல் நிரல் நிறை அணியே" என்பது தண்டி. 'அரவு' என்பது இயற் பெயர் ஒழித்து அதனுடைய படத்திற்கு ஆயிற்று, ஆகுபெயர். 'அலை' என்பது நீருக்காதலான் ஆகுபெயர். 'ஆதிபகவன்' என்பது "அல் வழி இ ஐ முன்னராயின், இயல்பும் மிகலும் விகற்பமுமாகும்" என்ற விதி யின்படி, பண்புத்தொகைக்கண் மிகவேண்டும். ஆயினும் இது வடமொழிச் சந்தியாதலின், "இடையுரிவடசொலி னியம்பிய கொளாதவும், போலியும் மரூஉம் பொருந்தியவாற்றால், இயையப் புணர்த்தல் யாவர்க்கும் நெறியே" என்னும் புறனடைச் சூத்திரத்தினால் இயல்பாகப் புணர்ந்தது. (3)

## கணபதி

மார னெடுத்து வளைக்குமொரு
  கரும்பை யொடித்து மலர்சிதறி
நாரி யடுத்த வளிமாலை
  குலையத் துரந்து நயந்தோடி
வீர மனத்து வினைப்பாகர்
  குறிப்பி னொழுகி விளையாடும்
ஈர மதிச்செஞ் சடைக்களிநல்
  யானை யிணைத்தா ளேத்துவாம்.

[இ-ள்.] மாரன்-மன்மதனாலே, எடுத்து வளைக்கும்-எடுத்து வளைக்கப்பட்ட, ஒரு கரும்பை-ஒப்பற்ற கருப்பு வில்லாகிய கரும்பினை, ஒடித்து-, மலர்சிதறி-(அவ்வில்லின் எய்யப்படும்) அம்பு களாகிய மலர்களை இறைத்து, நாரியடுத்த-(அவ்வில்லிற்கு) நாணாகப்பொருந்திய, அளி மாலை - வண்டு ஒழுங்காகிய

கூட்டத்தை குலைய-கலைந்துபோக, துரந்து-துரத்தி, நயந்து-விரும்பி, ஓடி-விரைந்து சென்று, வீரமனத்து-வீரத்தன்மை பொருந்திய மனத்தையுடைய, வினைப்பாகர்-அஞ்சாமல் மனதைக்கொண்டு செய்யப்படும் தொழிலையுடையோரது, குறிப்பின் ஒழுகி-குறிப்பின்படி நடந்து, விளையாடும்-திருவிளையாடல் புரியாநின்ற, ஈரமதி-குளிர்ச்சி பொருந்திய பிறையைத்தாங்கிய, செஞ்சடை-செய்ய சடையையும், களி-மகிழ்ச்சியினையும் உடைய, நல்யானை-நல்ல யானையினது, இணைத்தாள்-இரண்டு திருவடிகளையும், ஏத்துவாம்-துதி செய்வாம். [எ—று.]

[கு-ரை.] கடவுள், முனிவர் முதலிய அனைவரையும் பெண்ணாசையின் உட்படுத்தி வெல்ல வல்லதாகலின் ஒரு கரும்பென்றார். ஆக்கத்தினும், அழிவினும் வேறுபடாது ஒரே தன்மையாக நிற்கும் மனத்தை 'வீரமனம்' என்றார். தின்னுதற்பொருட்டுக் கரும்பை யொடித்தலும், மலர்களைக் காணின் அதனை இறைத்தலும், மதமுண்ண வருகின்ற வண்டினைத் துரத்தலும், பாகர்குறிப்பின் வழி யொழுகுதலும் என யானையினது சாதித்தன்மை கூறப்பட்டுள்ளது கூர்ந்து கவனிக்கத்தக்கது. விநாயகர் மன்மதன் கரும்பை யொடித்தும், அம்பாகிய மலரைச் சிதறியும், நாணாகிய வண்டைத் துறந்தும், இருவினையொப்ப நோக்கும் பாகாது குறிப்பின் வழி நடப்பார் என்பதால் காமவேட்கையின் உட்படாதவர் என்பது பெறப்பட்டது. இஃது யானை முகக்கடவுளுக்கும், யானைக்கும் வேற்றுமை இருக்க, ஒற்றுமை கூறினமையின் உருவகவுயர்வு நவிற்சியணி. இது விநாயகருக்கும், யானைக்கும் சிலேடையாகப் பொருள் கூறப்படும்படி இருத்தலால் சிலேடையணி.
(4)

## முருகன்

பாகமொருபெண் குடியிருக்கும்
　　பரமனணியிற் பரித்தமணி
நாக நுழைவுற் றுடல்சுருண்டு
　　கிடந்து நகுவெண் டலைப்புழையிற்
போக மெல்லத் தலைநீட்டிப்
　　பார்த்து வாங்கப் போகுமொரு
தோகை மயில்வா கனப்பெருமாள்
　　துணைத்தாட் கமலந் தொழுதிடுவாம்.

[இ—ள்] பாகம்-பாதியுடம்பில், ஒரு பெண்-ஒப்பற்ற பார்வதியானவள், குடியிருக்கும்-நிலைத்திருக்கப்பெற்ற, பரமன்-கடவுளாலே, அணியில்-ஆபரணம்போல், பரித்த-தாங்கப்பட்ட, மணி-அரதனத்தையுடைய, நாகம்-பாம்பானது, நகு-சிரிக்கின்ற

வெண்தலை-வெண்மையான தலையினது, புழையில்-துளையில், நுழைவுற்று-நுழைந்து, உடல்-உடம்பானது, சுருண்டு கிடந்து-சுருட்டிக்கொண்டு (பதுங்கிக்) கிடந்து-, போக-(வெளியிற்) போகும் பொருட்டு, மெல்ல-மெள்ள (ஓசைப்படாது), தலை-தலையை, நீட்டிப்பார்த்து வாங்க-முருகன் வாகனமான மயில் இருக்கிறதா என்று பார்த்து மயில் இருப்பதைக்கண்டு உள்ளே அடக்கிக்கொள்ள, போகும்-அக்கடவுளிடத்தே செல்லாநின்ற, தோகை மயில் வாகனப்பெருமாள்-கலாபத்தினையுடைய மயிலை வாகனமாக உடைய முருகப்பெருமானது, துணைத்தாள் கமலம்-இரண்டுதாளாகிய தாமரை மலரை, தொழுதிடுவாம்-வணங்குவாம். [எ—று.]

[கு-ரை] இறைவனுடைய இளையபிள்ளையாதலின் முருகன் வாகனத்தோடு சென்றனன்; இறைவனைக் காணவரும் திருமால் வாகனத்தைக் கண்டு அஞ்சாத பாம்பு முருகன் ஊர்தியான மயிலைக்கண்டு அஞ்சுகிறது என்பதனால், முருகன் 'சுவாமிநாதன்' என்பதும் குறிப்பாகக் கொள்ளக்கிடக்கிறது. பாம்பு புழைக்குள் நுழைந்து கிடப்பது வழக்கமாதலின் இறைவன் உடலில் உள்ள தலைமாலையில் நுழைந்து சுருண்டு கிடந்ததெனவும். வெளியே செல்லவேண்டுமானால் விஷம் தன்னிடத்தில் உள்ள காரணத்தினால் விரோதிகள் உளரோ என்று பார்த்துப்போகிற வழக்கப்படி மெதுவாகப் பார்த்தபோது ஆண்டு முருகன் வாகனமான மயிலைக்கண்டு தலையை உள்ளே இழுத்துக்கொண்டது எனவும் கூறியது சாதித்தன்மையணி. தன்மையணியின் இலக்கணமாவது "எவ்வகைப் பொருளும் மெய்வகை விளக்கும் சொன்முறை தொடுப்பது தன்மையாகும்" என்பதாம். "நகு வெண்டலைப் புழையில் நுழைவுற்று உடல்சுருண்டு கிடந்துபோக" என்று மாற்றிக்கொள்க. (5)

## அல்லம தேவன்

கலையை மதிக்கும் புலவர்தமைச்
சித்தர் குழாத்தைக் கடவுளரை
நிலையை மதிக்கும் முனிவரரைத்
திசைமா முகனை நிரைவளையாச்
சிலையை மிதிக்கும் நெடியோனை
விழுங்கி யுமிழாத் திறன்மாயை
தலையை மிதிக்கும் அல்லமன்செங்
கமல மலர்தா டலைக்கணிவாம்.

[இ-ள்.] கலையை-அறுபத்துநான்கு கலைகளையும், மதிக்கும்-உணர்ந்து பாராட்டுகின்ற, புலவர்தமை—அறிவின்

மிக்காரையும், சித்தர் - மெய்யுணர்வினை யுணர்ந்தோரது, குழாத்தை - கூட்டத்தையும், கடவுளரை - தேவர்களையும், நிலையை-அழியாது முப்பொருளின் நிலைத்து நிற்கும் பொருளின் இயல்பினை, மதிக்கும்-ஆராய்கின்ற, முனிவரரை-பொய்ப்பொருளை வெறுத்தோர்களையும், திசைமாமுகனை-நான்கு திக்குகள் தோறும் தோற்றுகின்ற நான்கு முகங்களையுடைய பிரமனையும், நிரைவளையா-வரிசையாக அணிந்துள்ள வளையலோடு கூடிய கைகளையுடைய பெண் வடிவமாக உள்ள, சிலையை-கல்லை, மிதிக்கும்-திருவடியால் மிதிக்கின்ற, நெடியோனை - திருமாலையும், விழுங்கி - உட்கொண்டு, உமிழா - பின் அண்ணுத்தால் செய்து உமிழாத, திறல்மாயை-வலிமையையுடைய மாயையினது, தலையை மிதிக்கும்-தலையை மிதித்து நிற்கின்ற, அல்லமன்-அல்லம தேவனது, செங்கமல மலர்-செந்தாமரை மலர்போன்ற, தாள் - திருவடியைச், சிரத்து அணிவாம்-தலையில் அழகாகச் சூடுவாம். (எ—று.)

[கு—ரை.] கலை-அக்கர இலக்கணம் முதலாக அறுபத்துநான்கு தந்திர கலை, மந்திரகலை, உபதேசகலை என மூன்று. சித்தர்குழாம் என்றது சத்திய நாதர் முதல் ஒன்பதின்மரை. நிலையை என்பதற்குத் தத்துவம் இருபத்தைந்து நிற்கும் நிலையென்று கொள்ளலுமாம். மேற்சொன்ன மெலியோர்கள் அனைவரையும் தனு, கரண, புவன போகங்களாக மாயை விரிந்து நின்று தன்னுள் அகப்படுத்திக்கொண்டு நிற்றலால் "விழுங்கி உமிழாத்திறல்மாயை" என்றார். அல்லமன் மாயைக்குட்படாது கீழ்ப்படுத்தி நிற்றலால் தலையை மிதிக்கும் என்றார். இராமாவதாரத்தில் அகலிகைக்குக் கௌதமர் சாபத்தால் நேர்ந்த கல் வடிவத்தை மாற்றினமையின் 'சிலையை மிதிக்கும்' என்றார். திசைமுகன்-நாற்புறமும் நோக்கிய நான்கு முகங்களாலும் இறைவனை வழிபாடு செய்வதற்கு வேண்டிய கருவியிற் குறைவற்றவனாக இருந்தும் அது செய்யமாட்டாமையால் மாயையால் விழுங்கப்பட்டான் என்க. நிரைவளை-அன்மொழித்தொகை. "சிலையை மிதிக்கும் நெடியோன்" என்று இறந்த காலத்தை எதிர்காலமாகக் கூறப்பட்டது "விரைவினும் மிகவினும் தெளிவினும் இயல்பினும், பிறழவும் பெறூஉம் முக்காலமும் ஏற்புழி" என்னும் நூற்பாவின்படி இயல்பினால் இறந்தகாலம் எதிர்காலமாக வந்த காலவழுவமைதி. நான்காவதடியிலுள்ள 'மிதிக்கும்' என்னும் எச்சம் 'தாள்' என்னும் கருவிப் பெயரோடு முடிந்தது. 'உமிழா' என்பது ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம், மாயை என்னும் முதற்பெயர் கொண்டது. (6)

### வாசவர் துதி

வெள்ள வேணிப் பெருந்தகைக்கி
யாஞ்செய் யடிமை மெய்யாகக்
கள்ள வேடம் புனைந்திருந்த
கள்வ ரெல்லாம் களங்கமறு

உள்ள மோடு மெய்யடியா
ராக வுள்ளத் துள்ளுமருள்
வள்ள லாகும் வசவேசன்
மலர்த்தா டலையால் வணங்குவாம்.

[இ-ள்.] வெள்ளவேணி-கங்கையைத் தாங்கிய சடையை யுடைய, பெருந்தகைக்கு-கடவுளுக்கு, யாம்செய்-எம்மாலே செய்யப்பட்ட, அடிமை-பொய்த்தொண்டானது, மெய்யாக-உண்மைத் தொண்டாதற்பொருட்டு, கள்ளவேடம்-பொய்க் கோலத்தை, புனைந்திருந்த-தரித்து வந்திருந்த, கள்வரெல்லாம்-திருடரெல்லாம், களங்கம் அறு-மாசுநீங்கிய, உள்ளமோடு-நெஞ்சத்தொடு, மெய்யடியாராக-உண்மை அடியவராகும்படி, உள்ளத்து-(தனது) திருவுள்ளத்துள், உள்ளும்-நினைத்தருளிய அருள்வள்ளலாகும்-கருணையால் உளதாகின்ற கொடையை யுடையோனாகிய, வசவேசன் - வசவேசனது, மலர்த்தாள்-தாமரைமலர்போலுந் திருவடிகளை, தலையால் வணங்குவாம்-தலையினாலே வணங்குவாம் [எ-று.]

[கு-ரை.] 'மெய்யாக' என்று கூறினமையான் அடிமை பொய்யடிமை எனப்பட்டது. சில கள்வர் களவு செய்வான்வேண்டி கத்திரிக்காய்களைத் துணிகளில் மறைத்து சிவலிங்கங்களைப்போலக் கட்டிக்கொண்டு, வசவர் மடத்துள்ளே நுழைந்தனர். அவர்களையும் பந்தியில் உட்காரவைத்துப் பூசைசெய்யச்சொன்னபோது அவர்கள் அஞ்சி விழிப்பதைக்கண்டு, அச்சிவ கணநாதனைக்கு மாசு நேராதபடி அவர்களைத் தனது நல்ல மனத்தினாலே மெய்யடியாராக்கினர் என்ற வசவ புராணக் காதையை உள்ளடக்கிக்கொண்டுள்ளது இச்செய்யுள். பொய்யடியரை மெய்யடியாராக்கிய வசவன் எனது பொய்யடிமையும் மெய்யடிமையாம்படிச் செய்வன் என்பது கருத்தாகலின், கருத்துடையடைகொளியணி 'உள்ளத்து' என வேண்டாது கூறினார்; தீயவற்றை உள்ளாது என வேண்டியது முடித்தற்பொருட்டு; "உள்ளத்தால் உள்ளலும் தீதே" "வழுக்கியும் வாயாற் சொலல்" என்றாற் போல. கள்ளவேடம் புனைந்த கள்வரைத் தண்டித்தல் நேர்மையெனினும் அவாதுயிரை அளித்ததனோடமையாது, களங்கமறும் உள்ளத்தராம்படி செய்த கருணை தோன்ற "அருள்வள்ளலாகும்" என்றார். அங்கங்களுட் சிறந்த தலை இறைவனை வணங்குதற்கே அமைந்துள்ளது என்பது தோன்ற, 'தலையால் வணங்குவாம்' என்றார். "கோளில் பொறியில்...வணங்காத் தலை என்றும், "வணங்கத்தலை வைத்துவார்கழல்வாய் வாழ்த்தவைத்து" என்றும், "வாழ்த்தவாயும் நினைக்க மடநெஞ்சும் தாழ்த்தச் சென்னியும் தந்த தலைவனை" என்றும் பெரியோர் கூறுமாறுணர்க. 'மெய்யாக' என்னும் 'செய' வென் எச்சம், 'வணங்குவாம்' என்னும் தன் கருத்தாவினைகொண்டு முடிந்தது; அவற்றுள், முதலின் நான்கும் ஈற்றின் மூன்றும், வினைமுதல்

கொள்ளும் பிறவும் எற்கும் பிற'' என்ற விதிப்படி. பெருந்தகை-அன்மொழித்தொகை. பெருந்தகைக்கு+யாம+என்பது ''உயிர்வரின் உக்குற........யவ்வரின் இய்யாம்'' என்ற விதிப்படி ''பெருந்தகைக்கியாம்'' என்றாயது. (7)

## சென்னவசவர் துதி

பங்க வளற்றுவழி மாற்றி
யொருநல் வழியைப் பகர்வார்போல்
தங்கண் மதியின்பல பிதற்றும்
சமய ருரைகள் தமைநீக்கி
யங்க நிலையிற் றிலிங்கநிலை
யிற்றென் றருளும் வீரசைவ
சிங்க நிலைத்த வருட்சென்ன
வசவன் திருத்தாள் சிரத்தணிவாம்.

[இ-ள்.] பங்க-பழுதுபட்ட, அளற்றுவழி-சேற்றுவழியை, மாற்றி-நீக்கி, ஒரு நல்வழியை-நல்லவழியொன்றினை, பகர்வார் போல்-சொல்பவரைப்போல, தங்கள் மதியால்-தங்களுடைய புத்திகளுக்குத் தோன்றியவாறு, பலபிதற்றும்-(உடல் உயிர் களைப்பற்றி) பலவகையாகப் பிதற்றுகின்ற, சமயர்-சமயவாதிகளுடைய, உரைகள்தமை-சொற்களை, நீக்கி-ஒழித்து, அங்கநிலை இற்று-அங்கத்தினது நிலை இத்தன்மைத்து, இலிங்கநிலை இற்று-இலிங்கத்தினது நிலை இத்தன்மைத்து, என்று அருளும்-என்று தெரிவித்தருளிய, வீரசைவ சிங்கம்-வீரசைவத்திற் சிறந்தவனாகிய, நிலைத்த அருள்-நிலைபெற்ற (என்றும்மாறா) அருளினையுடைய, சென்னவசவன்-சென்னவசவனது, திருத்தாள்-அழகிய பதங்களை, சிரத்து அணிவாம்-தலைக்கு முடியணியாகத் தரிப்பாம். [எ-று.]

[கு-ரை.] பங்கம் என்பது சேறாயின் 'பங்க அளற்று' என்பது இருபெயரொட்டு. ''நல்வழியைப் பகர்வார்போல'' என்றமையின் பகர்பவரல்லர் என்பது பெறப்படும். ''தங்கள் மதியிற் பல பிதற்றும்'' என்றது வேத ஆகமங்களுட்படாது தங்களறிவு போனவழியே கண்டவற்றைக் கற்பித்து உளறுகின்றவர் என்பதாம். பொருளில் மொழிகளைக் கற்பித்துக் கூறித் தமக்கும் பிறர்க்கும் கேடு செய்தலால் 'பிதற்றும்' என்றார். சமயர் என்று கூறப்படுபவர் காட்சி அளவை ஒன்றையே கொண்டுள்ள நாத்திகவாதிகளாய உலகாயதன் முதலியோரை. அங்கம், இலிங்கம் என்பன தமிழ்ச்சொற்களே என்பது ஆராய்ச்சியாளர் கொள்கை. வீரசைவ சமயநூல்களில் கூறப்படுவன அங்கத்தலம், இலிங்கத்தலம் என்னும் இரண்டின் தொகை வகை விரி

களைப் பற்றியனவே, இதன் விரிவைச் சித்தாந்த சிகாமணி முதலிய நூற்களிற் காண்க. ஈண்டுவிரிக்கிற் பெருகும். சென்ன வசவேசர் வீரசைவ சமயத்தின் விளக்கமாகிய அங்கத்தலம், இலிங்கத்தலம் முதலியவற்றின் விவரங்களை நூல் வாயிலாக மக்கட் கூட்டினவர் என்றமையின் வீரசைவ சிங்கம் எனப்பட்டார். உவப்பினும் உயர்வினும், சிறப்பினும் செறலினும், இழிப்பினும் பால்திணை இழுக்கினும் இயல்பே" என்ற நூற்பாவின்படி சிறப்பினால் அஃறிணையை உயர்திணையாக்கி உரைத்தார். சமயர் உரை கேட்டுக் கெடுவோரைக் கெடாது இரக்கமுற்று செம்பொருளடியைச்சேரும் வழியுரைக்கும் நூல்களைச் செப்பி விளக்கினாராதலின் 'அருளும் சிங்கம்' எனப்பட்டார். மறந்தும் பிறன்கேடு சூழாதவர் என்பது தோன்ற 'நிலைத்த அருள்' என்றார். 'இற்று' என்ற குறிப்பு வினைமுற்று வினையெச்சமாகி 'என்று' என்னும் வினையெச்சம் கொண்டு முடிந்தது. (8)

## மடிவால மாச்சையர் துதி

வார்க்குங் குமமென் முலைபாக
னடியா ரறுவை மாசடித்துத்
தீர்க்குஞ் செயல்போல் விச்சலமன்
னவன்றன் சேனை செய்பிழையைத்
தாக்குங் கரவாள் கொடுசின்ன
பின்ன மாகத் தடிந்திட்டுப்
போக்குங் கருணை மடிவால
மாச்சன் பொன்னங் கழல்போற்றி.

[இ—ள்.] வார்-கச்சு (இறுக்கியதும்), குங்குமம்-செஞ்சாந்து (அணியப்பெற்றதும் ஆகிய) மென்முலை-மெல்லிய முலையையுடைய பார்வதியினது, பாகன்-கூறுடையானாகிய சிவபெருமான், அடியார்-தொண்டரது, அறுவை-ஆடைகளிலுள்ள, மாசு-குற்றத்தினை (அழுக்கை), அடித்து-கல்லின்மேல் துவைத்து, தீர்க்கும்-போக்குகின்ற, செயல்போல்-செய்கையைப்போல, விச்சல மன்னவன்தன்-விச்சல மன்னனுடைய, சேனை - படைகளாலே, செய்பிழையை - செய்யப்பட்ட குற்றத்தை, தாக்கும்-வெட்டுதற்குரிய, கரவாள் - கைவாளைக், கொடு-கொண்டு, சின்ன பின்னமாக-சிறிய துண்டுகளாக, தடிந்திட்டு-துணித்து, போக்கும்-போக்கிய, கருணை மடிவால மாச்சன்-அருளையுடைய மடிவால மாச்சையனது, பொன்னங் கழல்-பொன் போன்றதும், கழலையுடையதுமான திருவடிகளை, போற்றி-துதி செய்வாம். [எ—று.]

[கு-ரை.] கல்யாணபுரத்திலேயுள்ள வசவேசரது மடத்திலுள்ள அடியார்களது ஆடையைத் துவைத்து அழுக்கைப் போக்கிக்கொடுத்தல் இவருடைய பணி. ஓர் நாள் இப்பணியை மேற்கொண்டு ஆடைகளைச் சுத்தம் செய்து மீளுங்கால் அவ்வழிப்போந்த அரசன் போர்வீரன் அவ்வாடைகளை அசுத்தப்படுத்தினன். உடனே அடியவர் வெகுண்டு அவனது காத்தைத் துணித்தனர். இதனை அறிந்த அரசன் அடியவரையே கொலை செய்வான் சேனைகளை ஏவினன். வந்த அனைவரையும் அழித்து வெற்றியோடு இருந்தார் என்ற வசவ புராண வரலாற்றினை உட்கொண்டது இச்செய்யுள். ஆசிரியர் மாணாக்கரைத் தண்டித்தல் அவர்கள் திருந்தவேண்டும் என்ற கருணைபற்றியாதலால், ஆடையைத் தூய்மையன்றாக்கியவரையும், அவனுக்குத் துணை வந்தாரையும் தடிந்தது கருணையேயாயிற்று. ஆடையிலுள்ள மாசு தீர்த்ததைப்போலவே, அரசன் சேனைசெய் பிழையைப் போக்கினர் என்று உவமானமும், உவமேயமும் ஒரு பொருட்கண்ணே கூறப்படுதலின் ஒன்றில் ஒப்பணி எனப்படும். "வார்குங்குமமென்முலை" என்பது அன்மொழித் தொகை. 'தீர்க்கும்', 'தாக்கும்', 'போக்கும்' என்னும் செய்யுமென் வாய்பாட்டுப் பெயரெச்சங்கள் செயல், வாள், கருணை என்னும் பெயர்கொண்டன. 'செயல்' என்பது தொழிற்பெயர். கழல் என்பது ஆகுபெயராய் அது உள்ள தாளை உணர்த்தினது; தானியாகுபெயர் 'வாள் கொடு', 'கொடு' என்பது மூன்றும் உருபின் பொருள்படவந்த சொல். கருவிப் பொருளில் வந்துளது. (9)

## நால்வர் துதி

பெண்ணிற் கரசு தானக
வென்பு பெருநீற் றறைபிரச
வண்ணக் கமல மலர்ப்பொய்கை
யாகச் செங்கல் மாழையாய்
நண்ணச் சிறிய நரிகண்முடங்
குளைய பரியாய் நகர்புகுதப்
பண்ணற் குரிய வமுதுறழ்முத்
தமிழ் நால்வரையும் பணிகுவாம்.

[இ-ள்] என்பு-எலும்பு, பெண்ணிற்கு-பெண்களுக்கெல்லாம், அரசாக-அரசியாகவும், பெருநீற்று அறை-பெரிய சுண்ணத்தின் அறையானது, பிரசம்-தேனையுடைய, வண்ணம்-அழகிய, கமலம்-தாமரை, மலர்ப்பொய்கையாக-மலரையுடைய தடாகமாகவும், செங்கல்-செங்கல்லானது, மாழையாக-தங்கமாக, நண்ண-அடையவும், சிறியநரிகள்-சிறிய நரிகளெல்லாம், முடங்கு-வளைந்த, உளைய-பிடரி மயிர்களை யுடையனவாகிய, பரியாய்-குதிரைகளாக, நகர்புகுத-நகரின்கண் புகும்படியும்,

பண்ணற்கு-செய்வதற்கு, உரிய-தகுந்த, அமுதுஉறழ்-அமிழ்தத்தை ஒத்த, முத்தமிழ் நால்வர்-இயல், இசை, நாடகம் என்னும் மூன்று தமிழ்களாலான பாட்டுக்களைப் பாடிய சம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர் என்னும் நால்வரையும், பணிகுவாம்-வணங்குவாம். [எ-று.]

[கு-ரை.] தானாக என்பதில் தான் அசை. பெண்ணிற்கா சாதல் பெண்களிற் சிறந்த நலனுடையளாதல். சம்பந்தர் பூம்பாவையைப் பெண்ணாக்கிய வாலாறு, நாவுக்காசர் நீற்றறைபி ரசவண்ணக் கமலமலர்ப் பொய்கையாக்கிய வரலாறு, சுந்தரர் செங்கல் மாழையாக்கிய வரலாறு, மணிவாசகர் நரியைப் பரியாக்கிய வரலாறு ஆகியவை இதிற் கூறப்பட்டன. 'ஆக', 'ஆக', 'நண்ண', 'புகுத' என்னும் செயவென்வாய்பாட்டெச்சங்கள் அடுக்கி 'பண்ணற்கு' என்னும் பிறவினை கொண்டு முடிந்தது. 'உரிய' என்னும் குறிப்பு வினைப்பெயரெச்சம் தமிழ் என்னும் பெயர் கொண்டது. மூன்று தமிழ்-முத்தமிழ் பண்புத்தொகை. இது மூன்றாகிய தமிழ் என விரியும். (10)

### அடியார்கள் துதி

பரவை கேள்வன் திருத்தொண்டத்
 தொகையு ளடியார் பத்தியெலாம்
உருவ மாகும் நம்சோம
 நாதன் துதியு ளுறுசரணர்
அரவ வணியா னடியார்கள்
 மற்றை யவர்க ளனைவருந்தாம்
விரவி நாளும் இருப்பவிடம்
 கொடுக்கும் உள்ளம் விரிந்தன்றே.

[இ-ள்,] பரவைகேள்வன்-பரவை நாச்சியாரின் துணைவனை சுந்தரமூர்த்தி நாயனாரது, திருத்தொண்டத் தொகையுள்-திருத்தொண்டத்தொகை என்னும் பதிகத்தில் கூறப்பட்டிருக்கிற, அடியார்-தொண்டர்களும், பத்தியெல்லாம்-குருலிங்க, சங்கம முதலிய பத்திகள் எல்லாம், உருவமாகும்-ஒரு வடிவமாகும், நம் சோமநாதன்-நமது சோமநாதாராத்திரியர், துதியுள்-துதிப்பாடலுள், உறு-பொருந்தியிருக்கின்ற, சரணர்-தொண்டர்களும், அரவம்-பாம்பை, அணியான்-அணியாகவுடைய சிவபெருமானது, அடியார்கள்-தொண்டர்களும், மற்றையவர்கள்-இவற்றுள் அடங்காத பிறபெரியார்களும், அனைவரும்தாம் ஆகிய எல்லோரும், விரவி-கலந்து, நாளும் இருப்ப-எப்போதும் இருத்தற்கு, உள்ளம்-நெஞ்சகம், விரிந்து-அகன்று, இடம் கொடுக்கும்-இடத்தைக் கொடுக்கும். [எ-று.]

[கு-ரை.] சுந்திரமூர்த்தியாரால் பாடப்பட்ட தில்லைவாழந்தணர் என்று தொடங்கும் பாட்டுமுதல் சொல்லப்படுகின்ற தில்லைவாழந்தணர் முதலாக சொல்லப்பட்ட சைவ அடியார்கள். சோமநாதர் வீரசைவ நூலாகிய சோமநாத பாஷ்யம் இயற்றியவர். இந்நூலுள் வீரசைவ சமய அடியார்களாகிய சாணர்கள் வரலாறு கூறப்படுகிறது. (வீரசைவ அடியார்களாகியவரைச் சாணர் என்பது மரபு) மனம் அணுவென்பது நியாய நூலார் கொள்கை. "நேர்ந்த மனம் ஓரணு" வென்பதும் இதுபற்றி. அணுரூபமாதலில் இத்துணை அடியார்களும் கலந்திருப்பான்வேண்டி விரிந்து என்றார். பக்தி உருவமாதல் 'மனம்' முதலிய அந்தக் கரணங்களும் ஞானேந்திரியங்களும், கருமேந்திரியங்களும் பத்தியின் வழியே நிற்றல். கடவுள் மாட்டும் அவர் அடியார்மாட்டும் செலுத்தும் அன்பினையே பத்தியென்றார். அன்று, ஏ அசை. (11)

## "அவையடக்கம்"

[அவைக்கு அடங்கி இருப்பதாகக் கூறல்]

அடலுறும் அல்லமன் அரிய சீரொடு
படுதலின் நயந்துபா ராட்டும் பன்முறை
மடனிகும் உலகம் என்மொழியை வந்துவர்க்
கடலினும் மூழ்குவர் கால மொன்றினே.

[இ-ள்.] அடலுறும்-வன்மையால் மிகுந்திருக்கின்ற, அல்லமன்-அல்லமாப் பிரபு தேவனது, அரியசீரொடு-சொல்லற்கரிய புகழினொடு, படுதலின்-தோன்றுதலால், மடன் இகும்-அறியாமை நீங்கிய, உலகம்-உலகில் உள்ள நன்மக்கள், என்மொழியை-எனது எளிய செய்யுளையும், பன்முறை-பலகாலும், நயந்து-விரும்பி, பாராட்டும்-கொண்டாடுவர், காலம்-விசேட காலத்தோடு, ஒன்றின்-பொருந்துமாயின், உவர்க்கடலினும்-உப்புத்தன்மை வாய்ந்த கடலினிடத்தும், வந்து மூழ்குவர்-(மனிதர்) வந்து மூழ்குவர், (ஆதலால்) [எ-று.]

[கு-ரை.] புலவர், சித்தர், கடவுளர் முதலியோரையும் வெல்லும் மாயையை வென்றாராதல் நோக்கி "அடலுறும் அல்லமன்" என்றார். விசேடகாலம் கிரஹண புண்ணியகாலம், ஆடித்திங்கள், தைத்திங்களில்வரும் மதிமறை (அமாவாசை) நாட்கள். அரிய புகழ் என்று கூறினதுபற்றி 'எளிய'வென வருவித்துரைக்கப்பட்டது. உலகம், மொழி என்பன ஆகுபெயர்கள். 'கடலினும்' என்பதில் உள்ள 'உம்மை' இழிவுசிறப்பும்மை. எடுத்துக்காட்டுவமையணி உலகம்-எழுவாய், பாராட்டும்-பயனிலை மொழியை-செயப்படுபொருள். மூழுகுவார் என்னும் பயனிலைக்கு 'மனிதர்' தோன்றா எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. இது செயப்படுபொருள் குன்றிய வினை. (12)

நாற்கதி தருமிடர் கடந்து நச்சுநர்
பார்க்கதி முதலிரு பத்தைந் தாம்கதி
மேற்கதி பெறவருள் விளங்கு மல்லமன்
சீர்க்கதி யிருபதோ டைந்துஞ் செப்புவாம்.

[இ-ள்.] நச்சுநர்-(தன்னை) விரும்பியோர், நாற்கதி-நான்கு பிறப்புகளாலும், தரும்-தரப்படுகின்ற, இடர்-துன்பங்களை, கடந்து-தாண்டி, பார்க்கதிமுதல்-பிருதிவிதத்துவம் முதலிய, இருபத்து ஐந்து ஆம்கதி-இருபத்தைந்து ஆகிய தத்துவங்களுக்கும், மேல்-மேலாகிய, கதி-முத்தியைப், பெற-பெறுதற்கு, அருள் விளங்கும்-கருணையால் பொலிகின்ற, அல்லமன்-அல்லமாப்பிரபு தேவனது, சீர்-புகழையுடைய, இருபதோடைந்து கதி-இருபத்தைந்து படலங் (கதி)களையும், செப்புவாம்-சொல்லுவாம். [எ-று.]

[கு-ரை.] நாற்கதி :—தேவகதி, மக்கள்கதி, விலங்குகதி, நரககதி என்பனவாம். இக்கதியுள் அகப்பட்டு உயிர்கள் அடையும் துன்பத்தைச் சிந்தாமணியில் விரிவாகக் காண்க. பூதம் ஐந்து, புலன் ஐந்து, பொறி ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, அந்தக்கரணம் நான்கு, ஆன்மா ஒன்று ஆக ஆன்ம தத்துவம் 25. நாற்கதி—கதி-பிறப்பு, பார்க்கதி—கதி-தத்துவம், (உண்மை) மேற்கதி—கதி-பதவி, சீர்க்கதி—கதி-படலம், (நூலின் உறுப்பு) ஐந்தும் முற்றும்மை. 'பெற' வென்னும் செயவென் எச்சம் "முதலிணன்கும் ஈற்றின் மூன்றும், வினைமுதல் கொள்ளும் பிறவும் எற்கும்பிற" என்ற விதிப்படி 'செப்புவாம்' என்னும் பிறவினைகொண்டு முடிந்தது. (13)

## சம்பந்தம்

(ஏனைய நூற்களுக்கும் இந்நூற்கும் உள்ள தொடர்பு)

கன்றிய வைரிகள் காதும் காதையும்
வன்றுயர் மதனநோய் வளர்க்கும் மாற்றமும்
புன்றொழி லினர்வறும் பொழுது போக்கலும்
அன்றரு ளல்லமன் அமல லீலையே.

[இ—ள்.] கன்றிய-வெறுப்புற்ற, வைரிகள்-பகைவரானூர், காதும்-(தம் எதிரிகளைக்) கொலைசெய்த, காதையும்-சரிதங்களும், வன்துயர்-வலிய துன்பத்தைச் செய்கின்ற, மதனன் நோய்-காமனுல் வரும் பிணியை, வளர்க்கும் மாற்றமும்-வளர்த்தற்குரிய சரிதங்களும், புன்றொழிலினர்-இழிதொழிலுடையவர், வறும்பொழுது-வீண்காலமாக, போக்கலும்-கழித்தற்குரிய சரிதங்களும், அன்று-அன்ருகும், அருள் அல்லமன்-அருளையுடைய அல்லமனது, அமலலீலையே-மாசில்லாத திருவிளையாட்டேயாகும். [எ—று.]

[கு-ரை.] 'மாற்றம்' என்னும் மொழியின் பெயர் அதனாலாகிய நூலுக்கும், 'போக்கல்' என்னும் தொழிற்பெயர் அதற்குக் காரணமான நூலுக்கும் ஆதலின் ஆகுபெயர். (14)

### அதிகாரிகள்

(அஃதாவது கேட்டற்குரியார் இன்னரென்பது)

புறங்கறை யொழுகு செம் புண்ணி லீயென
வறுங்கதை புல்லியர் கொள்வர் மாமலர்
உறுங்களி வண்டினல் லமனொண் காதையைப்
பிறந்துள பயன்பெறு பெரியர் கொள்வரே.

[இ-ள்.] புறம்-புறத்தே, ஒழுகு-ஒழுகுகின்ற, கறை-இரத்தத்தையுடைய, செம்புண்ணில்-சிவப்பாகிய புண்ணில் (அவ்விரத்தத்தை), ஈயென-ஈக்கள் மொய்த்தல்போல, வறுங்கதை-பயனில்லாத கதையை, புல்லியர்-சிறியோர், கொள்வர்-விரும்பிப்படிப்பர், மாமலர்-சிறந்த தாமரையின் (மதுவை உண்டற்கு), உறும் களிவண்டின்-மிகுந்த களிப்பையுடைய வண்டுகள்போல, அல்லமன்-அல்லமாப்பிரபு தேவனது, ஒண்காதையை-சிறந்த கதையை, பிறந்து உளபயன்-மனிதராய்ப் பிறந்திருத்தலாகிய பயனைப், பெறு-பெறுதற்குரிய, பெரியர்-பெரியராயினோர், கொள்வர்-விரும்பிப் படிப்பர். [எ-று.]

[கு-ரை.] மாமலர்-திரு இருத்தற்குரிய தாமரையாயிற்று, வண்டின்-ஐந்தாம் வேற்றுமை இன் உருபு ஒப்புப்பொருளில் வந்தது. வறுங்கதை என்பதற்கேற்ப இரத்தம் என்றும், ஒண்காதை என்பதற்கேற்ப மதுவென்றும் வருவித்துரைக்கப்பட்டது. உவமையணி. (15)

### நூற்பயன்

மயலளற் றூன்றுகோல் மல்கும் அன்பெனும்
இயலெழுத் தெழுதுகோல் அங்க லிங்கமாம்
வியனிலத் தளவுகோல் மதிவி ளக்கினை
அயர்வறத் தூண்டுகோல் அமல லீலையே.

[இ-ள்.] அமலன்-மாசற்றவனாகிய அல்லமாப்பிரபு தேவனது, அமலலீலை-மாசற்ற விளையாட்டானது, மயல் அளற்று-மயக்கமாகிய சேற்றுக்கு, ஊன்றுகோல்-ஊன்றுகோலாகும், மல்கும்-நிரம்பிய, அன்பு எனும்-குரு, லிங்கம், சங்மத்திடத்துச் செய்யும் பக்தி எனப்படுகின்ற, இயல் எழுத்து-

இலக்கணம் உடைய எழுத்தை எழுதுகோல்-எழுதுகின்ற கோலாகும், அங்கலிங்கமாம்-அங்கத்தலம், இலிங்கத்தலம் என்று சொல்லுகின்ற, வியன் நிலத்து-நூற்றெருரு பகுதிப்பட்ட விரிவான நிலத்திற்கு, அளவுகோல்-அளக்கின்ற கோலாகும், மதி விளக்கினை-அறிவாகிய விளக்கினை, அயர்வு அற—சோர்வு நீங்க, தூண்டுகோல்—தூண்டு கோலாகும். [எ—று]

[கு-ரை.] எனவே மயக்கவுணர்வு நீங்குதலும், பக்திபெறுதலும், அங்க லிங்க அளவு காண்டலும், அறிவினல் உணரப்படும் தத்துவஞானம் உணர்த லும், பயன் என அறிக. மயக்கமாவது-மறுபிறப்பும், இருவினைப்பயனும், கடவுளும் இல்லையெனவும், மற்றும் இத்தன்மையவும் சொல்லுகின்ற மயக்க நூல் வழக்குகளை மெய்நூல் வழக்கென்று துணிதல்; குற்றியை மகன் என் றும் இப்பியை வெள்ளியென்றும் இவ்வாறே ஒன்றனைப் பிறிதொன்ருகத் துணிதலும் ஆம் என்பர் பரிமேலழகர். அன்பு தொடர்புடையார்மாட்டுத் தோன்றும் உள்ள நெகிழ்ச்சி; இது முதிர்ந்துழி தொடர்பிலார்மாட்டும் சென்று அருள் எனப்பெயர் பெறும்; அதுவே கடவுளர் போன்ருர் இடத் துச்சென்று 'பக்தி' எனப்படும்; ஆதலின் அன்பு என்பதற்குப் பக்தி என உரைக்கப்பட்டது. குருலிங்க, சங்கமம் என்பது முறையே, குரு வழிபாடு, உருவ வழிபாடு, அடியார் வழிபாடு ஆம். அங்கலிங்கம் இதன்விரிவை சித் தாந்த சிகாமணி முதலிய நூல்களில் காண்க. மயல் அளறு, அன்பெனும் எழுத்து, அங்கலிங்கமாம் வியன்நிலம், மதிவிளக்கு உருவகம். அளறு+ ஊன்றுகோல்-அளற்றூன்றுகோல். "நெடிலோடு உயிர்த்தொடர்க்குற்றுக ரங்களுட், டறவொற்றிரட்டும் வேற்றுமை மிகவே", என்றதனல் றகரஒற்று இரட்டித்து வருமொழி உயிராதலின் "உயிர்வரின் உக்குறள் மெய்விட் டோடும்" என்ற விதிப்படி, அளறு என்பதின் ஈற்று உகரம்கெட "உடன் மேல் உயிர்வந்தொன்றுவதியல்பே" என்ற விதிப்படி வரும் உயிரேறி முடிந்தது. (16)

விடயம்

நன்றிகொ ளடிக ளூன்குற நடந்துபோய்
என்றனி நாவினின் றெழுமிச் செய்யுளான்
வென்றிகொ ளல்லமன் சீர்த்தி மென்பயன்
கன்றலில் அன்பராங் கன்றை யூட்டுமால்.

[இ—ள்.] என் தனி நாவினின்று-எனது ஒப்பற்ற நாவி னின்று, எழும்-தோன்றுகின்ற, இச்செய்யுள் ஆன்-இக்காவிய மாகிய பசுவானது, நன்றிகொள்-நன்மைகொண்ட, நான்கு அடி கள்-நான்காகிய அடிகளைக்கொண்டு, உற-மிகவும், நடந்துபோய்- நடந்துசென்று, வென்றிகொள்-மாயை முதலிய சக்திகளை வெற்றிகொண்ட, அல்லமன்-அல்லமாப்பிரபுதேவனது, சீர்த்தி- மிகுபுகழாகிய, மென்பயன்-மெல்லிய பாலை, கன்றல் இல்-

வெறுப்பு இல்லாத, அன்பராம் கன்றை-சிவ (பக்தர்) னடியார் களாகிய கன்றுகளை, ஊட்டும்-உண்பிக்கும், [எ—று.]

[கு-ரை.] நான்கு அடிகொண்ட செய்யுளைப் பசுவாகவும், அல்லமனது சீர்த்தியைப் பாலாகவும், சிவனடியாரைக் கன்றாகவும், உருவகப்படுத்தினமையின் உருவக அணி. 'செய்யுள்' என்பது செய்யுளாலாகிய காவியத்தை உணர்த்தலின் கருவியாகுபெயர். நாவினின்று இன்சாரியை; நின்று ஐந்தாம் வேற்றுமை உருபு. 'ஆ' என்பது 'ன' கரச்சாரியைபெற்று 'ஆன்' என நின்றது; "ஆமாகோ னவ்வணையவும் பெறுமே". சீர்த்தி-மிகுபுகழ். 'எழும்' என்னும் பெயரெச்சம் 'செய்யுள்' என்னும் செயப்படுபொருள் கொண்டு முடிந்தது. (17)

(இனி மூன்று பாட்டுக்களால் உற்பத்தி கூறப்படுகின்றது)

பரசிவம் பிரம மென்னப் பட்டொரு திரிவு மின்றி
யுரைமனம் இறந்து நின்ற வொருசிவ லிங்கந் தன்னின்
வருமுயர் சதாசி வன்றான் மற்றவன் றனைப் பொருந்தும்
அருமைகொள் ஞானசத்தி யவர்களாற் சிவ னுதிப்பன்.

[இ—ள்.] பரசிவம்-பரசிவம், பிரமம்-பிரமம், என்னப் பட்டு-என்று சிறப்பித்துச் சொல்லப்பட்டு, ஒரு திரிவும்-யாதொரு விகாரமும், இன்றி-இல்லாதாகி, உரை மனம்-வாக்கையும் மனத்தையும், இறந்து-கடந்து, நின்ற-(சச்சிதானந்த சொரூபமாய்) நின்ற. ஒரு சிவலிங்கம் தன்னில்-ஒப்பற்ற சிவலிங்கத்தினின்றும், உயர்-உயர்வாகிய,சதாசிவன்-சதாசிவன், வரும்-தோன்றுவான், அவன்தனை-அவனை, அருமைகொள்-அருமைகொண்ட, ஞானசத்தி-ஞான சத்தியானவள், பொருந்தும்-பொருந்துவாள், அவர்களால்-அவர்களினின்றும், சிவன்-சிவபெருமான், உதிப்பன்-தோன்றுவன். [எ—று.]

[கு-ரை.] பரசிவம், பிரமம் எனப்படுவேது ஏகமாய், சச்சிதாநந்தமாய் உலக முழுதும் தோன்றி ஒடுங்குதற்கு இடமாயுள்ள பொருள். சிவலிங்கம்-சிவபூசைத் திருவுரு. சதாசிவம்-பஞ்சகருத்தாக்களில் ஒருவர். ஞானசத்தி-பஞ்சசக்தியுள் ஒன்று. அஃது ஐம்பொறி உணர்ச்சியால் நின்று கருமங்களை அறிந்து ஊட்டுவது. தான், மற்று அசைகள். வரும், செய்யும் என்னும் முற்று உயர்திணை ஆண்பாலுக்கு வந்தது. 'அவர்களால்' ஆல் உருபை ஐந்தன் உருபாகத் திரிக்க. (18)

சாற்றுமச் சிவனுக் கிச்சா சத்தியவ் விருவ ராணுந்
தோற்றுவ னுருத்தி ரன்றான் சொல்லிய வவற்குச் சத்தி
மாற்றருங் கிரியை யென்பர் மற்றவ ரிருவர் பாலும்
போற்றுறு மரியு திப்பன் பொறியவன் சத்தியாமால்.

[இ-ள்.] சாற்றும்-மேல் சொல்லப்பட்ட, அச்சிவனுக்கு-அச்சிவபெருமானுக்கு, இச்சாசத்தி-இச்சாசத்தி (சத்தியாவள்), அவ்விருவராலும்-அவ்விருவரினின்றும், உருத்திரன்-உருத்திரன், தோற்றுவன்-தோன்றுவன், சொல்லிய-சொல்லப்பட்ட, அவற்கு-அவ்வுருத்திரனுக்கு, மாற்றஅரும் - மாற்றுதற்கரிய, கிரியை - கிரியா சத்தியை, சத்தியென்பர் - சத்தி என்று கூறுவர் ஆன்றோர், அவர் இருவர்பாலும் - அவர் இருவரினின்றும், போற்றுறும் - (உலகைக்) காத்தல் பொருந்திய, அரி-திருமால், உதிப்பன் - தோன்றுவன், பொறி - திருமகள், அவன் சத்தி ஆம் - அவனுக்குச் சத்தி ஆகும். [எ-று.]

[கு.ரை.] தான், மற்று, ஆல் அசைகள். தோற்றுவன் என்னும் பிறவினை தோன்றுவன் எனத் தன்வினைப் பொருளில் வந்தது. இச்சாசத்தி-பஞ்சசத்தியில் ஒன்று; அஃது பஞ்ச பூதமாக நின்று உயிர்க்கு அருள் நேசம் செய்வது. உருத்திரன் பஞ்ச கருத்தாக்களில் ஒருவர். அழித்தல் தொழில் உடையவர். கிரியாசத்தி-பஞ்சசத்தியில் ஒன்றாய் வினைத்துணையாக நின்று உலகினை ஆக்குவது. (19)

அத்திரு மாலு மாவு மளிப்பவந் துதிப்பன் வண்டு
மொய்த்திசை முரலுஞ்செங்கேழ் முளரிவா னவனவற்குச்
சத்திவெண் கமலை யன்னோர் தரவரு முலகிற் றோற்றம்
நித்தனங் குருகு கேசன் நினைவுமாத் திரையி னமால்.

[இ-ள்.] அத்திருமாலும் - அந்த அரியும், மாவும் - திருமகளும், அளிப்ப - ஈன்றிட, வண்டு - வண்டுகளானவை, மொய்த்து-மொய்த்து, இசை-இசைபோல, முரலும்-ஒலிக்கப் பெற்ற, செங்கேழ்-சிவப்பு நிறத்தையுடைய, முளரிவானவன்-தாமரை மலரில் இருக்கின்ற பிரமன், வந்து உதிப்பன்-வந்து தோன்றுவான், அவற்கு-அந்த பிரமனுக்கு, வெண்கமலை-நாமகள், சத்தி-சத்தியாவாள், அன்னோர்-அவ்விருவரும்கூடி, தர-படைக்க, உலகின்-உலகத்தினது, தோற்றம்-காணப்பட்டவை எல்லாம், வரும்-உண்டாகும், நித்தன்-அழிவில்லாதவனும், நங்குரு-நமது குருவுமாகிய, குகேசன்-(அன்பரது உள்ளமாகிய குகையின் கண்ணே தங்கியிருக்கின்ற அருள்வள்ளல் தன்மை வாய்ந்த) அல்லமாப்பிரபு தேவனது, நினைவு மாத்திரையின்-நினைப்பளவிலே, ஆம்-ஆகும். [எ-று.]

[கு-ரை.] எனவே எல்லாவற்றிற்கும் அல்லமாப்பிரபு தேவனது சங்கற்பமே காரணம் ஆகும் என்றார் என்க. முளரி-ஆகுபெயர், ஆல்-அசை.

### அல்லமதேவன் சிறப்பு

ஆக்குறுஞ் செயலதொன்றே யயன் தனக் காக்கலோடு
காக்குறுஞ் செயலிரண்டுங் கண்ணனுக் காக்கல்காத்தல்
போக்குதல் என்றிம் மூன்றும் புராந்தகற் களித்தவர்க்கு
நீக்கரு மிறைமை நல்கி நிறுவினன் குரு குகேசன்.

[இ—ள்.] குரு-நமது குருவாகிய, குகேசன்-அல்லமதேவன், அயன் தனக்கு-பிரமனுக்கு, ஆக்குறுஞ்செயலது ஒன்றே-படைக்கும் தொழில் ஒன்றனையே, கண்ணனுக்கு-திருமாலுக்கு, ஆக்கலோடு-படைத்தலோடு, காக்குறுஞ்செயல்-காத்தற்றொழிலுமாகிய, இரண்டும்-இரண்டையும், புராந்தகற்கு-உருத்திரனுக்கு, ஆக்கல் காத்தல் போக்குதல் என்று-படைத்தலும், காத்தலும், அழித்தலும் எனப்படுகின்ற, இம்மூன்றும்-இம்மூன்றையும், அளித்து-கொடுத்து, அவர்க்கு-அம்மூவருக்கும், நீக்கரும்-பிறரால் நீக்கமுடியாத, இறைமை-தலைமையை, நல்கி-தந்து, நிறுவினன்-வைத்தனன். [எ—று.]

[கு-ரை.] புராந்தகன்-முப்புரத்திற்கு எமனாய் இருந்தவன். (21)

---

### இரண்டாவது

## கைலாச கதி

**[கைலாசத்தில் நடந்த வரலாற்றைக் கூறுகின்ற படலம். இதனுள் கைலாசமலையின் சிறப்பும் சிவபெருமான் உமாதேவியாருடைய சிறப்பும் அவர்களுக்குள் நிகழ்ந்த தடைவிடைகளும் கூறப்படுகின்றன.]**

வெள்ளிமால் வரையி னுச்சி
வீற்றிருந் தருளு முக்கண்
வள்ளலா ரொடுசூ ழுற்று
மதரரி நெடுக்கட் செவ்வாய்ப்
பிள்ளைவாண் மதிநு தற்றம்
பிராட்டியல் லமனைக் காண்பான்
கள்ளமா யையைஞா லத்து
விடுத்தவக் கதியு ரைப்பாம்.

[இ—ள்.] வெள்ளி-வெள்ளியின் மயமாகிய, மால்-பெருமை பொருந்திய, வரையின்-கைலாசகிரியினது, உச்சி-சிகரத்தின்

கண், வீற்றிருந்து-அரசிருந்து, அருளும்-(உயிர்களுக்கு) அருள் செய்யா நின்ற, முக்கண்-மூன்று கண்களையுடைய, வள்ளலா ரொடு-சிவபெருமானோடு, சூளுற்று-சபதம் கூறிக்கொண்டு, மதர்-களிப்புப் பொருந்திய, அரி-செவ்வரிகளையுடைய, நெடுங் கண்-நீண்ட கண்களையும், செவ்வாய்-சிவந்த வாயையும், பிள்ளை-குழந்தையாகிய, வாள்-ஒளிபொருந்திய, மதி-சந்திரன் போலுள்ள, நுதல்-நெற்றியையும், உடைய-உடையவளாகிய, தம்பிராட்டி - தமது தேவியானவள், அல்லமனை - அல்லம தேவனை, காண்பான்-காணுதற் பொருட்டு, கள்ளமாயையை-வஞ்சகம் பொருந்திய மாயையை, ஞாலத்து-பூமியின்கண், விடுத்த-அனுப்பின, (வரலாற்றைச் சொல்லுகிற) அக்கதி-அந்தப்படலத்தை, உரைப்பாம்-சொல்லுவாம் [எ-று.]

[கு-ரை.] நிலையாதவற்றை நிலைப்பனபோல ஆன்மாக்களுக்கு நல்லன போல் காட்டி விளைத்தலின் 'கள்ளமாயை' யென்றார். காண்பான், 'பான்' வினையெச்சவிகுதி. (1)

[இதுமுதல் ஆறு பாட்டுக்களால் கைலையின் சிறப்புக் கூறுகின்றார்]

இயங்குவ நிற்ப வான யாவையுங் கலைமா தோடு
முயங்குபு முன்ன மீன்ற முளரிவா னவன்வ குத்து
வியன்புவி யண்டந் தன்னுள் விதித்தனன் றகுமி டங்கள்
வயங்கெழு மசுரர் நாகர் வானவர் முதலி யோர்க்கும்.

[இ-ள்.] இயங்குவ-அசைவன, நிற்ப-அசையாதன, ஆன யாவையும்-ஆகிய எல்லாவற்றையும், கலைமாதோடு-நாமகளோடு, முயங்குபு-கூடி, முன்னம்-ஆதிகாலத்திலே, ஈன்ற-தோற்றுவித்த, முளரிவானவன்-தாமரைப் பூவிலிருக்கும் தேவனாகிய நான்முகன், வியன்-பெரிய, புவி-பூமியாகிய, அண்டம் தன்னுள்-அண்டத்துள், வயம்-வெற்றி, கெழும் பொருந்திய, அசுரர்-தானவர், நாகர்-உரகர், வானவர்-தேவர், முதலியோர்க்கும்-முதலிய எல்லோர்க்கும், தகுமிடங்கள்-தங்கி இருத்தற்குரிய தகுதியான இடங்களை, வகுத்து-பாகுபாடுசெய்து, விதித்தனன்-நியமித்தான், [எ-று.]

[கு-ரை.] அண்டம் என்பது முட்டை வடிவமானது என உலகத்திற்குக் காரணக்குறி. எனவே பூமி உருண்டையென்பதும முன்னரே ஆன்றோரால் கண்டதொன்று. இறைவனால் படைக்கப்பட்ட அண்டங்கள் பலவென்றும், அவற்றுள் மண்ணுலகு ஆகிய இவ்வண்டம் ஒன்றென்றும, சான்றோர் கூறுப. முளரிவானவன் முதலியோர்க்கும் அண்டம் தன்னுள் தகுமிடங்கள் வகுத்து விதித்தனன் என வினை முடிபு காண்க. முள் என்பது முள்ளை

யுடையது, அரி உள்துளையையுடையது எனவே முளரி தாமரைக்குக் காரணக்குறியாயிற்று. 'முயங்குபு' செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம், ஈன்றவென்னும் பெயரெச்ச வினை கொண்டது. ஈன்றவென்னும் பெயரெச்சம் வானவன் என்னும் கருத்தாப் பெயர்கொண்டது. (2)

நான் முக வண்டந் தன்னு ணனிசிறந் தொப்பி கந்த
தான்முக விழிக ளாற்கண் டும்பர்க ளுவகை பூப்பத்
தான்மிகு மருளான் மேனி சாத்திய பேரா னந்தக்
கூன்முக மதிய ணிந்த கொற்றவன் கைலைக் குன்றம்.

[இ-ள்.] தான்மிகும்-தானே வளர்கின்ற, அருளால்-கருணையினாலே, மேனி - திருமேனியை, சாத்திய - தரித்துக்கொண்டிருக்கிற (கொற்றவன்), பேரானந்த-பெரிய மாறுபடாத ஆனந்தத்தையுடைய (கொற்றவன்), கூன்முகம் வளைந்த வடிவத்தையுடைய, மதி-பிறைச்சந்திரனை, அணிந்த-அணிந்துள்ள, கொற்றவன்-வெற்றிபொருந்திய கடவுளது, கைலைக்குன்றம்-கைலாச மலையானது உம்பர்கள்-தேவர்கள், ஊன்முக விழிகளால்-ஊனையுடைய முகக்கண்களினாலே, கண்டு-பார்த்து, உவகைபூப்ப-மகிழ்ச்சிமிக, நான்முக அண்டந் தன்னுள்-பிரமதேவனது அண்டங்களுக்குள்ளே, நனிசிறந்து-மிகச்சிறந்து, ஒப்பு இகந்தது-உவமையைக் கடந்தது. [எ-று.]

[கு-ரை.] கொற்றவன் கைலைக்குன்றம் உம்பர்கள் கண்டு உவகை பூப்ப சிறந்து ஒப்பு இகந்தது என்று வினைமுடிபு செய்க. விழியென வேண்டாது கூறினார் இயற்கைக் காட்சியால் ஆகிய கைலாசத்தினைக் காண்டல் தான் கண்பெற்றதின் பயன் என வேண்டியது முடித்தற்பொருட்டு. அருள் மேனிக் கொற்றவன் பேரானந்தக் கொற்றவன் இவ்விரண்டும் இறைவனது அருவத்தையும், மதியணிந்த கொற்றவன் என்பது உருவத்தையும் குறிக்கின்றன. 'சாற்றிய' பாடபேதம். (3)

கொள்ளைவண் டிமிழ்ந்து தாது
குடைந்து மூக்குழ வுடைந்து
கள்ளழிந்து ஒழுகும் செம்பொன்
கடுக்கை வேய்ந் திலகுவேணி
வள்ளல்வண் புகழ் திரண்ட
வளம்கெழு கைலைக் குன்றில்
வெள்ளிவந் தத்தியாச மாகவே
விளைந்த தம்மா!

[இ-ள்.] கொள்ளை - கூட்டமான, வண்டு - வண்டுகளானவை, இழிந்து-(பூக்களில்) இறங்கி, தாது-மகரந்தப்பொடியிலே, குடைந்து-மூழ்கி, மூக்கு-நாசியினுல், உழ-கிண்ட, உடைந்து-முறுக்கு அவிழ்தலினுலே, கள்-தேனுனது, அழிந்து-வழிந்து, ஒழுகும்-ஒழுகுகின்ற, செம்பொன் கடுக்கை-செம்பொன்போலுள்ள கொன்றை மலர்களை, வேய்ந்து-சூடப்பெற்று, இலகு-விளங்காநின்ற, வேணி-சடையையுடைய, வள்ளல்-கடவுளது, வண்புகழ்-வள்ளல் தன்மையோடுகூடிய புகழ்களானவை, திரண்ட-குவிந்ததாகிய, வளம்கெழு-வளம் பொருந்திய, கைலைக்குன்றில்-கைலாச மலையின்கண்ணே, வெள்ளி-வெள்ளியானது, வந்து-வந்து, அத்தியாசமாகவே-ஆரோபமாகவே, விளைந்தது-அமைந்தது. [எ-று.]

[கு-ரை.] 'கொள்ளைவண்டு' என்பதற்குப் பூக்களில் உள்ள தேனைக் கொள்ளை கொள்வான்வேண்டி வந்த வண்டுகள் என்றும் பொருள் உரைக்கலாம். 'ஆரோபகம்' என்பது ஒன்றினது தன்மையை மற்ருென்றினில் ஏற்றிச் சொல்வது இப்பியை வெள்ளியென அறிதல்போல புகழ்மையை ஏற்றி மலைக்குள்ள வெள்ளித்தன்மையை மறுத்து புகழினது வெள்ளியை மறுத்தலினுல் இது ஒழிப்பணி இதனை வடநூலார் அவநுதி என்ப. "சிறப்பினும் பொருளினும் குணத்தினும் உண்மை, மறுத்துப் பிறிதுரைப்பது அவநுதியாகும்". அவநுதி மறுத்துரைத்தல். 'உடைந்து' என்ற 'செய்து' என்னும் வாய்பாட்டு வினையெச்சத்தைக் காரணப்பொருளில் வந்த உடைய என்னும் 'செய' வென்னெச்சமாகத் திரிக்க. எல்லா ஆசிரியரும் புகழை வெண்மையாகக் கூறல் மரபு. வள்ளலது கைலைக்குன்று நிலப்பிறிதின் கிழமை; 'முருகனது குறிஞ்சிநிலம்' என்ருற்போல. 'அம்மா' வியப்புச்சொல். (4)

கண்பிசைந் தொருசே யின்னும்
கலுழினுந் தனைக் கொடுப்பன்
மண்பிசைந் துண்ட மாயன்
மறித்திட வலிய னல்ல
னண்பிசைந் திறைவ னுக்கே
நாமிட னுவ மென்று
பண்பிசைந் தலைதி ரண்ட
பரிசினின் றிடுமக் குன்றம்.

[இ-ள்,] அக்குன்றம்-அக்கைலாச கிரியானது, ஒரு சேய்-ஒரு குழந்தையானது, இன்னும்-இனியும், கண் பிசைந்து-கண்களைப் பிசைந்து, கலுழினும்-அழுதாலும், தனைக்கொடுப்பன்-

தன்னைக் கொடுத்துவிடுவான், மண் பிசைந்து - மண்ணைப் பிசைந்து, உண்டமாயன் - உண்ட திருமால், மறித்திட - (கொடேல் என்று) தடுத்தற்கு, வலியன் அல்லன்-வன்மையுடையனல்லன் (ஆதலால்), நண்பு-நட்புக்கு, இசைந்து-உடன்பட்டு, இறைவனுக்கே-சிவபெருமானுக்கே, நாம் இடனுவம் என்று-நாம் தங்கியிருக்கும் இடமாவோம் என்று, பண்பு இசைந்து-தனக்குரிய குணத்தோடு பொருந்தி, அலை-பாற்கடலானது, திரண்ட-குவிந்ததாகிய, பரிசில்-உருவம்போல, நின்றிடும்-நிற்கும். [எ—று.]

[கு-ரை.] **தற்குறிப்பேற்றவணி** அக்குன்றத்தைப் பாற்கடலின் திரண்ட வடிவமாகக் குறித்தலால். இன்னும் கொடுப்பன் என்றதனுல் முன்னொரு காலத்தில் கொடுத்ததை உணர்த்துகின்றது. உபமன்யு முனிவருக்குப் பால் கொடுத்த வரலாறு அபிதான சிந்தாமணி பக்கம் 241-ல் பார்க்க. ''பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடலீந்த பிரான்'' என்முர் பிறரும். அலை-சினையாகுபெயர். பரிசு-பண்பாகுபெயர். 'மறுத்திட' என்றும் பாடம். (5)

ஒழுகுறு மருவி யீட்ட மொலியினு னகுவெண் டிங்கள்
பழகுறு முடற்க ளங்காற் பாகசா தனன்கூர்ங் கோட்டு
மழகளி றுமிழ்ம தத்தான் மலர்மிசைக் கடவு ளூர்தி
யழகுறு நடையா லன்றி யறிதரப் படாவக் குன்றில்.

[இ—ள்.] அக்குன்றில்-அம்மலையில், ஒழுகுறும்-ஒடுகின்ற, அருவி ஈட்டம்—வெள்ளங்களின் கூட்டம், ஒலியினுல்—ஓசையாலும், நகுவெண் திங்கள்—விளங்காநின்ற வெள்ளிய சந்திரனுனவன், உடல்—வடிவமானது, பழகுறும்—நிலையாகப் பொருந்தியிருக்கின்ற, களங்கால்—கறுத்த களங்கத்தினுலும், பாகசாதனன்—இந்திரனது, கூர்ங்கோட்டு—கூரிய கொம்புகளையுடைய, மழகளிறு—இளமை பொருந்திய யானையானது, உமிழ்—சொரிகின்ற, மதத்தால்—மதநீர்ப் பெருக்கினுலும், மலர்மிசைக்கடவுள்—தாமரைமலரில் வீற்றுள்ள பிரமனது, ஊர்தி—வாகனமாகிய அன்னமானது, அழகுறும்—அழகு பொருந்திய, நடையால்—நடையினுலும், அன்றி—அல்லாமல், அறிதரப்படா—அறியப்படுவனவல்ல. [எ—று.]

[கு-ரை.] எனவே அருவி, சந்திரன், இந்திரனது யானை, அன்னம் இவைகள் வெண்மை நிறத்தை உடையனவாதலால் அம்மலையின் நிறத்தோடு வேறுபாடறிய முடியாதபடி இருக்கின்றன. அவற்றை மேற்கண்ட காரணங்களால் அறியமுடியும். பொதுக்குணமாகிய வெண்மையினுலே அம்மலையிலே மறைபட்ட 'அருவி' முதலியவற்றிற்கு, ஒலி முதலிய கார

ணங்களாலே வேற்றுமை காணப்படுதலால் மறையாமையணி மலர் என்றது தாமரை மலரைக் குறித்தது; 'பூவெனப்படுவது பொறிவாழ் பூவே' என்றமையால். மழகளிறு உரிச்சொற்றொடர். பாகன் என்னும் அசுரனைக் கொன்றமையால் இந்திரன் பாகசாதனன் எனப்பட்டான். (6)

விளங்கொளி துளும்பு மந்த
வெள்ளியங் கிரியி னுச்சி
துளங்கொளி விரிக்குஞ் செம்பொற்
சுடர்மணிச் செய்குன் றொன்று
களங்கறு பராரைத் துய்ய
கருப்புரக் குவாலின் மீது
வளங்கெழு சுடரொன் றுற்று
வயங்குதல் போலு மன்றே.

[இ-ள்.] விளங்கு ஒளி-விளங்குகின்ற ஒளியானது, துளும்பும்-ததும்புகின்ற, அந்த வெள்ளியங்கிரியின்-அந்த கைலாச மலையினது, உச்சி-சிகரத்தின்கண்ணே, துளங்கு-அசைகின்ற, ஒளி-கதிர்களை, விரிக்கும்-பரப்புகின்ற, செம்பொன்-செம் பொன்னினாலும், சுடர்மணி-ஒளிவிடுகின்ற மாணிக்கங்களி னாலும் ஆகிய, செய் குன்று ஒன்று-செய்யப்பட்ட மலை ஒன்று, வயங்குதல்-விளங்குதலானது, களங்கு அறு-குற்றம் இல்லாத, பராரை-பருத்த அரையையுடைய, துய்ய-தூயதாகிய, கருப் புரக்கு வாலின் மீது-கற்பூரராசியின்மேல், வளம்கெழு-வளம் பொருந்திய, சுடர் ஒன்று-தீபம் ஒன்று, உற்று-பொருந்தி, வயங்குதல் போலும்-விளங்குதல்போலும். [எ-று.]

[கு-ரை.] சுடருக்கு வளம் மழுங்காமை, தூண்டப்படாமை, அணை யாமை முதலியன. வயங்குதல் முன்னும் கூட்டி உரைக்கப்பட்டது. செய் குன்று விளங்குதலைச் சுடர் விளங்குதலாகக் குறித்தமையின் தற்குறிப்பணி என்பர் விசாகப்பெருமாள் ஐயர்; பிறர் பிறவணியும் கூறுப. செம்பொன்-பண்புத்தொகை. செய்குன்று வினைத்தொகை. 'அன்று', 'ஏ' அசைகள் (7)

அரசாட்சி மண்டபச் சிறப்பு

இனையதிக் கைலை வெற்பி
னிறையர சிருக்கை யொன்றுண்
டனையதை யணிய மாட்டா
தப்புறம் போயி னனென்

றெனையிகழ் பவர்க ளில்லை
யிலங்குமம் மண்டபத்தின்
தனிவள மனந்த னாலும்
சாற்றிடற் கரிது மாதோ.

[இ-ள்.] இனையது-இப்படிப்பட்டதாகிய, இக்கைலைவெற்பில்-இக்கைலாச மலையினிடத்து, இறை-சிவபெருமானது, அரசிருக்கை ஒன்று-அரசாட்சி மண்டபம் ஒன்று, உண்டு-உளவாம், அனையதை-அம்மண்டபத்தை, அணியமாட்டாது-புகழாது, அப்புறம்-அதன் பிற்பட்ட பகுதியைச் சொல்லுவான், போயினான் என்று-சென்றான் என்று, எனை-என்னை, இகழ்பவர்கள்-இழித்துப் பேசுபவர்கள், இல்லை-இருக்கமாட்டார்கள் (ஏனெனில்), இலங்கும்-விளங்குகின்ற, அம்மண்டபத்தின்-அந்த மண்டபத்தினது, தனிவளம்-ஒப்பற்ற அழகை, அனந்தனாலும்-(ஆயிரம் நாவுடையயன் என்று சொல்லப்படுகின்ற) ஆதிசேடனாலும், சாற்றிடற்கு-சொல்லுவதற்கு, அரிது-முடியாது. (ஆதலால்) [எ-று.]

[கு-ரை.] ஆதிசேடனுக்கு ஆயிரம் நாவுண்டென்றும், புலமைமிக்குடையனென்றும் எல்லா நூலாசிரியரும் கூறுவர்; ஆதலின் அவனாலே முடியாதெனின், ஒரு நாவுடையனைப் புலமை குறைந்தவனாகிய என்னால் முடியாதென்று கூறல் வியப்பன்று ஆதலின் எனை ஒருவரும் இகழார் என்றார். 'எனை இகழ்பவர்கள் இல்லை' என்றதின் காரணம் 'அனந்தனாலும் சாற்றிடற்கரிது' என்ற வாக்கியத்தைக்கொண்டு சாதிக்கப்படுதலால் செய்யுட்குறியணி இறை-எல்லாவற்றிலும் தங்கி இருப்பவன் எனக் காரணக்குறி. இறை-தங்குதல். இருக்கை-தொழிற்பெயர்; ஈண்டு மண்டபத்தைக் குறித்தலின் ஆகுபெயர். 'மாது' 'ஓ' என்பன அசைகள். (8)

இறைவன் ஆதனத் திருத்தற்சிறப்பு

அன்ன மண்டபத்து அங்கணன் ஓர்பகல்
மின்னு செம்மணி வேதிகை யொன்றன்மேல்
மன்னு செங்கதிர் மண்டலத் துற்றனன்
என்ன வந்தங் கிருந்தன னென்பவே.

[இ-ள்.] அன்னமண்டபத்து-அத்தன்மையான மண்டபத்தில், அங்கணன்-கடவுள், ஓர்பகல்-ஒருநாள், வந்து-தோன்றி, அங்கு-அவ்விடத்து, மின்னு-விளங்காநின்ற, செம்மணி-சிவந்த மணிகளாலாகிய, வேதிகை ஒன்றின்மேல்-மேடை ஒன்றின் மேலே, மன்னு-(உலகம்) நிலைபெறுதற்கேதுவாகிய, செங்கதிர்-

சூரியன், மண்டலத்து-பிம்பத்தின்கண், உற்றனன் என்ன-இருத்தல்போல, இருந்தனன்-வீற்றிருந்தனன். [எ—று.]

[கு-ரை.] அங்கணன்-அழகிய கண்ணன்; கண்ணிற்கு அழகு கண்ணோட்டம் ஆதலில் அருள்வடிவான இறைவனது கண்ணும் அருள் என்பார் 'அங்கணன்' என்றார். சூரிய விம்பத்தில் இறைவன் இருத்தல்போல, வேதிகைமேல் இறைவன் இருந்தனன் என்க. சூரியனில் இறைவன் இருக்கிறான் என்பது சான்றோர் கொள்கை; அதனால் ஆலயங்களில் நடக்கும் பெருவிழாக்களில் சூரிய ஊர்தியில் இறைவனை எழுந்தருளுவிப்பது வழக்கமும் உளதாதல் காண்க. சூரிய மண்டலத்தில் இறைவன் தங்கியிருத்தல்போல வேதிகையின்மேல் தங்கி இருந்தான் என்றமையின் உவமையணி 'மண்டலத்து' என்பதில் கண்ணுருபும், பயனும், உவமவுருபும் தொக்கு நின்றது. 'என்ப', 'ஏ' அசைகள். (9)

இது முதல் ஆறு பாட்டுக்கள் கடவுளின் சிறப்பு

குழவி யாயுடற் கூனி நரைத்ததோர்
விழவு வாண்மதி வேணியின் மேவுறக்
கிழவி யாகிக் கிரிக்கோன் மகப்பெறு
மழகு நீர்மக ளாயிடை வாழ்வுற.

[இ-ள்.] குழவியாய்-பிறையாகி, உடல்கூனி-உடல் வளைவுற்று, நரைத்தது-வெளுத்ததாகிய, விழவு-விருப்பத்தன்மையாகவுள்ள, வாள்-ஒளிபொருந்திய, ஓர்மதி-ஒப்பற்ற திங்கள், வேணியில்-சடையின் கண்ணே, மேவுற-பொருந்தாநிற்கவும், கிழவியாகி-உரியவளாகி, கிரிக்கோன்-மலையரசனது, மகப்பெறு-குழந்தையெனப்பெற்ற, அழகு-அழகினையுடைய, நீர்மகள்-கங்கையானவள், ஆயிடை-அந்தச் சடையினிடத்து, வாழ்வுற-வாழாநிற்கவும். [எ-று.]

[கு-ரை.] பிறைமதியும், கங்கையும் இறைவன் சடையினிடத்து இருந்தன. மலையரசனுக்குக் கங்கையும் பார்வதியும் புதல்விகள் என சிவபுராணங்கள் கூறுதலின் இவ்வாறு உரை கூறப்பட்டது. "கிரிக்கோன் மகப்பெறும்" என்றற்கு மலையரசனது மகளான உமைபெற்ற என்றும் கூறுவர். உமையினது கரத்தில் கங்கை பிறந்தாள் என்பது சிவபுராண வரலாறு. குழந்தையாகவிருந்தும் கூனுற்று நரைத்தது எனவும் கிழவியாகியும் மகப்பெற்று அழகுடையளாயினாள் எனவும் கூறும் நயம் போற்றற்குரியன. (பிறைசூடிய வரலாற்றை நோக்குமிடத்து) காமத்தில் இளமையிலேயே பற்றுமிக்குடையர் விரைவின் மூப்பெய்துவர் என்ற உலகியற்கையும், இறைவி மூப்பெய்தினும் (ஆதியில்லாதாள் ஆதலின்) மகப்பெறுதற்

சூரியனாதலோடு அழகுநீர்மை மாறுதவனென்று இறைமைத் தன்மை தோன்றவும், கூறிய நயங்கள் உணர்தற்குரியன. இது முதல் ஆறு பாட்டிலும் உள்ள மேவுற முதலிய வினையெச்சங்கள் ஏழாம் பாட்டின் முதலிலுள்ள 'இருந்த' வென்னும் பெயரெச்சவினைகொண்டு முடிந்தது. இதனைக் குளகம் என்பர், "குளகம் பல பாட்டொரு வினைகொள்ளும்" என்பது இலக்கணமாதலின். குழவி நரைப்பதும், கிழவி மகப்பெற்று அழகாயிருத்தலும் முரணாக இருத்தல்பற்றி இது முரணணி. (10)

முக்கண்களின் சிறப்பு

அங்கி யென்றற் கடுப்ப மேனோக்கிய
செங்க ணொன்று திருநுதல் சேர்தரத்
திங்க ளென்றுந் தினகர னென்றும்வா
ழங்கண் மல்கு மருண்மடை போன்றுற.

[இ-ள்.] அங்கி-நெருப்பு, என்றற்கு-என்று சொல்லுதற்கு, அடுப்ப-பொருந்த, மேல் நோக்கிய-மேலே நோக்கிக்கொண்டிருக்கிற, செங்கண் ஒன்று-சிவந்த விழி ஒன்று, திருநுதல்-அழகிய நெற்றியினிடத்து, சேர்தர-சேர்ந்திருக்கவும், திங்கள் என்றும்-சந்திரன் எனப்பட்டும், தினகரன் என்றும்-சூரியன் எனப்பட்டும், வாழ்-வாழ்கின்ற, அம்கண்-அழகிய விழிகள் இரண்டும், மல்கும்-பெருகுகின்ற, அருள்-அருளாகிய (வெள்ளத்திற்கு) மடைபோன்று உற-மதகுகள் போன்று இரா நிற்கவும். [எ-று.]

[கு-ரை.] நெருப்பு மேனோக்கலும், நீர் கீழ் நோக்கலும் இயல்பு. "தேங்குதண்புனல் மேல் நோக்கா" என்று பின் கூறுவர். ஈண்டு "அங்கி யென்றற்கடுப்ப மேனோக்கிய" என்றார். எனவே நீர் நெருப்பினது இயல்பு கூறினமையின் தகுதியணி. இறைவன் அருள் வடிவம் ஆதலின் அருள் வெளிப்படுதற்குரிய மடைகளாக இரு கண்களையும் குறித்தலின் தற்குறிப்பணி. இறைவனுக்கு மூன்று கண்களும் முச்சுடர் என்பர் அறிஞர். இறைவனது பல பெயர்களுள் சூரியன், சந்திரன், அக்கினியாகிய மூன்று கண்களையுடையவன் என்பதும் ஒன்று (சோம சூரிய அக்கினி லோசனாய நம: என்பது அஷ்டோத்திரம்). என்று இரண்டும் எனப்பட்டென செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தன. (11)

காது கழுத்து இவைகளின் சிறப்பு.

எண்ணு மன்ப ரிதயமென் புட்படு
கண்ணி போன்றுவார் காதிடைத் தோடுற
நண்ணு மாதுமை நன்னுதற் பொட்டெனா
வண்ண நீல மணிமிடற் றொன்றுற.

[இ-ள்.] எண்ணும்-நினைக்கும், அன்பர்-அடியார்களது, இதயம்-நெஞ்சம், என்-என்று சொல்லுகின்ற, புள்-பறவைகள், படும்-படுகின்ற (வீழ்கின்ற) 'கண்ணிபோன்று-வலைபோல, வார்காதிடை-நெடிய செவியினிடத்து, தோடு-தோடுகளானவை, உற-பொருந்தாநிற்கவும், நண்ணும்-பக்கத்தில் இருக்கின்ற, மாது-கண்டார்க்கு விருப்பந்தரும் அழகிய மகளாகிய, உமை-உமா தேவியினது, நன்னுதல்-நல்ல நெற்றியிடத்துள்ள, பொட்டென-திலகத்தைப்போல, நீலவண்ணம்-கருநிறமுடைய நஞ்சக்கறையானது, மணிமிடற்று-அழகிய கண்டத்திடத்து, ஒன்றுற-பொருந்தா நிற்கவும், [எ-று.]

[கு-ரை.] எண்ணுதிருக்கும் எவரையும் கண்ட மாத்திரத்துத் தன்வசப்படுத்தும் தன்மையது தோடு ஆதலின் கண்ணியாகிய 'தோடு' என்றார், எனவே அன்பர்கள் இறைவனது தோட்டினைக் கண்டார் வேறொன்றில் மனதைச் செலுத்தார். 'தோடுடைய செவியன்' என்றதூம் இதுபற்றியே. இறைவன் நஞ்சுண்ட வரலாறு :— அமுதம் விரும்பித் தேவரும் அசுரரும் பாற்கடல் கடைந்தகாலை ஆண்டெழுந்த நஞ்சினைக்கண்டு அஞ்ச, அயனும் மாலும் ஏனைய தேவரும் அந்நஞ்சிற்கஞ்சி அரனின் அடியிணைபணிய அவர்தம் குறைதீர்த்தற்பொருட்டு நஞ்சினை உண்டான் என்பதாம். இதனால் ''நீலமணிமிடற்று ஒருவன்போல'' ''கறைமிடறு அணியலும் அணிந்தன்று'' என்றார் பிறரும். 'மாதர் காதல்' என்பதுபற்றி மாது என்பதற்கு விருப்பந்தரும் அழகு என உரைக்கப்பட்டது. 'கண்ணி' என்பது பறவைகளைப் பிடித்தற்கு வைக்கப்படுவதோர் கயிற்றுமுடி. இதயத்தைப் புள்ளாக உருவகஞ் செய்தமையின் உருவகவணி. தோட்டினைக் கண்ணியாகக் குறித்தலின் தற்குறிப்பேற்றவணி, உவமையணி, எனவே கலவையணி. (12)

மான் மழுக்களின் இயல்பு உணர்த்தியது

நகந்த ருங்கொடி கண்களை நாணியே
முகந்தி ரும்பு முறையுற் றிரும்புமான்
மகிழ்ந்தி டங்கதிர் வீர மழுவலத்
தகுந்த குந்தகு மென்று தயங்குற.

[இ-ள்.] நகம்-மலையினாலே, தரும்-தரப்பட்ட, கொடி-பூங்கொடிபோல் பவளாகிய உமையினது, கண்களை-விழிகளை, நாணியே-நாணுதலால், முகம்-முகமானது, திரும்பு முறையின்-திரும்பும் முறைப்படி, திரும்புமான்-திரும்பிய மானானது, மகிழ்ந்து-மகிழ்வுற்று, இடம்-இடது கையிலும், கதிர்-கிரகணத்தையுடைய, வீரமழு-வீரம்பொருந்திய மழுவானது, தகுந்தகு மென்று-(ஒலிசெய்து எரிதலினாலே அப்படித் திரும்பு

தல்) தகுந்தகுமென்று சொல்வதுபோன்று, வலம்-வலது கையிலும், தயங்குற-விளங்காநிற்கவும். [எ-று.]

[கு-ரை.] கொடி-மலையிற்றோன்றலும் இயல்பாயினமையின் 'நகந்தரு கொடி' யென்றார். கொடி-உவமையாகுபெயர். உமைகண்ணுக்கு நாணிய தாக மான் திரும்பலைக்கூறி இயல்பாகத் திரும்பி இருப்பதை நாணங் காரண மாகத் திரும்பியது என்று கூறியிருத்தல் ஏதுத்தற்குறிப்பணி. தகுந்தகு மென்றது ஒலிக்குறிப்பையும் துணிவுப்பொருளையும் உணர்த்தவந்த அடுக்கு. மழு எரியும்போது உண்டாகும் தகும் தகும் என்ற ஒலிக்குறிப்பை அவ்வாறு சொல்வதாகக்கூறினார். இது பொருட்டற்குறிப்பு. வந்தியோன் சொல்லு தலை மழுவின் மேலேற்றிக் கூறினார். (13)

கங்கணம், பதக்கம், கலைபற்றிக் கூறுகின்றது

சொற்றெ ரிந்த சுடர்மணி கங்கண
முற்றி லங்க வொருகருங் கேழலின்
பற்றி ருந்த மதாணியிற் பட்டெனப்
புற்ற ருங்கலை யுற்றரை பொற்புற.

[இ-ள்.] சொல் - சொல்லிலக்கண முதலியவைகளை, தெரிந்த-அறிந்துள்ள, சுடர்-விளங்காநின்ற, மணி-மாணிக் கத்தையுடைய, கங்கணம்-(ஆதிசேடன் வடிவமாகிய) கங்கண மானது, உற்று-(கையில்) பொருந்தி, இலங்க-விளங்காநிற்கவும், ஒரு கருங்கேழலின்-ஒரு கரிய பன்றியினது, பல்-கோடானது, மதாணியின்-பதக்கம்போல, திருந்த-(மார்பினிடத்து) அழகு பெறாநிற்கவும், புல்-புலியினாலே, தரும்-தரப்பட்ட, கலை-உடை யானது, அரை-இடையினை, உற்று-அடைந்து, பட்டென-பட்டாடைபோல, பொற்புற-அழகு செயா நிற்கவும். [எ-று.]

[கு-ரை.] சொல், அரை ஆகுபெயர்கள். 'சொல் தெரிந்த' என்ற அடையால் ஆதிசேடன் என வருவித்துரைக்கப்பட்டது. ஒருகருங்கேழல்-இரணியாக்கதனைக்கொன்ற வராகத்தையடக்கி அதன் கோட்டினை மார்பில் அணிந்தார் என்னும் வரலாற்றைக் குறிப்பது. தாருகவனத்து ரிஷிகள் இறைவனை வெல்லவேண்டி அனுப்பியவைகளுள் புலியும் ஒன்று. அப் புலியைவென்று அதன் தோலை இடையிலே ஆடையாக அணிந்தார் என் பது புராண வரலாறு. 'கேழலின்' இன்-ஐந்தாம் வேற்றுமை ஒப்புப்பொரு ளது. பதக்கம்போல பன்றியின் பல்லும், பட்டாடைபோல புலியின் தோலும் என்ற இரண்டும் உவமையணி. (14)

திருவடிச் சிறப்பு.

புரத்தை வென்ற நகைக்குமென் போதினேன்
சிரத்தை வென்றசெங் கைக்குஞ் சிலைமத

னெரித்த கண்ணிற்கு மின்றெனக் கூற்றடுத்
தரித்த வீரக் கழலொடு தாளுற.

[இ-ள்.] புரத்தை-முப்புரங்களை, வென்ற-(தீக்கொளுவி) வெற்றிகொண்ட, நகைக்கும்-சிரிப்பிற்கும், மென்போதினன்-மெல்லிய தாமரை மலரில் இருக்கின்ற பிரமனது, சிரத்தை-தலையை, வென்ற-(நகத்தால் கிள்ளி) வென்ற, செங்கைக்கும்-சிவந்த கைகளுக்கும், சிலைமதன்-கருப்பு வில்லையுடைய மன்மதனை, எரித்த-எரித்துவென்ற, கண்ணிற்கும்-கண்களுக்கும், இன்றுஎன-(இப்படி ஒரு விருதும்) இல்லை என்னும்படிககு, கூற்று-எமனை, அடு-கொன்று, தரித்த-பூணப்பட்ட, வீரக்கழலொடு-வீரக்கழல் என்னும் அணியோடு, தாள்-திருவடி, உற-பொருந்தாநிற்கவும். [எ-று.]

[கு-ரை.] இறைவன் இயற்றிய திரிபுரம் எரித்தல், அயன் சிரம்கொய்தல், காமனை எரித்தல் ஆகிய சிறந்த செயல்கள் மூன்றையும் செய்த பற்கள் கைவிரலில் உள்ள நகம், நெற்றிவிழி, இவைகளில் வீரத்திற்கேற்ப வெற்றிப்பூண்களை அணியாது, மார்க்கண்டன்பொருட்டு கூற்றுவனை அழித்த திருவடிக்கு மாத்திரம் வீறுதோன்ற கழல் அணிந்தனர் என்பதை நகைக்கும் கைக்கும் கண்ணிற்கும் இன்று என 'வீரக்கழல் தாளொடுஉற' என்றார். திரிபுர தகனம் தேவர்கள் பொருட்டும், அயன்தலை கொய்தல் அவன் ஒருவன் தருக்கொழிதற்பொருட்டும், காமனை எரித்தல் தன் உண்மை அறியாது தவறிழைத்தற்காகவும் செறுத்தது. ஆதலால் அவைகள் புகழத் தக்கனவல்ல, தன்னை மனவாக்குக் காயங்களால் எண்ணி வாழ்த்தி வணங்கிய அடியாராகிய மார்க்கண்டர்பொருட்டு அவரது துன்பத்தைத் தொலைத்தலே தலைமையானதென்று கருதி துன்பம் துடைந்த தாளுக்கு வீரக்கழல் அணிந்தார் என்ற நயம் பாராட்டத் தகுந்தது. மதன் எரித்த இரண்டாம் வேற்றுமைத்தொகை. அடூஉ சொல்லிசையளபெடை. உடம்பினின்றும் உயிரைக் கூறுபடுத்தலால் 'கூற்று' என்பது காரணக்குறி 'சிரம்' வடசொல்லென்பர். 'சிறம்' என்னும் பகுதியினின்றும் சிறந்தது, சிறப்பு என்ற சொற்கள் வழங்குவதை நோக்க 'சிறம்' என்பதும் தமிழ்ச்சொல்லே. ஆரிய மொழியில் 'சிறம்' என்பது வழங்குமிடத்து 'ற'கார 'ர'காரபேதமின்றி 'சிரம்' என வழங்கலாயினர்; பின்னர் ஆரியம் திரிந்து வடமொழியான காலத்து அவ்வாறே 'சிரம்' என உருப்பெற்று, 'சிறம்' என்பது வழக்குவீழ 'சிரம்' வடசொல்லென்று கொள்வாராயினர். மதன் என்று பெயர் பின்னால் வந்ததால் 'சிலை' என்னும் அடைமொழி கரும்பு வில்லைக் குறித்தது. (15)

கடவுளிடத்து உமையிருந்தமை

இருந்த வாதி யிடத்தி லிருந்தனள்
பரந்த வானும் படியு முயிர்களும்

ஒருங்கு தோன்ற வுதவிக் கருவுறீஇ
வருந்தி லாத மணிவயிற் றன்னையே.

[இ-ள்.] இருந்த-இவ்வாறு வீற்றிருந்த, ஆதியிடத்தில்-கடவுளிடத்தில், பரந்தவானும்-அகன்ற விண்ணுலகமும், படியும்-மண்ணுலகமும், உயிர்களும்-(இவற்றிலுள்ள) ஆன்மாக்களும், ஒருங்கு-ஒருசேர, தோன்ற-உண்டாகும்படி, உதவி-ஈன்றும், கருவுறீஇ-சூலுற்று, வருந்திலாத-நோயுறாத, மணிவயிற்று - அழகிய வயிற்றையுடைய, அன்னையே - தாயாகிய உமாதேவியானவள், இருந்தனள்-வீற்றிருந்தாள். [எ-று.]

[கு-ரை.] உதவி என்பதின் ஈற்றில் உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. சூலுற்றுப் பெருளாயினும் நினைத்த மாத்திரையில் தோன்றியன என்பது பெறப்பட்டது. ('நித்தன் நங்குரு குகேசன் நினைவு மாத்திரையினுமால்' என்பதூஉம் நோக்குக). சூலுற்று வருந்துதலாகிய காரணம் இல்லாதிருந்தும் உலகுயிரனைத்தும் ஒருங்குதோன்ற உதவலாகிய காரியம் பிறந்தலின் இது பிறிதாராய்ச்சியணி; தண்டியாசிரியர் விபாவனை யென்பர். "உலகறி காரண மொழித்தொன்றுரைப்புழி, வேறொரு காரணம் இயல்பு குறிப்பின், வெளிப்பட வுரைப்பது விபாவனையாகும்". முன் செய்யுட்களில் வந்துள்ள வினையெச்சங்கள் எல்லாம் இச்செய்யுளில் உள்ள 'இருந்த' வென்னும் பெயரெச்சவினை கொண்டது. அன்னையே இருந்தனள் எனக்கூட்டுக. கருஉறீஇ-சொல்லிசை யளபெடை. (16)

இது முதல் ஒன்பது பாட்டுக்கள் உமாதேவியின் சிறப்பு

கூந்தல்

இறைவ னங்க ணெனுமுச் சுடர்களும்
உறவு கொண்ட விருளெனு மோதிமே
லறவ னென்றவவ் வண்ணல் புனைந்தரு
ணறவு மிழ்ந்த நறுமலர் தாழ்ந்திட.

[இ-ள்.] இறைவன்-சிவபிரானது, அங்கண்-அழகிய கண்கள், எனும்-என்று சொல்லப்படுகின்ற, முச்சுடர்களும்-சூரியன், சந்திரன் அக்கினி ஆகிய மூன்றொளிகளும், உறவுகொண்ட-நட்புக்கொள்ளப்பெற்ற, இருள்-இருட்டு, எனும்-என்று சொல்லப்படுகின்ற, ஓதி மேல்-கூந்தலின்மேல், அறவன்-தருமவடிவினன், என்ற-என்று சொல்லப்படுகின்ற, அவ்வண்ணல்-அந்தத் தலைவனாலே, புனைந்தருள்-அலங்கரித்து அருளப்பட்ட, நறவு-தேனை, அவிழ்ந்த-சொரிகின்ற, நறுமலர் வாசனையுடைய மலர் மாலையானது, தாழ்ந்திட-தொங்காநிற்கவும். [எ-று.]

[கு-ரை.] தருமவடிவினனாதலின் 'அறவன்' என்றார். 'அறவாழி யந்தணன்' என்றார் பிறரும். 'நறுமலர்' என்பது மாலையைக் குறித்தலால் ஆகுபெயர். இதனால் இறைவனது பார்வை ஒழிவின்றிக் கூந்தலின்மேல் வைக்கப்பட்டதென்பதும், அதன்மேல் 'அண்ணல் புனைந்தருள்' எனவே தேவிமேலுள்ள அன்பின்மிகுதி காட்டப்பட்டதென்பதும் அறிக. இருள் என்னும் ஒதி. **உருவகம்** இனைத்தென அறிந்த சினைமுதற் கிளவி ஆதலின் முச்சுடர்களும் என முற்றும்மை வேண்டி நின்றது. முச்சுடர்களும் உறவுகொண்ட என்பது மிகை ஒற்றுமை, எனவே **மிகைஒற்றுமை உருவகவணி**. இது முதல் ஒன்பது பாட்டுக்கள் குளகம். (17)

நெற்றிச் சுட்டி

ஏற்று வார்கொடி எந்தை சடைப்பிறை
யாற்றுள் வீழ்வுற் றிறப்பதற் கெண்ணுறத்
தோற்ற மேவு சுடர்த்திரு நெற்றியின்
ஞாற்று மோர்மணிச் சுட்டி நலந்தர.

[இ-ள்.] ஏற்றுவார்கொடி - இடபத்தினது நெடிய கொடியையுடைய, எந்தை-சிவபெருமானது, சடைப்பிறை-சடையிலுள்ள பிறை மதியானது, ஆற்றுள்-(அங்கிருக்கிற) கங்காநதியுள், வீழ்வுற்று-விழுந்து, இறப்பதற்கு-உயிர்விடுதற்கு, எண்ணுற-நினையாநிற்க, தோற்றமேவும்-வடிவம் பொருந்திய, சுடர்-ஒளியையுடைய, திருநெற்றியில்-அழகிய நெற்றியின்கண், ஞாற்றும்-தொங்கவிடப்பட்ட, ஓர் மணிச்சுட்டி-ஒரு மாணிக்கச் சுட்டியானது, நலந்தர-அழகுசெய்யாநிற்கவும், [எ-று]

[கு-ரை.] 'பிறைபோலும்நுதல்' என உவமை கூறப்படும் பிறை "உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை" என்றபடி, உயர்ந்ததாக இருந்தும், உமாதேவியின் நெற்றி தன்னைவிட அழகின்மிக்கதெனப் பிறர் கூறக்கேட்டு, 'மானம் அழிந்தபின் வாழாமை முன்னினிதே' என்றதையுன்னி, உயிர் விடுவான்வேண்டி, அண்மையிலுள்ள ஆற்றின் வீழ்ந்திறக்கவெண்ணியது. தற்கொலை செய்துகொள்வோர் புனல்மூழ்கியும், கயிறுகொண்டுஞான்றும், நஞ்சுண்டும் உயிர்விடுவர் என்ற வழக்கையுட்கொண்டு இவ்வாறு கூறினார் ஆசிரியர். பிறைக்கு அவ்வெண்ணுதலின் சம்பந்தம் இல்லாதிருந்தும் இருத்தலாகக் கூறினமையின். தொடர்புயர்வு நவிற்சியணி. ஏறுவார்+ என்பது ஏற்றுவார் என ஆயிற்று, "நெடிலோடுயிர்த்தொடர்க்குற்றுகரங் களுட் டறவொற்றிரட்டும் வேற்றுமை மிகவே" என்றலின் (18)

கண் வாய் சிறப்பு

ஈசனார் முகமென்னு முளரியி
லாசை கூரு மளிவிழிக் காரருள்

வாச மாமலர் வாய்க்கிள வெண்ணகை
தேசு லாமணி யாகச் சிறந்துற.

[இ-ள்.] ஈசனுர் முகம் என்னும்-கடவுளது முகமெனப் பட்ட, முளரியில்-தாமரை மலரிடத்து, ஆசைகூரும்-ஆவல் மிகுகின்ற, அளிவிழி-வண்டுகளாகிய கண்களுக்கு, ஆர் அருள்-நிறைவுற்ற அருளும், வாசமாம்-வாசனையுடைத்தாயிருக்கின்ற, மலர் வாய்க்கு-செவ்வல்லி மலர்போலுள்ள வாய்க்கு, இள வெண் நகை-சிறிய வெள்ளிய சிரிப்பும், தேசுஉலாம்-ஒளி தவழ்கின்ற, அணியாக-ஆபரணங்களாக, சிறந்துஉற-சிறந்து தோன்ற நிற்கவும். [எ-று.]

[கு-ரை.] எல்லா உறுப்புகளுக்கும் அணியுடைமைபற்றி அணி அணியப் பெருத கண்ணுக்கும் வாய்க்கும் அருளும், புன்னகையும் முறையே ஆபரணமாகக் கூறப்பட்டன. தேவியினது பார்வை இடைவிடாது கடவுள் முகத்திலே செல்கின்றது என்பது கருத்து. 'முகம்' வடசொலன்று தமிழ்ச்சொல் என்பது நச்சினர்க்கினியர் கருத்து (தொல். எழுத். சூ. 61, உரை). விழிக்கு அருள், வாய்க்கு வெண்ணகை அணியாகச் சிறந்துற என முடிக்க. முகமெனும் முளரி உருவகம். அளிவிழி, மலர்வாய்-உவமத் தொகைகள். முளரியில்-இல் ஏழாம் வேற்றுமை இடப்பொருளது. (19)

காதணி

மாணப் பூண்புனை மற்றை யுறுப்பெனப்
பூணுட் பட்டிடா தோலையின் பூண்என
யாணர்ச் செம்பொ னிலங்கொளி யோலைமேல்
காணக் காதெனும் வள்ளை கவின்செய.

[இ-ள்.] யாணர்-அழகிய, செம்பொன்-செம்பொன்னுலாகிய, இலங்குஒளி-விளங்குகின்ற கதிரையுடைய, ஓலைமேல்-காதணியாகிய ஓலைமேலே, காண்-காணப்படுகின்ற, அக்காது எனும் வள்ளை-அந்தக்காதுகள் எனப்படும் பெயரை உடைய வள்ளைகளானவை, மாண-மாட்சிமைப்பட, பூண்-ஆபரணங்களால், புனை-அலங்கரிக்கப்பட்ட, மற்றை உறுப்பென-பிற கை கால் முதலிய உறுப்புகளைப்போல, பூண்-ஆபரணத்துக்கு, உட்பட்டிடாது-உட்படாமையினுலே, ஓலையின்-அக்காது ஓலையினது, பூண்என-ஆபரணங்கள்போல, கவின்செய-அழகு செய்யா நிற்கவும். [எ-று.]

[கு-ரை.] பூண் என காண் அக்காது எனும் வள்ளைகவின்செய எனக் காதுகளைப் பூண்களாகக் குறித்தலால் தற்குறிப்பணி. மற்றை உறுப்புக்களுக்கு அவற்றின் அணிகள்போல இக்காதுகள் ஓலைகளுக்கு அழகு

செய்கின்றன என்பதாம், பூண் என்பது-உறுப்பு முதலியவற்றை உள்ளடக்கிக்கொண்டு சுற்றிலும் வளைந்திருப்பது. (20)

மங்கல நாண் சிறப்பு

ஓங்கு வாவுடை யும்ப னயனரி
தாங்கு மாவி தணந்தொழி நாளினும்
வாங்கு றுவெழின் மங்கல நாணொளி
தேங்கு பூணர சென்னச் சிறந்திட.

[இ—ள்.] ஓங்கு-உன்னதமாகிய, உவாவுடை-யானையையுடைய, உம்பன்-தேவனாகிய இந்திரனும், அயன்-பிரமனும், அரி-நாரணனும், தாங்கும்-தம்மாலே தாங்கப்படுகின்ற ஆவி-உயிர்களானவை, தணந்து-(உடல்களினின்றும்) நீங்கி, ஒழி நாளிலும் - அழியவருங்காலத்தும், வாங்குறு - களையப்படாத, எழில்-வன்மையுடைய, மங்கலநாண்-மங்கல நூலானது, ஒளி-ஒளியினால், தேங்கு-நிறைந்த, பூண்-ஆபரணங்களுக்கு, அரசு என்ன-அரசுபோல, சிறந்திட-சிறவா நிற்கவும். [எ—று.]

[கு-ரை.] மூவரும் உயிர் இழப்பர் எனவே ஏனைய தேவர் உயிர் இழப்பு சொல்லாமையே பெறப்பட்டது. எனவே யாவும் மடியும் என்பதும் அவைகளைச் செய்வோன் கடவுள் எனவே அவனுக்கும், அவன் சத்தியாகிய உமாதேவிக்கும் அழிவின்மையும் உணர்க. மங்கலநாணைத் தலைமைப் பூண் அரசாகக் குறித்தமையான் "நற்குறிப்பாரி நூறுகோடி பிரமர்கள் நுங்கினால், ஆறுகோடி நாராயணர் அங்ஙனே, ஏறுகோடி மணலெண்ணின் இந்திரன் ஈறிலாதவன் ஈசனொருவனே" என்ற அப்பர் அருண்மொழியும் நோக்குக. "நாளினும்" உம்மை உயர்வு சிறப்பு உறு ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் எழில் என்னும் பெயர்கொண்டு முடிந்தது. 'தணந்து' என செய்தென் எச்சம் 'செய்' வென்னெச்சப் பொருளில் வந்தது. (21)

முத்துமாலைச் சிறப்பு

அரவு லாஞ்சடை யண்ணலைப் பிள்ளைதான்
பருவ மூன்றினிற் பாடலின் பாறரும்
பொருவில் கொங்கைப் புகழெனப் பொங்கொளி
மருவு மார மணிவடந் தாழ்ந்துற.

[இ—ள்.] அரவு-பாம்புகள், உலாம்-உலாவுகின்ற, சடை-சடையையுடைய, அண்ணலை-சிவபெருமானை, பிள்ளை தான்-(திருஞானசம்பந்தரென்னும்) பிள்ளை, மூன்று-மூன்றாகிய,

பருவத்தில்-வயதில், பாட-(தமிழ்மறை) பாடும்படிக்கு, இன்-இனிமையான, பால்-அமுதத்தைத், தரும்-கொடுத்தருளிய, பொருவில்- ஒப்பில்லாத, கொங்கை-நகில்களினது, புகழ்என-கீர்த்திபோல, பொங்கு-மிகுந்த, ஒளி-ஒளியானது, மருவும்-பொருந்திய, ஆரமணி வடம்-முத்துமணிகளின் வடமானது, தாழ்ந்துற-தொங்காநிற்கவும். [எ—று.]

[கு-ரை.] 'பருவமூன்றினில்' என்பதை மூன்று பருவத்தில் என இல் பிரித்துக் கூட்டப்பட்டது. சீர்காழியில் ஞானசம்பந்தர் உமையவள் தன் கொங்கைப்பால் கறந்து ஊட்டினமாத்திரத்து, 'தோடுடைய செவியன்,' எனப் பாடியருளினர் ஆதலில் "பொருவில் கொங்கை" என்றும், அதற்கு அச்செயல் அதிசயமாதலின் "பெரும்புகழ்" என்றும் கூறினர். முத்தின் இயல்பாகிய வெண்மைத்திறத்தைக், கொங்கையின்புகழ் எனக்குறித்தலின் தற்குறிப்பணி ஆரமணி-இருபெயரொட்டு. இன்பால்-பண்புத்தொகை. 'உலாவும்' என்பது, ஈற்றுமிசையுகரம் மெய்யொட்டுங்கெட்டு 'உலாம்' என நின்றது, "செய்யும் என் எச்சவீற்றுயிர் மெய் சேரலும்" என்பது விதி. தான்-அசை. (22)

திருக்கைகளின் சிறப்பு

பறந்தி டாமணி வண்டு படுமலர்
சிறந்த நீல மலரொடு சீர்பெற
மறந்தி டாது மறைமுடி யின்பொரு
ளறைந்து பைங்கிளி முன்கை யமர்ந்திட.

[இ—ள்.] பறந்திடா-பறவாத, மணிவண்டு - அரதனம் இழைக்கப்பெற்ற வளையல்கள், படும்-ஒலிக்கின்ற, மலர்-தாமரைமலராகிய கைகளில், சிறந்த-சிறப்புவாய்ந்த, நீலமலரொடு-நீலோற்பல மலரோடு கூடி, சீர்பெற-அழகுபெற நிற்கவும், பைங்கிளி-பச்சைக்கிளியானது, மறைமுடியின் பொருள்-மறையினது முடிந்த பொருளை, மறந்திடாது-மறவாமல், அறைந்து - சொல்லிக்கொண்டு, முன்கை - முன்னங்கையில், அமர்ந்திட-விரும்பித் தங்காநிற்கவும். [எ—று.]

[கு-ரை.] வண்டு என்னும் பலபொருள் ஒருசொல் 'பறந்திடா' என்ற வினையடையால் 'வளையல்' என நின்றது "வினைசார்பு இனம் இடம் மேவி விளங்காப் பலபொருள் ஒருசொல்" என்னும் விதிபற்றி. இதனால் உமாதேவியானவள் கைகளில் நீலோற்பல மலரையும் வைத்திருந்தாள் என்பதும், கிளிகள் முன்கையில் அமர்ந்திருந்தன என்பதும் கூறப்பட்டன. 'வண்டுபடுமலர்' இயற்கையைக் கூறியவாறு, 'பறந்திடா மணிவண்டு படு மலர்' என்றமையினால் மலர் என்பதற்குக் கையென உரைக்கப்பட்டது.

மலர் என்னும் பொதுப்பெயர் தாமரையையே சிறப்பாக உணர்த்திற்று; "பூவெனப்படுவது பொறிவாழ் பூவே" என்றமையின், "கிளிக்கூட்டம் சான்றோர்கள் உரை பயிற்றத் தமிழ்கள் மூன்றும் கொண்டாடி இளம் பூவைக் குழாம் தலைசாய்த்து உளம் உருகும் குன்று" என்று பிறரும் இவ்வாறு கூறுதல் காண்க. "பைங்கிளி மறைமுடியின் பொருள் மறந்திடாது அறைந்து முன்கை அமர்ந்திட" என்று கொண்டு கூட்டுக. மலருக்கும் உமையவள் கைக்கும் வேற்றுமை உளதாகவும் வேற்றுமை கூறாதுஒற்றுமை கூறுதலால் ஒற்றுமை உயர்வு நவிற்சி அணி. 'மறந்திடாது' என்பது முற்றெச்சம். 'மறந்திடா' ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். (23)

ஆடையின் சிறப்பு

தோலு டைப்பரன் றொன்மனை யாட்டிதன்
பால டுத்ததெவ் வாறெனும் பட்டரை
மேலு டுத்து விளங்கவொண் மேகலை
நூலி டைக்குறு நோய்புரி யாதுற.

[இ—ள்.] தோல் உடை-தோலாகிய உடையை உடைய, பரன்-மேன்மை பொருந்திய சிவபெருமான், தொல்-பழமையாகிய, மனையாட்டி தன்பால்-மனைவியிடத்து, அடுத்தது-(இது) வந்தது, எவ்வாறு-எந்த வழி, எனும்-என்று வியக்கப்படும், பட்டு-பட்டாடையானது, அரைமேல்-இடையில், உடுத்து-உடுக்கப்பட்டு, விளங்க-விளங்காநிற்கவும், ஒள்-ஒளிபொருந்திய, மேகலை-மேல் ஆடையானது, நூல்-நூல்போன்ற, இடைக்கு-அரைக்கு, உறு-(கூந்தல், நகில் முதலிய பாரத்தினாலே) வருகின்ற, நோய்-நோயை, புரியாதுற-செய்யாது நிற்கவும். [எ—று.]

[கு-ரை.] தகுதியில்லாத தோலுடைப்பரன் மனைவிக்கும் அப்பட்டாடைக்கும் தொடர்பு கற்பித்தலால் தகுதியின்மை அணி தன்-சாரியை, நூலிடை-உவமைத்தொகை, பால்-ஏழாம் வேற்றுமை இடப்பொருள் உருபு, உடுத்தென்பது செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தது. 'அரை' என்பது ஆகுபெயர். 'தோல் உடை' பண்புத்தொகை. (24)

காற்சிலம்பின் சிறப்பு

புத்த னிச்சம் படினும் பொறுமையை
யெய்த்து மற்றை யிருமணத் தம்மியி
லத்தன் வைத்த வடிக்கம லங்களின்
முத்த ரிச்செஞ் சிலம்பு முழங்குற.

[இ-ள்.] புது அனிச்சம்-புதிய அனிச்சமலர், படினும்-மோதினும், பொருமையை-பொறுக்கமாட்டாமையை, எய்த்தும்-அறிந்திருந்தும், அற்றை-அந்தநாளிலே நடந்த, இருமணத்து-பெரிய திருமண காலத்திலே, அம்மியில்-அம்மிக் கல்லின்மீது, அத்தன்-இறைவனால், வைத்த-வைக்கப்பட்ட, அடிக்கமலங்களில்-திருவடித்தாமரையில், முத்து-முத்துக்களை, அரிமணிக்கற்களாகவுடைய, செஞ்சிலம்பு-செம்பொற் சிலம்புகள், முழங்குற-ஒலிசெய்யா நிற்கவும். [எ-று]

[கு-ரை.] மோப்பக்குழையும் அனிச்சமும் அம்மையாரின் மெல்லடிக்கு நெருஞ்சிப்பழம்போலுதலால் பொருமை கூறப்பட்டது. இறைவன் கையினாலே தீண்டி அதன் மென்மையை அறிந்தும் அம்மியின்மேல் பின் வைத்தலின், 'எய்த்தும்' என்று கூறப்பட்டது. 'எய்யாமையே யறியாமையே' என்பது நூற்பாவாதலின் 'எய்த்தும்' என்பதற்கு 'அறிந்தும்' என்று கூறப்பட்டது. எய்யாமை என்பது எதிர்மறை அல்ல அறிதற் பொருட்டாய் எய்தல் எய்த்தல் என்று வாராமையின் என்பர் சேனாவரையர், நச்சர் எதிர்மறையே. உடன்பாட்டில் அறிதற்பொருளில் எய்த்தல் என்பது வரும் என்று எய்த்து நீர்ச்சிலம்பன் என்னும் சிந்தாமணிச் செய்யுளை எடுத்துக்காட்டினார். அம்மி மிதித்தல் என்பது கற்புநெறி வழுவின அகலிகை கல்லாகக் கணவனால் சபிக்கப்பட்டாள், அதனால் கற்புடையவளாக வாழவேண்டும் என்று தலைவன் தலைவிக்கு உணர்த்தும் முகத்தால் கல்லைக் கொணர்ந்து காலால் மிதிக்கச்செய்தல் திருமண காலத்து வழக்கு. மிதித்தற்கு அமைதியுடையதும், மணப்பந்தலில் எளிதில் கிடைப்பதும் ஆகியது அம்மியேயாதலின், அம்மியே மிதித்தற்குரிய கல்லாகக் கொள்ளப்பட்டது; திருமண காலத்தில் அம்மி மிதித்தல் மரபு, அதனைக் கூறுதலால் இது உலகவழக்கு நவிற்சியணி. திருமண நிகழ்ச்சியை ஆசிரியர் இறைவன் விளையாட்டாகப் புனைந்து கூறினார். அனிச்சம்-ஆகுபெயர், அடிக்கமலம்-பண்புத்தொகை, புது+அனிச்சம் என்பது "உயிர் வரின்" என்ற சூத்திரத்து, 'முற்றும் அற்று ஒரோவழி' என்பதனால் நிலைமொழியீற்றுகரம் கெட்டு, "தனிக்குறில் முன்னொற்றுயிர்வரின் இரட்டும்" ஆகலின் புத்தனிச்சம் என்று முடிந்தது. "படினும்" உயர்வு சிறப்பும்மை. 'வைத்த' என்பது செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தது.

## மகாசபை கூட்டுதற் சிறப்பு.

[முதலில் பெண்கள் வருதலைக் கூறுகிறவர் அரம்பைமாதர் வருகையைக் கூறுகிறார்]

இருந்த வாரரு ளெம்பெரு மாட்டிபாற்
குரும்பை நாணுமென் கொங்கைப் பொறையினால்
வருந்து நூற்பக வன்ன மருங்குலார்
அரம்பை மாத ரளப்பில ரெய்தினர்.

[இ-ள்.] இருந்த - (இப்படிப்பட்ட சிறப்புடன்) வீற் றிருந்த, ஆர் அருள்-நிறைந்த அருளையுடைய, எம்பெருமாட்டி யால்-உமாதேவியிடத்து, குரும்பை-தென்னம் பிஞ்சுகள், நாணும்-வெட்கும், என்-எனப்படுகின்ற, கொங்கை-நகில்களி னது, பொறையினுல்-பாரத்தினுலே, வருந்தும்-வருந்துகின்ற, (மருங்குலார்) நூல்பகவு அன்ன-நூல்பிளவு போன்ற, மருங் குலார்-இடையை உடையராகிய, அரம்பை மாதர்-தெய்வ மகளிர், அளப்பிலர்-எண்ணிக்கை இல்லாதவராய், எய்தினர்-அடைந்தார்கள். [எ-று.]

[கு-ரை.] "உயர்ந்ததன் மேற்றே உள்ளுங்காலை" என்றதற்கேற்ப கொங்கைக்கு உவமையாகவேண்டிய குரும்பை கொங்கையினும் தாழ்ந்தமை பற்றி 'நாணும்' என்று கூறப்பட்டது. "குரும்பை மென்முலையார் ஆட" என்றார் பிறரும். 'நூல்பகவு அன்னஇடை' என்றது உயர்வு நவிற்சி. இடையினது இயல்புத்தன்மையைக் கொங்கைப் பொறையால் நேரிட்ட தென்று கூறுதலின் **தற்குறிப்பேற்ற**அணி "ஒடிய மருங்குலைக் கொங்கை கள் வாட்டுறும்" எனப் பிறிதோர் இடத்துக் கூறுவதும் காண்க. "மேல் விளங்க", "முழங்குற, என்ற வினையெச்சங்கள் இந்தச் செய்யுளில் உள்ள 'இருந்த' என்னும் வினைகொண்டு முடிந்தன. 'வருந்தும்' என்னும் பெய ரெச்சம் 'மருங்குல்' என்னும் பெயர்கொண்டு முடிந்தது. 'மருங்குலார்' என்பது குறிப்பு வினைமுற்று. இது எச்சப்பொருள்பட்டு 'குறிப்பு முற்றீ ரெச்சமாகலும் உளவே' என்னும் விதிப்படி, 'அரம்பை மாதர்' என்னும் பெயர்கொண்டு முடிந்தது. 'அளப்பிலர்' முற்றெச்சம். (26)

[அருந்ததி முதலிய எழுவர் வருகை]

முல்லை யந்தொடை யருந்ததி முதலெழு முனிவ
ரில்ல றம்புரி துணைவிய ராமெழு வரும்போய்
வல்ல ரும்பெனக் குவிமுலைப் பனிமலை மகளைச்
சொல்லருந் துதி செய்துவாழ்த் தெடுத்தனர் தொழுது.

[இ-ள்.] எழுமுனிவர்-(வசிட்டர் முதலாகிய) ஏழு முனி வர்களும், இல் அறம் புரி-மனைமறத்தைச் செய்தற்கு, துணைவிய ராம்-துணையாதலை யுடையராகிய, முல்லையந்தொடை-முல்லைப் பூ மாலையையுடைய, அருந்ததி முதல்-அருந்ததியே முதலாகிய, எழுவரும் போய்-எழு பெண்களும் சென்று, வல்-சூதாடு கருவியோ, அரும்பு-தாமரை அரும்போ, என-என்று சொல் லும்படி, குவி-குவிந்த, முலை-நகில்களையுடைய, பனிமலை மகளை-இமயமலையின் மகளாகிய பார்வதி தேவியை, தொழுது-இறைஞ்சி, சொல்லரும் துதி-சொல்லுதற்கு அரிய துதித்தற் குரிய பாக்களை, செய்து-சொல்லி, வாழ்த்து-மங்கல வாழ்த் தினை, எடுத்தனர்-பாடினார்கள். [எ-று.]

[கு-ரை.] வல்லோ, அரும்போ என ஐய ஓகாரங்கள் தொக்கு நின்றன. கற்புடையார்க்கு முல்லை உரித்தாகலின் முல்லையந்தொடை அருந்ததி முதலியோர்க்குக் கூறப்பட்டது. மனையறத்தைச் செய்தற்குத் துணையாதற்குரியர் என்பதுபற்றித் துணைவியர் என்றார். 'வாழ்க்கைத்துணைநலம்' என்றதூஉம் காண்க. "முல்லைச்சூட்டு வேய்ந்தார்" என்ற சிந்தாமணியடிக்கு, 'முல்லைச்சூட்டைக் கற்பிற்குத் தலையிலே சூட்டினார் என்க' என்று நச்சினார்க்கினியர் உரை கூறுமாற்றாலும் உணர்க எடுத்தனர் என்பது பாடினர் என்ற பொருளில் வந்துள்ளது. "எழுவரும் போய் மலைகளைத் தொழுது துதிசெய்து வாழ்த்து எடுத்தனர்" என வினை முடிவு செய்க. தொடுத்தலால் தொடை எனப்பட்டது. மூவரும் உம்மை முற்றும்மை. 'துதி' ஆகுபெயர். (27)

[திருமகளிரின் வருகை]

அன்ன மொன்றறி யாமுடிக் கங்கையை யறிந்து
துன்ன வந்தல மருமெகி னங்களின் தொகுதி
யென்ன வம்புயத் தொருசத கோடியிந் திரைகண்
முன்ன டைந்துவெண் கவரிக ளிரட்டினர் முறையால்.

[இ-ள்.] அம்புயத்து-தாமரை மலர்களில் இருக்கின்ற, ஒரு சதகோடி-ஒரு நூறு கோடி என்னும் தொகையையுடைய, இந்திரைகள்-திருமகளிர், அன்னம் ஒன்று-அன்னப்பறவை ஒன்றால், அறியா-தேடிக் காணமாட்டாத, முடி-இறைவன் முடியிலுள்ள, கங்கையை-கங்காதேவியை, அறிந்து-தெரிந்து, துன்ன-அதனை நெருங்கும்படி, வந்து-வந்தே, அலமரும்-சுழல்கின்ற, எகினங்களின்-அன்னப் பறவைகளின், தொகுதியென்ன-கூட்டம்போல, வெண் கவரிகள்-வெண்சாமரங்களை, முன் அடைந்து-பார்வதியின் முன்னே சென்று, முறையால்-முறையோடு கூடி, இரட்டினர்-இருபுறத்தும் வீசினர். [எ-று.]

[கு-ரை.] நாரணனோடு இறைவன் முடி காண்பேன் என்று சூளுற்ற பிரமன் அன்னவடிவங்கொண்டு மேலே பறந்து சென்று காணாது மீண்ட வரலாற்றைக் குறித்தது. 'அன்னம் ஒன்றறியாமுடி' யென்பது. சாமரைகள் நிறத்தினாலும் சுழற்றுகின்ற தன்மையினாலும் அன்னமாகவே கூறப்பட்டதால் தற்குறிப்பணி. 'சதகோடி' என்பது பன்மையைக் காட்ட வந்தது. அலமால்-சுழலல்-"அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி" அண்டம் பலவாதவின் ஒவ்வோரண்டத்திற்கும் ஒவ்வொரு திருமகள் உண்டென்னும் புராண கதையை நோக்கிக் கூறியது. "இந்திரைகள் முன்னடைந்து தொகுதியென்ன வெண்கவரிகள் முறையால் இரட்டினர்" என்று கொண்டுகூட்டுக. "வெண்கவரி" உண்மைத் தன்மை கூறியவாறு. இதனை வடநூலார் தன்னோடியைபின்மை நீக்கிய விசேடணம் என்பர். 'அறியா' ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். (28)

[இந்திராணிமார் வருகை]

அரவு கௌவிய கதிரெனப் பட்டசாந் தாற்றி
பரவை யல்குல்வெண் முத்தவா ணகைக்கொலை பயில்விற்
புருவ மென்மலர்க் குழற்சசி கோடிகள் புகன்று
மருவி யம்பிகை மருங்குநின் றசைத்தனர் மன்னோ.

[இ-ள்.] பரவை அல்குல்-பரப்பாகிய அல்குலையும், வெண் முத்தம் வாள்நகை-வெண்மையான முத்தம்போன்ற ஒளி பொருந்திய பற்களையும், கொலைபயில் வில்புருவம்-கொலைத் தொழிலில் பழகிய வில்லுப்போலுள்ள புருவங்களையும், மென் மலர்க்குழல்-மென்மையான மலர்களை அணிந்துள்ள கூந்தலை யும் உடைய, கோடிசசிகள்-அளவிறந்த இந்திராணிகள், புகன்று-விரும்பிச்சென்று, மருவி-பொருந்தி, அம்பிகை மருங்கு நின்று-உமாதேவியின் பக்கத்தில்நின்று, அரவுகௌவிய-பாம்பி னாலே கௌவப்பட்ட, கதிரெனப்பட்ட-சுடர் என்று கண்டோ ரால் சொல்லப்பட்ட, சாந்தாற்றி-சிற்றாலவட்டங்களை, அசைத் தனர்-வீசினர். [எ-று.]

[கு-ரை.] சாந்தாற்றி செம்மணியால் செய்யப்பட்டன சூரியனையும், முத்துக்களால் செய்யப்பட்டன திங்களையும் ஒத்திருத்தலின் பொதுவாகக் கதிரென்றார். சிற்றாலவட்டங்களை நோக்கினவர் கதிர்கள் என்று மயங்க லால் மயக்கவணி. முத்தவாணகை, வில்புருவம் உவமைத்தொகைகள். "சசிகோடிகள் அம்பிகை மருங்குநின்று சாந்தாற்றி அசைத்தனர்" என வினைமுடிவு செய்க. மன், ஓ அசைகள். (29)

[சரஸ்வதிமார் வருகை]

எடுத்து வீணைக ளுளர்நரம் பிதுமிட றிதுவென்
றடுத்த கேள்வ ராம்பிரமரும் அறிவரி தாகப்
படத்த பாம்பணி பரன்புடை மாதுசீர் பாட்டிற்
றொடுத்து வாலிய கலைமடந் தையர்பலர் துதித்தார்.

[இ-ள்.] பலர்-பலராகிய, வாலிய-வெண்ணிறம் உடைய, கலை மடந்தையர்-சரஸ்வதிகள், வீணைகள் எடுத்து-வீணைகளைக் கையின்கண் எடுத்துக்கொண்டு, உளர்-தெறிக்கப்பட்ட, நரம்பு இது-நரம்பின் ஓசை இது, மிடறு இது-கண்டத்தின் ஓசை இது, என்று-என்று, அடுத்து-(அவரோடு நெடுங்காலமாகப் பழகி) அண்மையில் இருக்கின்ற, கேள்வராம்-கணவர்களாகிய, பிரமரும்-நான்முகர்களும், அறிவு அரிதாக-அறிதல் கூடாத தாக, படத்த-படத்தையுடைய, பாம்பு அணி-பாம்புகளை

அணிந்த, பரன்புடை-கடவுள் அருகில் இருக்கின்ற, மாதுசீர்-உமாதேவியினது புகழை, பாட்டில்-செய்யுளில், தொடுத்து-செலுத்தி, துதித்தார்-துதிசெய்தார்கள். [எ-று.]

[கு-ரை.] நரம்பு, மிடறு என்பன அவற்றின் ஒலியைக் குறித்தலால் ஆகுபெயர்கள். கண்டத்தொலி, நரம்பொலிகட்கு வேறுபாடு தோன்றாமை யினால் பொதுமையணி. படத்த குறிப்புவினை முற்று எச்சமாகிப் பாம்பு என்ற பெயர்கொண்டு முடிந்தது. "சீர்த்தி மிகு புகழ்" ஆதலின் சீர் புகழா யிற்று. (30)

[உருத்திர கணிகையர் வருகை]

செப்ப மைந்ததண் ணுமையிசை தாளமென் சிறுதாட்
டுப்ப மைந்தவொண் சதிதழீஇச் சுவையபல் காய
மூப்ப மைந்தவின் கறியென நடித்தன ருழையோ
டொப்ப மைந்தகண் ணுருத்திர கணிகைய ருவந்து.

[இ-ள்.] உழையோடு-மான் கண்களோடு, ஒப்பு அமைந்த கண்-ஒப்புமை நிறைந்த கண்களை உடைய, உருத்திர கணிகையர்-உருத்திர கணிகையர், உவந்து-மகிழ்ந்து, சுவைய-வேறு வேறு சுவையனவாகிய, பல்காயம்-பல்வகைப்பட்ட காயங்களும், உப்பும்-உப்பும், அமைந்த-அளவொத்த, இன்கறியென-இனிய கறியைப்போல, செப்பு அமைந்த-சொல் அமைந்த, தண்ணுமை-மத்தள ஒலியையும், இசை-ஓசை ஒலியையும், தாளம்-தாள ஒலியையும், மென் சிறுதாள்-மெல்லிய சிறிய அடிகளது, துப்பு அமைந்த-நன்மை பொருந்திய, ஒண்சதி-அழகிய மிதிப்பையும், தழீஇ-தழுவி, நடித்தனர்-ஆடினர். [எ-று.]

[கு-ரை.] பலவகைப்பட்ட காயங்கள் மிளகு முதலியன. எப்படி இன் கறி அளவொத்த பல காயங்களையும் உப்பையும் தழுவியதோ அப்படி உருத்திர கணிகையர்கள் தண்ணுமை தாளம் முதலியன தழுவினதால் உவமையணி. 'தழீஇ' சொல்லிசையளபெடை. தண்ணுமை, தாளம், உழை ஆகு பெயர்கள். சுவைய முற்றெச்சம். உருத்திரகணிகையர் தழீஇ உவந்து நடித்தனர் என முடிபு காண்க. (31)

[மாயை வருகை]

எந்தை பாலுமை முக்குணங் களுமுரு வெடுத்து
வந்த மாதர்க ளருகுநின் றனர்பணி மகிழூஉ
வந்த மாதருட் டமோகுண மாதுமை யருளாற்
சந்த மாயையென் பெயர்கொடு தருக்கிநின் றனளே.

[இ-ள்] எந்தைபால் - இறைவனிடத்து இருக்கின்ற, உமை-உமாதேவியினது, முக்குணங்களும்-மூன்று வகைப்பட்ட குணங்களும், உருவெடுத்துவந்த-வடிவங்கொண்டுவந்த, மாதர்கள்-விருப்பத்தைத்தரும் மகளிர்கள், பணி-அவளுக்குக் குற்றேவல் செய்தலினாலே, மகிழூஉ-மகிழ்ந்து, அருகு நின்றனர்-பக்கத்தில் நின்றனர், அந்த மாதருள்-அப்படி நின்ற மாதருக்குள், தமோகுணமாது-தாமதகுண மாது, உமையருளால்-உமாதேவியினது திருவருளினாலே, சந்தம்-அழகையும், மாயையென் பெயர்-மாயை யெனப்படுகின்ற பெயரையும், கொடு-கொண்டு, தருக்கி நின்றனள்-செருக்குற்று நின்றாள். [எ-று.]

[கு-ரை.] முக்குணம் சத்துவகுணம், ராஜஸகுணம், தாமதகுணம் என்பனவாம். மூன்று குணங்களும் மூன்று பெண்களாக வடிவங்கொண்டு வந்தார்களென்றும் அவருள் தமோகுண மாது தருக்கி நின்றனள் என்றுங் கொள்க. மகிழூஉ, செய்யூஉ என்னும் வாய்பாட்டு வினையெச்சம். 'முக் குணங்களும்' உம்மை முற்றும்மை. ஏ, அசை. (32)

[உருத்திரர்கள் வருகை]

தெள்ளு வார்திரைக் கங்கையுங் கங்கையுஞ் சிறிய
பிள்ளை யாகிய மதியமு மதியமும் பெரிது
துள்ளு மோரிள நௌவியு நௌவியும் தொடர்பு
கொள்ளு மாறவ ணெருங்கின வுருத்திர குழாங்கள்.

[இ-ள்.] உருத்திரகுழாங்கள்-உருத்திரருடைய கூட்டங்கள், தெள்ளுவார்திரை-தெளிவாகிய நீண்ட அலையையுடைய, கங்கையும் கங்கையும்-கங்காநதியோடு கங்காநதியும், சிறிய பிள்ளையாகிய-சிறிய குழந்தையாகிய, மதியமும் மதியமும்-திங்களோடு திங்களும், பெரிதுதுள்ளும்இள -மிகவும் துள்ளுகின்ற இளமையான, நௌவியும் நௌவியும்-மானோடு மானும், தொடர்புகொள்ளுமாறு-நட்புக்கொள்ளும்படியாக, அவண்-அச்சபையிடத்து, நெருங்கின-நெருக்கமாகச் சேர்ந்தன. [எ-று.]

[கு-ரை.] அண்டம் பலவாதலின் உருத்திரரும் பலராயினர். மேல் அரி, பிரமர், இந்திரர் முதலியோருக்கும் இஃதொக்கும். இறைவனுக்கு உரித்தென்று கூறப்படும் கங்கை, பிறை, மான் உருத்திர கூட்டங்களுக்கும் உண்டென்பது புராண வரலாறு உருத்திரன்குழாம், உருத்திரகுழாம் என முடிந்தது; குமரகோட்டம் என்றாற்போல. ஓர் அசை. (33

[திருமால்கள் வருகை]

சங்க மொன் றுட னொன் றுதாக் குறவொளி தழைக்கும்
துங்க நேமியு மன்னவா யுற்றலைலி சுருட்டும்
பொங்கு வேலைவந் தெனவரிக் கணங்களற் புதத்த
வெங்க ணுயகன் பேரவை யிடத்துவந் திறுத்த.

[இ-ள்.] அரிக்கணங்கள்-நாரணருடைய கூட்டங்கள், சங்கம் ஒன்றுடன் ஒன்று-(கரத்திலேந்திய) சங்குகள் ஒன்றோடொன்று, தாக்குற-தாக்காநிற்க, ஒளிதழைக்கும்-ஒளிபெருகுகின்ற, துங்கம்-உயர்ச்சி பொருந்திய, நேமியும்-சக்கரங்களும், அன்னவாயுற-அப்படியே தாக்குகின்றனவாயுருநிற்க, அலை சுருட்டும்-அலையைச் சுருட்டுகின்ற, பொங்குவேலை-பொங்கிய கருங்கடலானது, வந்தென-வந்தாற்போல, அற்புதத்த-ஆச்சரியங்களை யுடையனவாகி, எங்கள் நாயகன்-எமது இறைவனது, பேரவை-பெரிய அவை, இடத்து-இடத்தின்கண், வந்து-தோன்றி, இறுத்த-சேர்ந்து தங்கின. [எ-று.]

[கு-ரை.] வேலையென்னும் பொதுவாகிய கடலின்பெயர் திருமாலுக்கு உவமையாக வந்தமையால் கருங்கடலென்றும். (34)

[பிரமர்கள் வருகை]

முகங்க ணான்கினு நான்மறை விதிமுறை முழங்க
வுகந்து கையிரு நான்குநான் குச்சியிற் குவியச்
சகந்த ருஞ்செயற் பிரமர்க ளளப்பிலர் தையல்
பகுந்த மேனிய னவையிடைப் புகுந்தனர் பரவி.

[இ-ள்.] அளப்பிலர் - எண்ணிலராகிய, சகம் - உலகம், தரும்-படைக்கும், செயல்-தொழிலையுடைய, பிரமர்கள்-நான்முகக் கடவுளர், முகங்கள் நான்கினும்-நான்கு முகங்களிலும், நான்மறை-நான்கு வேதங்களும், விதிமுறை-எப்படி எப்படி ஓதவேண்டும் என்று நியமிக்கப்பட்டதோ அவ்வொழுங்கின்படி, முழங்க-ஒலியாநிற்கவும், நான்கு உச்சியில்-நான்கு தலைகள் மேலும், உகந்து-உயர்ந்து, கையிரு நான்கும்-எட்டுக் கைகளும், குவிய-கூம்பாநிற்கவும், தையல்-உமாதேவியாலே, பகுந்த-பங்கிட்டுக்கொள்ளப்பட்ட, மேனியன்-மேனியையுடைய கடவுளது, அவையிடை-அரங்கிடத்தே, பரவி-வாழ்த்தி, புகுந்தனர்-புகுந்தார்கள். [எ-று.]

[கு-ரை] "உகப்பேயுயர்தல் உவப்பேயுவகை" என்பது நூலாதலின் 'உகந்து' என்பதற்கு 'உயர்ந்து' என்று பொருள் கூறப்பட்டது. தோன்றி யழியும் தன்மையுடைமையால் 'சகம்' என்றார். நான்மறை-இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பர். பிறர் பிறவாறுங்கூறுப. இறைவனை நோக்கித் தவஞ்செய்து, உமை உடம்பிற் பாதியைப் பெற்றனள் என்பது காஞ்சி, அருணை முதலிய புராண வரலாறுபற்றிக் கூறப்பட்டது. இவ்வடிவம் திருச்செங்கோடு என்னும் தலத்தில் உள்ளது. பிரமர்கள் முழங்க, குவிய, பரவி, புகுந்தனர் எனக் கூட்டுக. முழங்க, குவிய என்னும் சினைவினைகள் 'புகுந்தனர்' என்னும் முதல் வினையோடு முடிந்தன; "சினைவினை சினையொடும் முதலொடும் செறியும்" என்பது இலக்கணமாதலின். 'அளப்பிலர்' முற்றெச்சம். (35)

[இந்திரர் வருகை]

அயனு மாயனு மெனினுயர்ந் தவரென்ப தன்றிக்
கயிலை நாயக னமர்திரு வோலக்கங் காண்பா
னயன மாயிர மிலாமையி னதிகனு னென்று
வயிர வான்படை யிந்திர ரெண்ணிலர் வந்தார்.

[இ-ள்.] எண்ணிலர் - எண்ணமுடியாத நிலையை உடையராகிய, வயிர வான்படை-வச்சிரமாகிய மேன்மை பொருந்திய ஆயுதத்தையுடைய, இந்திரர்-இந்திரர்கள், அயனும்-பிரமனும், மாயனும்-திருமாலும், எனின்-என்னினும், உயர்ந்தவர்-மேலானவர், என்பதன்றி-என்று சொல்லுதல் மாத்திரமன்றி, (மேலோரல்லர்), கயிலைநாயகன்-சிவபெருமான், அமர்-விரும்பித் தங்கி இருக்கின்ற, திருவோலக்கம்-அரசிருப்பை, காண்பான்-காண்பதற்கு, ஆயிரம் நயனம்-ஆயிரம் கண்களை, இலாமையின்-(என்போல்) இல்லாத காரணத்தினுல், அதிகன்-(அவர்களைக்காட்டிலும்) உயர்ந்தவன், நான் என்று-நானே என்று (தனித்தனி நினைத்துக்கொண்டு) வந்தார்-வந்தார்கள். [எ-று]

[கு-ரை.] என்பதன்றிப் பின் உயர்ந்தார் அல்லர் என்பது சொல்லெச்சம். "சொல்லென்னெச்சம் முன்னும் பின்னும் சொல்லளவல்ல தெஞ்சுதலின்றே," என்றாராதலின். காண்பான் 'பான்' வினையெச்சவிகுதி; 'வான் பான் பாக்கு இன வினையெச்சம் பிற' என்பது இலக்கணமாதலின். 'அதிகம் நான்' என்றதைக் காண்பான் நயனம் ஆயிரம் இலாமையின் என்ற சொற்றொடர் விளக்குதலான் இது செய்யுட்குறியணி. (36)

[பதினெண் கணத்தர் வருகை]

உரகர் சித்தர்கள் வித்தியா தரர்சுர ருயர்கிம்
புருடர் மெய்க்கதிர் முதலிய கோடிசை புரப்போர்

செயா-பழிதூற்றுத, மறிமுகம்-ஆட்டுமுகத்தை, இயைத்து-பொருத்தி, தருக்கிநின்ற-களித்துநின்ற, அவ்வீரன்-அவ்வீரபத்திரன், வந்து-தோன்றி, ஒருபுடை-ஒரு பக்கத்தை, சார்ந்தான்-அடைந்தான். [எ-று.]

[கு-ரை.] வேதங்களில் நாரணனை யாகவடிவினன் என்றும் கடவுள் யாகத்தலைவன் என்றும் சொல்லப்பட்டிருக்க, நாரணனைத் தலைவனாக வைத்து இறைவனை நிந்தித்ததால் தக்கனுக்கு இத்தண்டனை கிடைத்தது. "ஆட்டின் தலையை விதிக்குத் தலையாகக் கூட்டியவாபாடியுந்தீபற" என்பது திருவாசகம். உலகோற்பத்திக்குப் பிரம்மதேவனுக்கு அடுத்தபடியாகத் தக்கனைக் கூறுவதால் தக்கனைச் 'சிறுவிதி' என்றார். 'ஒடு' உருபை 'ஆல்' உருபாகத் திரித்துக்கொள்க. (40)

[வைரவர் வருகை]

காதி யாயிர மால்களைப் பிழிந்துமாங் கனிபோற்
கோது வீசினும் கடல்கவிழ்த் தனையசெங் குருதி
பாதி யாயினு நிரம்புறாக் கபாலபா ணியனாய்
மாது பாதிய னவையிடைப் புகுந்தனன் வடுகன்.

[இ-ள்.] ஆயிரம் மால்களை-ஆயிரம் நாரணர்களை, காதி-கொன்று, மாங்கனிபோற் பிழிந்து-மாம்பழத்தைப் போலப் பிழிந்து, கோது வீசினும்-சக்கைகளை எறிந்தாலும், கடல் கவிழ்த்து அனைய-கடலைக் கவிழ்த்தாற்போல் பெருகுவதாகிய, செங்குருதி-சிவந்த இரத்தத்தினாலே, பாதியாயினும்-பாதியளவாயினும்,நிரம்புறா-நிறைதல் இல்லாத, கபாலம்-பிரமனது தலையோட்டை, பாணியனாய்-கையில் உடையவனாகி, மாதுபாதியன்-இறைவியைப் பாதியாகவுடைய இறைவன், அவையிடை-அம்பலத்தின்கண், வடுகன்-வைரவக்கடவுள், புகுந்தனன்-நுழைந்தனன், [எ-று.]

[கு-ரை.] கபாலம்-தலையோடு. உலகத்தைப் படைக்கும் பிரமர்களும் அழிவார்கள் என்ற நிலையாமையையுணர்த்தற்பொருட்டு பிரம கபாலத்தைக் கையிலேந்தியவன் 'வைரவன்' என்றும், முன்னிரண்டடிகளால் கபாலத்தின் பெருமையும் கூறப்பட்டது. செங்குருதி-உண்மைத்தன்மை கூறியது; பண்புத்தொகை. பாணி-கை. (41)

[வீரகாளி வருகை]

வீர மாதருக் கில்லையென் றுரைப்பதென் விளங்க
வீர மாதென வறிகிலி ரோவென விளம்பி
வீர யோகினி வெள்ளமோ டமர்பொர விரும்பும்
வீர காளியும் புகுந்தன ளவையிடை விரைந்து.

[இ-ள்.] அமர்-போர், பொர-செய, விருப்பு-ஆசைப்படுகின்ற, வீரகாளியும்-வீரத்தன்மையுடைய காளிகாதேவியும், மாதருக்கு-பெண்களுக்கு, வீரம் இல்லை என்று-வீரத்தன்மை கிடையாது என்று, உரைப்பது என்-சொல்லுதற்குக் காரணம் யாது, வீரமாது என-வீரத்தன்மையுடைய மாது என்று, விளங்க அறிகிலீரோ என-நன்றாக அறியவல்லீர் அல்லீரோ வென்று, விளம்பி-சொல்லிக்கொண்டு, வீரயோகினி வெள்ளமோடு-வீரம்பொருந்திய யோகினி என்னும் ஏவல் மகளிர் கூட்டத்தோடு, அவையிடை-அரங்கின்கண், விரைந்து-வேகமாக, புகுந்தனள்-வந்தனள். [எ-று]

[கு-ரை.] யாவராலும் வெல்லப்படாத தாருகன் முதலியோரையும் வென்றவளாதல்பற்றி இவ்வாறு கூறிக்கொண்டு வந்தாள் என்க. 'வீரம்' என்ற சொல்லே பலகால் ஒரே பொருளில் வருவதால், சொற்பொருட் பின்வருநிலையணி. புறப்பொருட்டுறையுள் மறக்குடியிற்பிறந்த ஆண்களுக்கேயன்றி பெண்களுக்கும் வீரம் உண்டென்பதால் இது மூதின் முல்லை "அடல் வேலாடவர்க்கன்றியுமவ்வில் மடவரன் மகளிர்க்கு மறம் மிகுத்தன்று" என்பது கொளு. (42)

[பிருங்கி முனிவர் வருதல்]

ஊன்று ஞானமோ டுயர்வயி ராகநல் லொழுக்கம்
மூன்று காலெனக் கொண்டரன் முகத்திள முறுவல்
தோன்று மாறுநின் றாடினன் சுடரவன் இருளைப்
போன்று மாயையைத் தொலைத்திடு பிருங்கியென் புனி [தன்.

[இ-ள்.] சுடரவன்-சூரியனுனவன், இருளைப்போன்று-இருட்டை ஓட்டுவதுபோல, மாயையை-மயக்கவிருளை, தொலைத்திடு-நீக்கின, பிருங்கிஎன் புனிதன்-பிருங்கி எனப்படுகின்ற முனிவன், ஊன்று-(நல்வழியிலே) ஊன்றப்பட்ட, ஞானமோடு-உண்மையறிவோடு, உயர்வயிராகம்-உயர்வாகிய வைராக்கியத்தையும், நல்லொழுக்கம்-நல்லொழுக்கத்தையும், மூன்று காலெனக்கொண்டு-(தனக்குரிய) மூன்று கால்களைப்போலக் கொண்டு, அரன்முகத்து-இறைவனது முகத்திலே, இளமுறுவல்-புன்னகையானது, தோன்றுமாறு-உண்டாகும் வண்ணம், நின்று-நின்று, ஆடினன்-ஆடல் செய்தான். [எ-று.]

[கு-ரை.] பிருங்கி முனிவர்க்கு மூன்றுகால் உண்டு, அதைப்போல ஞானம், வைராக்கியம், நல்லொழுக்கம் மூன்றும் வீடு செல்வதற்கு மூன்று காலெனக் கொண்டார் என்றலின் உவமையணி. (43)

[நந்தி செயல்]

படிகொண் மாமுடிக் கங்கணத் திறைபதம் படுமொண்
முடிகள் யாவையும் படுகழ னந்தியெம் முதல்வ
னடிக ளேந்துகை யுறவடித் தொதுக்கியவ் வவையைக்
கடிகொள் மாலையம் பிரம்பொடு திரிந்தனன் களித்து.

[இ—ள்.] படிகொள்-பூமியைக்கொண்ட, மாமுடி-பெரிய தலையை உடைய, கங்கணத்து-(ஆதிசேடனாகிய) கங்கணத்தை யுடைய, இறை-சிவபெருமானது, பதம்படு-திருவடிகளிலே படுகின்ற, ஒண்முடிகள் யாவையும்-ஒளிபொருந்திய திருமுடிகளெல்லாம், படு-படப்பெறுகின்ற, கழல்-திருவடிகளையுடைய, நந்தி எம் முதல்வன்-நந்தியாகிய எம்முடைய தலைவனானவன், ஏந்து-தாங்குகின்ற, கை-கைகளிலே, அடிகள்-அடிகளானவை, உற-படும்படி, அடித்து-அடித்து, அவ் அவையை-அந்த அரங்கிலுள்ளாரை, ஒதுக்கி-இருமருங்கிலும் விலக்கி, கடிகொள்-மணங்கொண்ட, மாலை-பூமாலையையுடைய, அம்-அழகிய, பிரம்பொடு-பிரப்பங்கோலொடு, களித்து-மகிழ்ச்சியோடு, திரிந்தனன்-சுற்றிக்கொண்டிருந்தான். [எ—று.]

[கு-ரை.] உலகத்தைச் சுமந்து நிற்கின்ற ஆதிசேடன் இறைவனுடைய கைக் கங்கணமாக ஆதலின் இவ்வாறு கூறப்பட்டது. கழல்-ஆகுபெயர். (44)

[வாணன் முழவமும் பானுகம்பன் சங்கமும் முழக்கினார்கள்]

பெய்யு மாமழை முகிலெனப் பெரியவாய் முழவந்
துய்ய மாமதி யனையவெண் சுரிமுக சங்க
மைய வாணனும் பானுகம் பப்பெய ரவனும்
கையும் வாயுமொத் ததிர்த்தனர் செவிகரங் கவிழ்ப்ப.

[இ—ள்.] ஐய வாணனும்-அழகிய வாணாசுரனும், பானுகம்பப்பெயரவனும்-பானுகம்பன் என்னும்பெயரை யுடையவனும், பெய்யும்-பெய்யப்படுகின்ற, மாமழை-பெருமழையையுடைய, முகில்என-மேகம் போல, பெரியவாய்-பெரிய குரலையுடைய, முழவம்-முழவ இயங்களையும், துய்ய-களங்கம் இல்லாத, மாமதி அனைய-பெரிய திங்களை ஒத்த, வெள்-வெள்ளிய, சுரிமுகம் சங்கம்-சுழிந்த முகத்தையுடைய சங்கங்களையும், செவி-(யாவரும்) காதுகளை, கரம்-கையினால், கவிழ்ப்ப-மூடிக்கொள்ள, கையும்-கைகளாலும், வாயும்-வாய்களாலும், ஒத்து-(சேர்ந்து ஒலிக்கும்படி) ஒத்து, அதிர்த்தனர்-முழக்கினார்கள், [எ—று.]

[கு-ரை.] வாணாசுரனுக்கு இரண்டாயிரம் கைகள், பானுகம்பனுக்கு ஆயிரம் வாய்கள், வாணன் கைகளால் முழவத்தையும், பானுகம்பன் வாயினால் சங்கத்தையும் முழக்கினார்கள் என்று நிரல் நிரையாகக்கொள்ளவேண்டி இருத்தலின் "நிரல் நிரை அணி". முகில்போல் ஒலிக்கும் முழவமும், களங்கமற்ற மதிபோன்ற சங்கமும் என்றதில் 'உவமையணி'யும் காண்க. கயிலாயத்தில் வாணனும் பானுகம்பனும் முறையே தோற்கருவியையும் துளைக்கருவியையும் இயக்குபவர்கள். 'சங்கு' என்பது 'அம்' சாரியை பெற்று சங்கம் என்றாயது அன்றி, 'அம்' பகுதிப்பொருள் விகுதி என்று கோடலும் ஒன்று. 'பெரிய வாய்' என்பதிலுள்ள 'வாய்' ஆகுபெயர். (45)

[அவையிலுள்ளோர் செயல்]

துதிப்ப ரோர்சிலர் பாடுவ ரோர்சிலர் துள்ளிக்
குதிப்ப ரோர்சிலர் கைகளாற் றோளிணை கொட்டி
யதிர்ப்ப ரோர்சிலர் நெக்குநெக் குருகிநெஞ் சகமெய்
விதிர்ப்ப ரோர்சில ராயின ரவையிடை மிடைந்தோர்.

[இ-ள்.] அவையிடை-அவையின்கண், மிடைந்தோர்-நெருங்கியோர்களில், சிலர் துதிப்பர், சிலர் பாடுவர், சிலர் துள்ளிக்குதிப்பர், சிலர் கைகளால், தோளிணை கொட்டி-இரண்டு தோள்களையும்கொட்டி, அதிர்ப்பர்-முழக்குவர், சிலர் நெஞ்சம்-சிலர் மனம், நெக்கு நெக்கு உருகி-நெகிழ்ந்து நெகிழ்ந்து இளகி, மெய்-உடம்பு, விதிர்ப்பர்-நடுங்குவர், ஆயினர்-ஆனார்கள். [எ-று.]

[கு-ரை.] ஓர் ஐந்தும் அசை நிலைகள். அன்பின் பெருக்கால் அங்கு கூடியிருந்தோர் இவ்வித செயல்களைச் செய்வாராயினர். முதலெழுத்துத் தவிர ஏனைய பல எழுத்துகள் ஒத்திருத்தலின் இது திரிபு என்னும் சொல்லணியாகும். (46)

படைக்க லங்களி னொளியிமை யவரொளி பரித்த
தொடைக்க லங்களி னொளியரம் பையர்பணைத் தோளி
னிடைக்க லங்களி னொளியெலா மிருளிறை மிடற்றி
னடைக்க லம்புக நிறைந்தன பரந்தபே ரவையில்.

[இ-ள்.] பரந்த-விரிந்த, பேர்-பெரிய, அவையில்-அவையின்கண், படைக்கலங்களின்-(பலவித) ஆயுதங்களினது, ஒளி-ஒளியும், இமையவர்-தேவர்களது, ஒளி-உடல் ஒளியும், பரித்த-தாங்கப்பட்ட, தொடைக்கலன்களின்-மாலைகளாகிய அணிகளினது, ஒளி-ஒளியும், அரம்பையர்-தேவமகளிரது, பணை-மூங்கில் போலும், தோளினிடை-தோள்களிடத்துள்ள, கலன்களின்-ஆபரணங்களின், ஒளி-ஒளியும் (ஆகிய), எலாம்-எல்லா ஒளி

களும், இருள்-கரிய நிறத்தையுடைய, இறை-சிவபெருமானது, மிடற்றில்-கண்டத்தின்கண்ணே, அடைக்கலம்புக-அடைக்கல மாகப் புகும்படி, நிறைந்தன-புகுந்து நிறைந்தன. [எ—று.]

[கு-ரை.] அடைக்கலம்புகல் - பகைவரை அஞ்சியோர் காக்கவல் லோரையடைந்து அவருடைமையாய் நிற்றல். இமையாநாட்டம் உடைமை யின் இமையவர் என்பது காரணக்குறி. இருள் அடைக்கலம் புகும்படி ஒளி யெலாம் நிறைந்தன. எல்லாம் என்னும் பொதுப்பெயரின் வினையாகிய நிறைந்தன என்ற வினையை இருளின் வினையாகிய புக என்பதும் கொண்டு முடிந்தது. "முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும் வினைமுதல் கொள்ளும் பிறவும் ஏற்கும் பிற" என்ற விதியின்படி புக என்னும் செயவெனெச்சம் பிறவினைகொண்டது. இறைவனது நஞ்சக்கறையை, இருள் ஒலிக்குப் பயந்து அடைக்கலம் அடைந்த தன்மையாகக் குறித்தலின் தற்குறிப்பணி. (47)

[இது முதல் பதினொரு பாட்டுகள் சிவபெருமானுக்கும் உமாதேவிக்கும் நிகழ்ந்த தடைவிடை]

இன்னணம் அவையிடை இருந்த எம்பிரான்
தன்னொடு வினவுமோர் தகைமை உன்னுபு
கன்னமும் அமுதமும் கைப்ப எம்முடை
அன்னைதன் வாய்திறந்(து) அறைதல் மேயினள்.

[இ—ள்.] இன்னணம்-இப்படிப்பட்ட சிறப்புடன், அவை யிடை இருந்த-அவையின்கண் வீற்றிருந்த, எம்பிரான்-தன் னொடு-எமது தலைவனாகிய சிவபெருமானை, வினவும்-கேட்கப் படுவதாகிய, ஓர் தகைமை-ஒரு தன்மையை, உன்னுபு-நினைத்து, கன்னலும்-சர்க்கரையும், அமுதமும்-அமிழ்தமும், கைப்ப-கைப்பனவாக, எம்முடைஅன்னை-எமது தாயான இறைவி, தன் வாய் திறந்து-தனது வாயைத் திறந்து, அறைதல் மேயி னள்-சொல்லலுற்றாள். [எ—று.]

[கு-ரை.] உன்னுபு என்னும் வினையெச்சம் அறைதல் என்னும் வினை கொண்டது. எம்பிரான் தன்னொடு தன் சாரியை ஒடுவை ஐயுருபாகக் கொள்க. கைப்ப என்னும் செயவெனெச்சம் அறைதல் என்னும் பிற வினை கொண்டது. சர்க்கரைக்கும் அமிழ்தத்துக்கும் கைப்பு இல்லனவாக வும் அதைச் சொல்லுதலால் தொடர்பு உயர்வு நவிற்சியணி. (48)

[இறைவி வினா]

தலைவநின் அவையிடைச் சார்ந்த இப்பெரு
நலனுடை யவரெலாம் நணுகி வெம்பவத்(து)
அலைகில ராகியின் படைவ ரோவலால்
நிலையில ரோவிது நிகழ்த்து வாயென்றாள்.

[இ—ள்.] தலைவ-முதல்வனே, நின் அவையிடைச் சார்ந்த-உனது அவையின்கண் வந்திருக்கின்ற, இப்பெருநலன் உடையவரெலாம்-இப்பெரிய செல்வத்தையுடைய யாவரும், வெம்பவத்து-கொடிய பிறவியிடத்து, நணுகி-பொருந்தி, அலைகிலராகி-அலையாதவராகி, இன்பு அடைவரோ-முத்தியைச் சேர்வரோ, அலால்-அல்லது, நிலையிலரோ-நிலையிலாதவராகி பிறவியில் அலைவாரோ, இது நிகழ்த்துவாய்-இதனைச் சொல்லுவீர்களாக, என்றாள்-என்று சொன்னாள். [எ—று.]

[கு-ரை.] ஓகாரம் இரண்டும் அறிவு, அறியாமை, ஐயுறல், கொளல், கொடை, ஏவல் என்ற வினா அறுவகையுள் ஐயவினாவின்பாற்படும்.

[இறைவன் விடை]

விளங்கிழை நன்றுநின் வினாவென் றெந்தைமண்
ணளந்தவன் அயன்முதலாயி னோருமின்
புளங்கொளு நாமரூ பத்தோ டொன்றுறத்
தளைந்துள கிரியையாற் சார்கிலா ரென்றான்.

[இ—ள்.] எந்தை-எமது சிவபெருமான், விளங்கிழை-விளங்காநின்ற ஆபரணத்தையுடையவளே, நின்வினா-நினது வினாவானது, நன்றுஎன்று-நன்றாக இருந்ததென்று, மண்ணளந்தவன் - திருமால், அயன் - பிரமன், முதலாயினோரும்-முதலிய எல்லோரும், உளங்கொளும்-மனதிலே கொள்ளப்பட்ட, நாமம்-பெயர், வடிவத்தோடு-வடிவங்களோடு, ஒன்றுற-பொருந்த, தளைந்துள-கட்டப் பட்டுள்ள, கிரியையால்-வினையும் இருக்கையினாலே, இன்பு-அழியா பேரின்பத்தை, சார்கிலார்-அடையமாட்டார், என்றான்-என்று சொன்னான். [எ—று.]

[கு-ரை.] எந்தையானவர் இன்பு சார்கிலார் என்றான் எனக்கொள்க. விளங்கிழை அன்மொழித்தொகை. தளை, கட்டு, பாசம், பந்தம் ஒருபொருட் கிளவிகள், கிரியை தொழில்வினை செயல் ஒருபொருட்கிளவிகள். (50)

[இறைவி வினா]

அனையதே னாம ரூபக்
கிரியைக ளனைத்தும் வெல்ல
நினைவுறு சூழ்ச்சி யொன்று
நீயெனக் குரைத்தி யென்னப்

பனிமலை தவஞ்செய் தீன்ற
பவளவாய் மடந்தை கூற
நனையவிழ் கொன்றை வேணி
நம்பன்மற் றிதனைச் சொல்வான்.

[இ—ள்.] அனையதேல்-அப்படிப்பட்டதாயின், நாமம்-பெயர், ரூபம்-வடிவம், கிரியைகள்-வினைகள், அனைத்தும்-(ஆகிய) எல்லாவற்றையும், வெல்ல-வெற்றிகொளற்கு, நினைவுறு-மனதிற் கருதப்பட்ட, சூழ்ச்சி ஒன்று-சூழ்ச்சி ஒன்றினை, நீ எனக்கு உரைத்தி-நீவிர் எனக்கு சொல்லுவீர்களாக, என்னு-என்று, பனிமலை-இமயமலையாகிய அரசனுல், தவஞ்செய்து-தவத்தைச்செய்து, ஈன்ற-பெறப்பட்ட, பவளவாய் மடந்தை-பவளம்போலுள்ள வாயையுடைய உமை, கூற-சொல்ல (அதற்கு), நனை அவிழ்-அரும்புவிரிந்த, கொன்றை-கொன்றைப் பூ மாலையைச் சூடிய, வேணி-சடையை யுடைய, நம்பன்-சிவ பெருமான், இதனைச்சொல்வான்-கீழ்க்கண்ட வற்றைச் சொல் வானுயினன். [எ—று.]

[கு-ரை.] உரைத்தி, முன்னிலைவினை இகாவிகுதி, மற்று அசைநிலை, பவளவாய் உவமத்தொகை, மடந்தை பருவங்குறியாது வந்த பெண்பாற் பெயர். என்னு என்கிற செய்யா என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம் கூற என்னும் வினையெச்சம்கொண்டு முடிந்தது. தவம், "உற்றநோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை அற்றே தவத்திற்குரு". (51)

[இறைவன் மேலுங் கூறுவார்]

போகபூ மியினிற் போக தனுவினுற் பொருந்த லாகா
தேகமா மின்ப சித்தி இயம்புறிற் கரும பூமி
யாகமா னதுகொண் டறின்யா தலான் ஞாலத் தெய்தி
யோகமா நெறியி னின்றோ ருண்மைசா தித்துக் கொள் [வர்.

[இ—ள்.] ஏகமாம்-ஒப்பு உயர்வு அற்று ஒன்ருகின்ற, இன்ப சித்தி-பேரின்பப் பேற்றை, இயம்புறில்-சொல்லு மிடத்து, கரும பூமி-கரும பூமியின் கண்ணே, ஆகம்-மக்களு டம்பைக், கொண்டு அன்றி-கொண்டு பிறந்தல்லாமல், போக பூமியினில்-போகத்திற் குரிய தேவர் உலகத்தில், போகதனு வினுல்-போகத்திற்குரிய உடம்பைக்கொண்டு, பொருந்தல் ஆகாது-அடைதல் முடியாது, ஆதலால்-ஆகையினுலே, ஞாலத் தெய்தி-மண்ணுலகத்திலேபிறந்து, யோகமா நெறியில்-யோக மாகிய வழியிலே, நின்ருர்-நின்றவர்கள், உண்மை-மெய்ஞ் ஞானத்தை, சாதித்துக்கொள்வர்-நிறைவேற்றிக் கொள்வார் கள். [எ—று.]

[கு-ரை.] போகபூமியாவது-பதினறு வயதுடைய குமரனும் பன்னிரண்டு வயதுடைய குமரியுமாய்க் கற்பகமபோலச் செல்வம் வந்து வாய்ப்பத்தாம் செய்த தவம் உள்ளவரை இன்ப நுகரும் இடம். இதனை, "பதினாட்டைக் குமரனும் விதிவழிப் பன்னிராட்டைக் குமரியுமாகி ஒத்த அன்பினும் ஒத்த நலத்தினும் கற்பக நன்மரம் நற்பயனுதவவாகிய செய்தவத்தளவும் அவ்வழிப் போகம் நுகர்வது போகபூமி" என்பதனலறிக. கரும பூமியாவது-உழவு, வரைவு, வாணிபம், விச்சை, சிற்பம் முதலிய தொழிற் பாகுபாட்டோடு கூடியது. ஒப்புயர்வு அற்ற இன்பசித்தி என்பது முத்தி, முத்திக்கு வழி பரஞானம், பரஞானம் பெறுவது கன்மபூமியில் நற்கருமப்பேற்ருல், இதனை "உரைசெயிற் பரஞானம் ஒன்றுமே முத்திக்கேது சரியை நற்கிரியை யோகந்தாமொரு மூனறுஞானம் மருவுதற்கேது" என்பனவற்ருல் உணர்க. "வானிடத்தவரு மண்மேல்வந்தரன் றனை அர்ச்சிப்பர்" என்றதாலும் கருமபூமியாகிய ஞாலமே முத்திபெறுதற்குரிய இடம் என்றறிக. ஞாலம் என்றது தொங்குதல் என்ற பொருள்பற்றியாதலின் உலகத்தின் உண்மை நிலையைப் பண்டைய புலவர் அறிந்திருந்தனர் என்பது புலனுகின்றது. யோகம் என்பது எட்டுவகை என்பதும் யோக சாதனத்தால்தான் மனத்தை அடக்க முடியும் என்பதும் அறிஞர் கண்ட ஒன்று அதனை இந்நூலுள் பிறிதோரிடத்திற் காண்க. (52)

[இறைவி வினு]

என்றிது கொழுநன் கூற இளங்கொடி யனைய தாயின்
ஒன்ருெரு மக்கள் ஞாலத் துவமையின் ஞான சித்தி
நன்றுற வுணர்த்த வல்ல குரவன் யார் நவிறி யென்னக்
குன்றணி மதிய மொப்பக் குனித்தவன் கூற லுற்ருன்.

[இ-ள்.] என்று இது-என்று இந்த மொழியை, கொழுநன் கூற-தன் தலைவனுகிய இறைவன் சொல்ல, இளங்கொடி-இளமை பொருந்திய கொடிபோல்பவளாகிய இறைவி (கூறுவாள்), அனையதாயின்-அப்படிப்பட்டதாஞல், ஞாலத்து-உலகத்தின் கண்ணே, ஒன்ருெரு மக்கள்-ஒவ்வொரு மனிதர்களும், உவமை இல்-ஒப்பில்லாத, ஞானசித்தி-ஞானநிலைப்பேற்றை, நன்றுற-நன்ருக அடையும்படி, உணர்த்தவல்ல-போதிக்கவல்ல, குரவன்-ஆசிரியன், யார்-எவர், நவிறிஎன்ன-சொல்லென்று வினவ, அணி-முடிமேல் அணிந்துள்ள, மதியம் ஒப்ப-பிறைபோல் வளைய, குன்று-மேருமலையை, குனித்தவன்-வளைத்தவனுகிய இறைவன், கூறலுற்ருன்-சொல்லத் தொடங்கினன். [எ-று.]

[கு-ரை.] நவில்தி என்பது நவிறி என ஆயிற்று. "குறில் செறியாலள அல்வழி வந்த தகாம் திரிந்தபின் கேடும்" என்றதால் லகரக் கேடும், ணலமுன் றனவும், என்றதால் தகரத்திரிவும் பெற்று நவிறி என ஆயிற்று.

குனித்தவன் வினையாலணையும் பெயர். கூற என்னும் வினையெச்சத்திற்கு முடிக்குஞ் சொல் வருவித்துக்கொள்ளுதல் சொல்லெச்சம். 'அணி மதியம் ஒப்பக்குன்று குனித்தவன்' உவமையணி. (53)

[இறைவன் செப்பு]

தொல்லையி லுயர்சுஞ் ஞானி தூய்நிராங்கார னென்பேர்
எல்லையில் தவங்கள் செய்ய எமதுமெய் வடிவத் தானே
அல்லம நாம மைந்த னாயினம் அனையான் தன்னை
வில்லுறழ் நுதலாய் காண்டல் மிகவுனக் கரியதென்றான்.

[இ-ள்.] வில்-வில்லை, உறழ்-ஒத்த, நுதலாய்-நெற்றியை யுடையவளே, தொல்லையில்-பண்டொரு காலத்திலே, உயர்-உயர்வாகிய, சுஞ்ஞானி-சுஞ்ஞானி, தூய்-பரிசுத்தமாகிய, நிராங்காரன்-நிராங்காரன், என்போர்-என்று சொல்லப்படுகின்ற தாய் தந்தையர்கள், எல்லையில்-அளவில்லாத, தவங்கள்செய்ய-தவங்களைச் செய்தலினாலே, எமது மெய்வடிவத்தான்-எமது தத்துவ உண்மை வடிவத்தோடு, அல்லமநாம-அல்லமனென்னும் பெயரையுடைய, மைந்தனாயினம்-புதல்வன் ஆயினேம், அனையான் தன்னை-அப்படிப்பட்ட அல்லமனை, காண்டல்-காணுதல், உனக்கு மிக-உனக்கு மிகவும், அரியது என்றான்-அருமையாகும் என்று சொன்னான். [எ-று.]

[கு-ரை.] சுஞ்ஞானி-பொருளைப் பொருளாகக்கொள்ளும் ஞான முடையவன். நிராங்காரன், அல்லதையானெனக்கோடல் தவிர்வோன். வடிவந்தானே, என்று பாடபேதம். (54)

[இறைவி கூற்று]

என்றலு மிமைய வல்லி எனக்கரி தென்ப தென்கொல்
உன்றனி யல்ல மன்றன் உண்மையை யறிய வேண்டில்
நின்றவர் தமக்கெ லாமும் எளிதென நெகிழ்ந் துரைப்ப
அன்றினர் புரமெரித்த அணிநகை யாளஞ் சொல்வாள்.

[இ-ள்.] என்றலும்-என்று சொல்லிய வளவிலே, இமைய வல்லி-இமையம் ஈன்ற கொடிபோன்ற உமாதேவி, எனக்கு அரிது என்பது-(எல்லாவற்றிற்கும் காரணமான) என்றனுக்கு அரிய செயல் என்று சொல்வது, என்-எதனால், உன்தனி-உமது ஒப்பற்ற கூறாகிய, அல்லமன்றன்-அல்லமாப்பிரபு தேவனது, உண்மையை-மெய் வடிவத்தை, அறியவேண்டில்-தெரிந்து

கொள்ள விரும்பினல், நின்றவர் தமக்கெலாமும்-(எனக்கே யன்றி) ஈண்டு கூடியிருக்கின்ற எல்லாருக்குமே, எளிதுஎனு-எளிமையானதென்று, நெகிழ்ந்து-மனமுருகி, உரைப்ப-சொல்ல, அன்றினர்-பகைவரது, புரம் எரித்த-ஊரை எரித்து அழித்த, அணிநகையாளன்-அழகிய நகையையுடைய இறைவன், சொல்வான்-சொல்லுவானாயினன். [எ—று.]

[கு-ரை.] கொல் அசை. திரிபுரத்தை இறைவன் சிரித்து அழித்தவன் என்பது நோக்கி, புரம் எரித்த நகையாளன் என்றார். நகை உமைமாட்டுத் தோன்றும் மடமைபற்றி வந்தது; என்னை, "எள்ளல் இளமை பேதமை மடம் என்றுள்ளப்பட்ட நகை நான்கென்ப" என்பது இலக்கணமாதலின். (55)

[இறைவன் கூற்று]

முனிவுறேல் வறிய வுன்றன் மொழியள வல்லன் மாதே
வினைதபும் அன்பர் அன்பால் வேண்டிய வடிவ னாகி
அனையவர் விழியிற் றோன்றி அருளுவன் அலம தேவன்
தனியியல் பியாவ ராலும் சாற்றிடற் கரிய தென்றான்.

[இ—ள்.] மாதே-தேவியே, முனிவுறேல்-கோபம் கொள்ளேல், வறிய-வீணான, உன்றன்-உனது, மொழியளவு-சொல்லளவிலே நிற்பவன், அல்லன்-அல்லன், வினை-வினைகளைத், தபும்-கெடுக்கும், அன்பர்-அன்பர்களாலே, அன்பால்-தனது அன்பின் பெருக்கால், வேண்டிய-விரும்பிய, வடிவனாகி-வடிவத்தையுடையனாகி, அனையவர்-அவர்களது, விழியில்-கண்களுக்கு, தோன்றி-வெளிப்பட்டு, அருளுவன்-அருள்செய்வான் (ஆதலின்) அலமதேவன்-அல்லமதேவனது, தனி-ஒப்பற்ற, இயல்பு-தன்மையானது, யாவராலும்-எவராலும், சாற்றிடற்கு-சொல்லுதற்கு, அரியது என்றான்-அருமையாகும் என்று சொன்னான். [எ—று.]

[கு-ரை.] முனிவுறேல்-வியங்கோள் வினைமுற்று; உமை நின்றவர் தமக்கெலாம் எளிது என்றதை மறுத்து இறைவன் கூறுதலால், முனிவுறேல் என்றார் என்க. யாவரானும், உயர்வு சிறப்பும்மை. "உயிர் வரினுக் குறள் மெய்விட்டோடும் யவ்வரின் இய்யாம்" என்ற விதிப்படி இயல்பு+யாவர் என்பது இயல்பியாவர் என்றாகியது. (56)

[இறைவி கூற்று]

மெய்ம்மையிம் மாற்ற மாகும்
வேறுளார்க் கியான்செய் மாயை
பொய்ம்மலி செயலிற் றப்பிப்
போமெனிற் காண்பல் என்று

அம்மலை மகள்த ருக்கி
அறைதலும் நின்றன் ஆற்றல்
மைம்மலி குழலாய் காண்கும்
என்றிது வள்ளல் கூறும்.

[இ-ள்.] வேறுளார்க்கு-அல்லமனொழிந்த ஏனைய அரி, அயன் முதலியோர்க்கு, யான் செய் மாயை-என்னாலே செய்யப் படுகின்ற மாயையானது, பொய் மலி செயலின்-பொய்யால் நிறைந்த செயலினின்றும், தப்பிப்போமெனின் - அவ்வல்லம னிடத்துத் தப்பிப்போமாகில், இம்மாற்றம்-(உன்றன் மொழி யளவல்லன்) என்ற இச்சொல், மெய்ம்மையாகும் - உண்மை யாகும், காண்பல்-(அவ்வாறுதலைக்) காணுவன், என்னு-என்று, அம்மலைமகள்-அந்த மலைமகளாகிய உமை, தருக்கி-செருக்குற்று, அறைதலும் - சொல்லிய அளவில், வள்ளல் - சிவபெருமான், மைமலிகுழலாய்-கருமை நிறைந்த கூந்தலையுடைய தேவியே, நின்றன் ஆற்றல்-நினது வல்லமையை, காண்கும்-காண்பேம், என்று இது கூறும்-என்று பின்கண்டவற்றைக் கூறுவான்.
[எ-று.]

[கு-ரை.] வேண்டுவோர் வேண்டுவதே ஈவான் இறைவன் ஆதலின் 'வள்ளல்' என்றார். காண்பல், அல்விகுதி தன்மை ஒருமைவினை முற்று விகுதி. காண்கும் என்றதில் கும்விகுதி எதிர்காலம் காட்டிற்று, காலத் தைக் காட்டுதல் இடைநிலையேயன்றி சில பகுதி ஒற்றிரட்டியும் விகுதியிற் சிலவும் காலம் காட்டும் ஆதலின். (57)

[இறைவன் கூற்று]

இன்னணம் சூளி யம்பி
இனிவறி திருத்தி யாயின்
பொன்னவிர் சுணங்கு பூத்த
புணர்முலை மடவாய் தோல்வி
நின்னிடை வருமென் றண்ணல்
நிகழ்த்தலும் இமைய வல்லி
என்னுரை தவறா தென்று
நெடுமொழி இசைத்துப் பின்னர்.

[இ-ள்.] அண்ணல்-சிவபெருமான், பொன் அவிர்-பொன் னைப்போல, விளங்குகின்ற சுணங்கு-தேமலானவை, பூத்த- படர்ந்துவிளங்குகின்ற, புணர்முலை-இணைந்த நகில்களையுடைய, மடவாய்-இளமையான உமாதேவியே, இன்னணம்-இவ்வித மாக, சூள்-வஞ்சினம், இயம்பி-சொல்லி, இனி-இதுமுதலாக,

வறிது-வீணாக, இருத்தியாயின்-இருப்பையாகில், தோல்வி-தோல்வியானது, நின்னிடை வரும்-நினக்கு உண்டாகும், என்று நிகழ்த்தலும்-என்று கூறினமாத்திரத்தில், இமயவல்லி-இமய மலையிற்றோன்றிய கொடிபோலும் உமாதேவியானவள், என்னுரை தவறாது-என்னுடைய மொழி பிழைக்காது, என்னா-என்று, நெடுமொழி-வஞ்சினச் சொற்களை, இசைத்து-சொல்லி, பின்னர்-அதன்பின்பு. [எ-று.]

[கு-ரை.] நெடுமொழி, தன் மேம்பாட்டுரையும் ஆம். பின்னர் என்றது அடுத்த செய்யுளிலுள்ள ஏயினள் என்பதோடு சென்று இயையும். மடவாய் என்பது அறியாமையுடையாளே என்றும் குறிப்பினால் கூறினாராயிற்று. புணர்முலை வினைத்தொகை. (58)

[மாயையைப் பூமிமேல் விடுதல்]

ஆயிடை அருகுநின்ற தமோகுண வடிவ மாகும்
மாயையை விளித்து நீபோய் மண்ணிடை அல்லமப்பேர்
நாயகன் றனைய றிந்து நணுகுதி என்று கூறி
ஏயினள் அவள்வ ணங்கி இனையதொன் றியம்ப லுற்றாள்.

[இ-ள்.] ஆயிடை-அவ்வவையினிடத்து, அருகு நின்ற-அண்மையில் நின்ற, தமோகுணம்-தாமத குணத்தையே, வடிவம்-வடிவமாகக்கொண்ட, மாயையை-மாயை என்பவளை, விளித்து-அழைத்து, நீபோய்-நீ சென்று, மண்ணிடை-பூமியினிடத்து, அல்லமப்பேர்-அல்லமன் என்னும் பெயரையுடைய, நாயகன்தனை-தலைவனை, அறிந்து-தெரிந்து, நணுகுதி-வருவாயாக, என்று கூறி-என்று சொல்லி, ஏயினள்-அனுப்பினாள், அவள்-(உடனே) அந்த மாயை, வணங்கி-(இறைவியைத்)தொழுது, இனைய தொன்று-இப்படிப்பட்டதான ஒரு சொல்லினை, இயம்பலுற்றாள்-சொல்ல ஆரம்பித்தாள். [எ-று.]

[கு-ரை.] நாயகன்தனை அறிதல் என்பதன் குறிப்பு அல்லமனைக் காம வேட்கையின்கண் வசப்படுத்தி அவன் கருத்தை யறிந்துவா என்றாளென்க. அ, இடை என்பது "தூக்கிற் சுட்டு நீளின் யகரமும் தோன்றுதல் நெறியே" என்ற விதிப்படி ஆயிடை என ஆயிற்று. மாயை மயக்குவது; ஒன்றை ஒன்றாகக் காட்டுவது. நணுகுதி என்னும் முன்னிலை வினை நணுகிடு என்னும் ஏவற்பொருளில் வந்தது (59)

[மாயை நெடுமொழி கூறல்]

அல்லமன் இயல்ப றிந்தங் கணைகுவன் நழுவு மாயின்
வல்லிதின் வலிந்து பற்றி யீர்த்திவண் வருவ லென்று
சொல்லினள் ஒருசூள் வேலை சுவறஉண் டிடுவ லென்று
புல்லிய எறும்பொன் றாற்றல் புகல்வது போல வன்றே.

[இ-ள்.] புல்லிய-சிறிய, எறும்பு ஒன்று-ஓர் எறும்பானது, வேலை-கடலை, சுவற-(அதிலுள்ள நீர்) வற்றும்படி, உண்டிடுவல்-குடித்துவிடுவேன், என்று-என்று, ஆற்றல்-வல்லமையைப், புகல்வது-புகல்வது ஆயின், போல-அதனைப்போல, அல்லமன் இயல்பு அறிந்து-அல்லம தேவனது தன்மையை உணர்ந்து, அங்கு-அவ்விடத்தே, அணைகுவன்-சேர்குவன், நழுவும் ஆயின்-(அவ்விதம்) அகப்படாமல் போவானாகில், வல்லிதின்-எனது வல்லமையினாலே, வலிந்துபற்றி-யானேசென்று இழுத்து, இவண்வருவல்-இவ்விடத்திற்கு வருவேன், என்று ஒரு சூள்-என்று ஒரு சூளுறவைச், சொல்லினள்-சொன்னாள். [எ-று.]

[கு-ரை.] ஆயின் என்பது சொல்லெச்சம். சூள் என்பது சபதங்கூறுதல். அப்படிப்பட்டதோர் எறும்பு இன்மையின் இல்பொருள் உவமையணி. அன்று ஏ அசைகள். அன்றே அப்பொழுதே எனப்பொருள் கொண்டு அடுத்த செய்யுளிலுள்ள செலவை உன்னினள் என முடித்தலும் ஒன்று. (60)

[மாயை பூமியை அடைதல்]

தன்னள வறியாள் மாழ்கித்
தண்மதி தவழும் வேணி
முன்னவன் அவையுள் நின்று
மொழிந்தவச் சூள்முடிப்பான்
பன்னகமுடிப ரித்த
பார்மிசைச் செலவை நெஞ்சத்
துன்னினள் எய்தி னாள்அவ்
வொளியிழை மாயை மாதோ.

[இ-ள்.] ஒளி இழை அம்மாயை-விளங்காநின்ற ஆபரணத்தையுடைய அம்மாயையானவள், தன் அளவு அறியாள்-தனது ஆற்றலை அறியாதவளாகி, மாழ்கி-மயங்கி, தண்மதி-குளிர்ந்த திங்கள், தவழும்-தவழ்கின்ற, வேணி-சடையையுடைய, முன்னவன்-சிவபெருமானது, அவையுள் நின்று-சபையின்கண் நின்று, மொழிந்த-(தன்னாலே) சொல்லப்பட்ட,

அச்சூள்-அந்தச் சூளினை, முடிப்பான்-முடித்தற்பொருட்டு, பன்னகம்-ஆதிசேடனது, முடிபரித்த-முடிகளினாலே தாங்கப்பட்ட, பார்மிசை-பூமியின்மேல், செலவை-செல்லுகையை, நெஞ்சத்து-மனதின்கண், உன்னினள்-நினைத்தவளாகி, எய்தினள்-அதனை அடைந்தாள். [எ—று,]

[கு-ரை.] மாது ஓ அசைகள்; அல்லது மாயை மாது எனப் பொருள் கொண்டு ஓ அசை என்று கோடலும் ஆம். முடிப்பான் என்னும் வினையெச்சம் உன்னினள் என்னும் வினைகொண்டது. உன்னினள் முற்றெச்சம். பன்னகம்-பல நகம்; நகம் கால்; எனவே பல கால்களைக்கொண்டது எனக் காரணப்பெயர். நெஞ்சத்து உன்னினள் என்ற மிகையால் அவளது தருக்கு உணர்த்தினாராயிற்று. நெஞ்சம் என்பது எழாம் வேற்றுமை உருபு தொக அத்துச்சாரியை பெற்று வந்தது; மகர ஈற்றுப்பெயா பெரும்பாலும் அத்துச் சாரியையே பெற்றுவருதல் இலக்கணம. (61)

கைலாசகதி முற்றிற்று.

மூன்றாவது

# மாயையின் உற்பத்தி கதி

[மாயையானவள் பூமியின்கண் பிறந்த வரலாற்றைக் கூறுவது]

பூதலத்தைப் பொருந்துபு மாயையென்
றோதலுற்ற ஒருபிடி நுண்ணிடை
மாதவத்தர் மனங்கள் கலங்குறச்
சாதமுற்று வளர்ந்தமை சாற்றுவாம்.

[இ—ள்.] மாயை என்று ஓதலுற்ற-மாயை யென்று சொல்லப்படுகின்ற, ஒருபிடி நுண் இடை-ஒரு கைப்பிடி யளவாகிய நுண்ணிய இடையை உடையவள், பூதலத்தை-பூலோகத்தை, பொருந்துபு-அடைந்து, மாதவத்தர்-பெரிய தவத்தினராய முனிவர்களுடைய, மனங்கள்-நெஞ்சங்கள், கலங்குற-கலங்கும்படி, சாதமுற்று-பிறந்து, வளர்ந்தமை-வளர்ந்த செய்தியை, சாற்றுவாம்-சொல்லுவாம். [எ—று.]

[கு-ரை.] பொருந்துபு என்னும் வினையெச்சம், வளர்ந்தமை என்பதிலுள்ள வளர்ந்த என்னும் பெயரெச்சத்தோடு முடிந்தது. நுண்ணிடை அன்மொழித் தொகை. (1)

[இது முதல் நான்கு பாட்டுகளில் நாட்டுச் சிறப்பு]

களங்க வெண்மதி நெஞ்சங் கவற்றுமோர்
துளங்கு சங்குடைத் தோன்றல் மணத்தணி
வளங்கொள் மண்மகள் மார்பின் மதாணிபோல்
விளங்கும் என்ப விளவல தேயமே.

[இ—ள்.] களங்கம் - களங்கத்தையுடைய, வெண்மதி-வெள்ளிய சந்திரனது, நெஞ்சம்-மனத்தை, கவற்றும்-கவல்விக்கின்ற, ஓர்-ஒப்பற்ற, துளங்கு-ஒளியுடைய, சங்கு உடை-சங்கத்தையுடைய, தோன்றல்-திருமாலினது, மணத்து-விவாக காலத்திலே, அணி-அலங்கரிக்கப்பட்ட, வளங்கொள்-பல வளங்களையும் கொண்ட, மண்மகள்-பூமிதேவியினது, மார்பில்-மார்பிலேயுள்ள, மதாணிபோல்-பதக்கம்போல், விளவல தேயம்-விளவலம் என்னும் நாடானது, விளங்கும்-விளங்கா நிற்கும். [எ—று.]

[கு-ரை.] கவற்றல் - வருத்தல். சங்கினிடத்துக் களங்கமின்மையின் களங்கமுடைய மதி கவற்றும் என்றார். "பிணி இன்மை செல்வம் விளைவு இன்பம் எமம் அணியென்ப நாட்டிற் கிவ்வைந்து" எனவே இவ்வைந்தும் உடைமையின் வளங்கொள் என்றார். பூமிக்கு விளவலதேயம் பேரழகு செய்தல்பற்றி அத்தேயத்தை மண்மகளின் பதக்கம் என்று குறித்தலின் தற்குறிப்பணி என்ப. ஏ அசைகள். (2)

வாவி யாவும் மதன்பெருந் தூணிசெய்
யாவு மாரன் எடுக்குஞ் சிலையிடம்
காவெ லாமவன் காகள சாலைகள்
பூவை மார்மனை போர்க்கள மென்பவே.

[இ—ள்.] வாவியாவும்-குளங்களெல்லாம், மதன்-மன்மதனது, பெரும்-பெரிய, தூணி-அம்புக்கூடுகளாகும், செய்யாவும்-வயல்களெல்லாம், மாரன்-அம்மன்மதனாலே, எடுக்கும்-எடுக்கப்படுகிற, சிலையிடம்-விற்சாலைகளாகும், காவெலாம்-சோலைகளெல்லாம், அவன்-அம்மன்மதனது, காகள சாலைகள்-திருச்சின்னச் சாலைகளாகும், பூவைமார்-மங்கையர்களது, மனை-வீடுகளெல்லாம், போர்க்களம்-(அம்மன்மதனது) போர்க்களங்களாகும். [எ—று.]

[கு-ரை.] குளங்களெல்லாம் தாமரை நீலோற்பலங்களுக்கும் வயல்களெல்லாம் கரும்புகளுக்கும் சோலைகளெல்லாம் குயில்களுக்கும் மங்கையர். வீடுகளெல்லாம் காம லீலைகளுக்கும் இடங்களாக இருக்கின்றன என்பதை, வேறு விதங்களாலே கூறுகையினாலே பிறிதினவிற்சியணி

இதனால் அந்நாடு விண்ணோர் நாட்டைப்போலத் தொலைவில் போகம் துய்த்தற்குரியது என்பது தொனிக்கின்றது. அம்மன்மதனது' என்று பின்னுங் கூட்டப்பட்டது. என்ப, ஏ அசைகள். (3)

பொறைக்க யிற்றிற் புகழையின் சொல்லெனும்
விறற்க யிற்றின் விருந்தைக் குரவர்சொல்
மறைக்க யிற்றின் மனத்தைத் திருவைநல்
அறக்க யிற்றின் அசைப்பவ ரெங்குமே.

[இ-ள்.] பொறைக் கயிற்றின்-பொறுமையாகிய கயிற்றினாலே, புகழை-புகழையும், இன்சொல் எனும்-இனிய சொல் என்கிற, விறல்-வெற்றியுடைய, கயிற்றின் - கயிற்றினாலே, விருந்தை-விருந்தினரையும், குரவர்-ஆசிரியர், சொல்மறை-அருளிய மறை மொழியெனும், கயிற்றின்-கயிற்றினாலே, மனத்தை-நெஞ்சையும், நல்-தூய, அறக்கயிற்றின்-அறமாகிய கயிற்றினாலே, திருவை-செல்வத்தையும், அசைப்பவர்-கட்டுபவர், எங்கும்-அந்த நாடெங்கும் (உளர்). [எ—று.]

[கு-ரை.] உளர் என்பது அவாய் நிலையால் வந்தது. "ஒருத்தார்க்கு ஒரு நாளை இன்பம் பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும் புகழ்" என்பது பொய்யாமொழியாதலால் பொறுமையுடையாரினின்றும் புகழ் நீங்கமாட்டாமையறிக. செய்மைக்கண் கண்டுழி இன்முகமும் அதுபற்றி நண்ணிய வழி இன்சொல்லும் அவைபற்றி உடன்பட்டவழி நன்றூற்றலும் என விருந்தோம்புவார்க்கு இன்றியமையாத மூன்றனுள் முதலாய இன்முகம் இல்வழிச் செய்மைக்கண்ணே விருந்தினர் வாடி நீங்குவர். ஆதலின் இன்சொல் எனும் விறற்கயிற்றின் விருந்தை என்றார். விருந்து என்பது புதுமை; அது ஆகுபெயராய்ப் புதியராய் வந்தார்மேல் நின்றது. விருந்தினர் இருவகையர்; பண்டு அறிவு உண்மையின் குறித்துவந்தாரும், அஃது இன்மையின் குறியாது வந்தாரும் என. ஐம்புலவேடரின் அயர்ந்தனை வளர்த்தெனத் தம்முதல் குருவுமாய், இறைவன் வருதலின் குரவர் மெய்யுரை மனதை யடக்கும் ஆதலின் குரவர்சொல் மறைக்கயிற்றின் மனதை என்றார். "அறத்தி னூங்கு ஆக்கமுமில்லை அதனை மறத்தலி னூங்கில்லை கேடு" என்று அறநூல் கூறலால் நல்லறக்கயிற்றின் திருவை என்றார். பொறை, இன்சொல், குரவர்சொல் மறை, நல்லறம் ஆகிய இவைகளில் கயிற்றின் தன்மையை ஏற்றிக்கூறலால் உருவகவணி. "நெடிலோடுயிர்த்தொடர்க் குற்றுகரங்களுள் டறஒற்றிரட்டும் வேற்றுமை மிகவே" என்ற விதிப்படி உயிர்த்தொடர்க்குற்றுகரமாகிய கயிறு இன் சாரியை சேர்ந்தபோது கயிற்றின் என ஆயது. ஏன்கிடத்தும் கருவிப பொருளில் வந்த ஆலுருபு தொக்கது. ஏ, அசை. (4)

வறிய னுவன் வடதிசை மன்னவன்
அறிவி லாளன் அனந்தனு மாவனேர்
சிறியி னுவன் சிலைமதன் பூம்பொழில்
வெறியு லாவும் விளவலத் தெய்தினே.

[இ-ள்.] பூம்பொழில்-மலர்ச்சோலைகளது,வெறியுலாவும்-மணம் உலாவாநின்ற, விளவலத்து-விளவலதேயத்தை, எய்தின்-அடைந்தால், வடதிசை மன்னவன்-குபேரன், வறியன் ஆவன்-தரித்திரனுவான், அனந்தனும்-ஆதிசேடனும், அறிவிலாளன்-மூடன், ஆவன்-ஆகுவான், சிலைமதன்-கரும்புவில்லையுடைய மன்மதன், ஏர்-அழகில், சிறியன் ஆவன்-குறைந்தவனுக இருப்பன். [எ-று.]

[கு-ரை.] இவ்வாறு கூறவே அந்நாட்டிலுள்ளோர் குபேரன் முதலியோரின் மிக்கவர் என்றுரெண்க. விளவலத்தெய்தின் குபேரன் முதலியோர் வறியனுகுகை முதலியன நாட்டி இருத்தலின் உய்த்துணர்வைப் பணி. அறிவு + இல் + ஆளன் = அறிவு இன்மையை ஆள்பவன் என்று பொருள். "உருவின் மைந்தரின் வேனில் வேட்கு உடைகுநரில்லை தெருவின் மாக்களிற் சேடனிற்சூழ்குநர் இல்லை பொருளிலார்களிற்றனதனைப் பொருவிலாரில்லை" என்ற செய்யுட் கருத்தும் இதனேடு ஒத்து நோக்கற்பாலது. ஏ. ஈற்றசை. (5)

[இது முதல் 14 செய்யுட்களில் நகரச்சிறப்பு கூறப்படுகின்றது]

இணையி லாத இனைய வளம்பல
நணுகி வாழும் விளவல நாட்டிலவ்
அணியி னுப்பண் அழுத்தும் விலையிலா
மணியின் மேவும் வனவசை மாநகர்.

[இ-ள்.] இணை இலாத-ஒப்பற்ற, இனைய வளம் பல-இப்படிப்பட்ட வளங்கள் பலவற்றையும், நணுகி-பொருந்தி, வாழும்-வாழ்கின்ற, விளவல நாட்டில்-விளவலநாட்டின்கண், வனவசை மாநகர்-வனவசை என்னும் பெரிய நகரமானது, அவ் அணியின்-அந்தப் பதக்கத்தின், நாப்பண்-நடுவில், அழுத்தும்-பதிக்கப்பட்ட,விலையிலாமணியில்-விலையிடமுடியாத நாயக மணிபோல, மேவும்-பொருந்தும். [எ-று.]

[கு-ரை.] இங்கே அவ்வணி என்று சுட்டப்பட்டது முன்னே மண்மகள் மார்பின் மதாணி என்றதை. பூமிக்கு விளவல நாடு சிறந்தாற்போல அந்நாட்டுக்கு வனவசை நகரம் அழகு செய்கின்றது என்றதாயிற்று. இன்னும் இதனுனே இந்நகரத்தை நாயகமணியாகக் கூறவே மற்றய நகரங்கள் எல்லாம் சுற்றிலும் உள்ள மணிகள் போலும் என்பதும் பெறப்பட்டது.

வனவசை நகரத்தை நாயகமணியாகக் குறித்தலின் இது தற்குறிப்பேற்றவணி. பலவும் என்பதிலுள்ள முற்றும்மை விகாரத்தால் தொக்கது. விலையிலா ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். (6)

படிக்குள் ஈரப் பலாப்பழுத் தொண்புவி
வெடித்த வாயில் அனந்தன் மணிவெயில்
அடுத்து வானத் தமர்மதி யைத்தொடாக்
கடுத்த வேள்குடைக் காம்பெனத் தோன்றுமால்.

[இ-ள்.] படிக்குள்-நிலத்தினுள், ஈரப்பலா-வேர்ப்பலாக்காய், பழுத்து-கனிந்து, ஒண்புவி-நன்மை நிறைந்த பூமி, வெடித்த-வெடிக்கப்பட்ட, வாயில்-வழியில், அனந்தன்-ஆதிசேடனது, மணி-முடியிலுள்ள மாணிக்கத்தினது, வெயில்-ஒளியானது, வானத்து-ஆகாயத்தின்கண், அமர்-தங்கிய, மதியை-முழுத்திங்களை, அடுத்து-சேர்ந்து, தொடா-தொட்டு, கடுத்த-(காமவேட்கையார்மேல்) கோபித்த, வேள்-மன்மதனது, குடை-குடையினது, காம்பு என-காம்பைப்போல, தோன்றும்-தோன்றாநிற்கும். [எ-று]

[கு-ரை.] ஆல் அசை, மன்மதனுக்குக் குடையாதலின் சந்திரனை வேள்குடையென்றார். அம்மணிக்கதிரைக்குடைக் காம்பாகக் குறித்தலால் தற்குறிப்பணி. இதனால் அந்நிலம் மிக்க செழுமையுடைத்தென்பது தொனிக்கின்றது. (7)

நறவ விழ்ந்த நறுமலர் தோறும்வண்
டுறவ ருந்தி யிரு ளுற் றொடுங்குமால்
அறவர் தங்க ளகந்தொ று மையமுண்
துறவர் தங்குகை துன் னுதல் போலவே.

[இ-ள்.] வண்டு-வண்டுகளானவை, அவிழ்ந்த-மலர்ந்த, நறுமலர் தோறும்-பரிமளம் பொருந்திய ஒவ்வொரு மலரினும், நறவு-தேனை, உற அருந்தி-மிகவும் உண்டு, இருளுற்று-தம் கூடுகளைச் சேர்ந்து, ஒடுங்கும்-அடங்கும், அறவர் தங்கள்-இல்லறத்தாரது, அகம்தோறும்-வீடுகள்தோறும், ஐயம்-பிச்சையேற்று, உண்-உண்ட, துறவர்-துறவறத்தோர், தம்குகை-தமது குகைகளிலே, துன்னுதல்போல, அடங்கியிருத்தல் போல. [எ-று.]

[கு-ரை.] ஆல், ஏ. அசை. உவமையணி. ஒடுங்குவ என்றும் பாடம். அறன் எனப்பட்டதே இல்வாழ்க்கை என்பார் செந்நாப்போதார் ஆதலின் அறவர் என்றற்கு இல்லறத்தார் என்று பொருளுரைக்கப்பட்டது. (8)

வாவிச் செங்க மலங்களில் வல்லிருள்
மேவித் துஞ்சி விடிதரு காலையில்
காவிற் சென் று களிவண் டினங்குயில்
கூவத் தண்மதுக் கொள்ளைகொண் டுண்ணுமால்.

[இ-ள்.] களிவண்டு இனம்-களிப்பையுடைய வண்டின் கூட்டங்கள், வாவி-குளங்களிலுள்ள, செங்கமலங்களில்-செய்ய தாமரை மலர்களிலே, வல்லிருள்-நிறைந்த இருளுடைய இராப் பொழுது, மேவித்துஞ்சி-விரும்பித் தூங்கி, விடிதரு காலையில்-விடியற்காலத்தில், காவிற்சென்று-சோலையுட்புகுந்து, குயில் கூவ-குயில் கூவாநிற்க, தண்மது-குளிர்ச்சிபொருந்திய தேனை, கொள்ளைகொண்டு-மிகுதியாக, உண்ணும்-உண்ணுநிற்கும்.
[எ-று.]

[கு-ரை.] ஆல், அசை. வண்டு கொள்ளைகொண்டு மதுவை யுண்ணுதலால் சோலையிலுள்ள குயிலினங்கள் கூவின. ஓர் ஊரிலே புகுந்து அவ்விடத்தே யுள்ளவற்றையெல்லாம் பிறர் கொள்ளை கொள்ளுங்கால் அவ்வூரார் கூவுவார் என்ற உலக வழக்கத்தை ஞாபகப்படுத்தியது. செங்கமலம், பிறிதின் இயைபு நீக்கிய விசேடணம். வெண்கமலம் உண்மையின், மதுவுண்பவர் மயங்கி ஏனைய களவு முதலிய பாபங்களைச் செய்வார் என்பது தோன்ற மதுவுண்டு களிப்படைந்திருந்த வண்டுகள் கொள்ளையை நாடிற்று என்ற நயமும் காண்க. கொள்ளை, களவு கூட்டம் என்ற இருபொருள் தோன்றநின்றது. (9)

பெடையொ டுற்றுப் பிரிவில் பைங்கிள்ளைகள்
குடியி ருக்கும் குளிர்பொழில் வாய்மலர்ப்
பொடியு திர்க்கில வேலளி போய்வயல்
மடையு டைக்கும் மதுப்பெரு வெள்ளமே.

[இ-ள்.] பெடையொடு உற்று-தம் பெண் பறவைகளோடு கூடி, பிரிவு இல்-பிரிதல் இல்லாத, பைங்கிள்ளைகள்-பச்சைக் கிளிகள், குடி இருக்கும் - வசிப்பதற்கு இடமாகிய, குளிர் பொழில் வாய்-குளிர்ச்சிபொருந்திய சோலையினிடத்து, மலர்ப் பொடி-பூவிலுள்ள மகரந்தப்பொடியை, அளிபோய்-வண்டுகள் சென்று, உதிர்க்கிலவேல்-உதிர்க்காது இருக்குமாயின், மதுப் பெருவெள்ளம்-தேனினது பெரிய வெள்ளமானது, வயல் மடை-கழனிகளின் மடைகளை, உடைக்கும்-உடைத்துவிடும்.
[எ-று.]

[கு-ரை.] ஏ, அசை. உயர்த்துச் சேருக்கிவிடுதலால் உடைக்கின்றதில்லையென்றதாயிற்று. வாய் ஏழாம் வேற்றுமை உருபு. (10)

சேலு லாவித் திரியு நதிப்புனல்
மாலி யானை மறையக் கதிர்த்தலைச்
சாலி நீடித் தழைத்து விளைவயல்
காலி னோடிக் கடிது விழுமரோ.

[இ-ள்.] சேல்-கெண்டைமீன்கள், உலாவி-விளையாடி, திரியும்-திரிதற்கிடமாக இருக்கின்ற, நதிப்புனல்-ஆற்று நீரானது, மால்யானை-பெரிய யானையானது, மறைய-மறையுமளவாக, கதிர்தலை-கதிர்களைத் தலையிலேயுடைய, சாலி-நெற்பயிர்களானவை, நீடி-ஓங்கி, தழைத்து-செழித்து, விளை-விளைகின்ற, வயல்-கழனிகளிடத்து, காலின் ஓடி-வாய்க்கால்களின்வழியே ஓடி, கடிது-விரைவிலே, விழும்-பாயும். [எ-று.]

[கு-ரை.] அரோ அசை. மால்+யானை=மாலி யானை; "தன்னொழி மெய்ம்முன் யவ்வரின் இகரம் துன்னும் என்று துணி நரும் உளரே" என்ற விதிப்படி இகரந்தோன்றி மாலி யானை என ஆயிற்று. வயல், கால் ஏழாம் வேற்றுமைத் தொகை. "களிறுமாய்ப்பக் கதழ்ந்தெழும் பூம்பயிர்" என்றார் பிறரும். (11)

வரிக்க யல்செங் கமலம் வரிவளை
இருக்கை யால்மல ரம்பினை ஏந்தலால்
விரிக்கும் அஞ்சிறை மென்னடைப் புள்வயல்
செருக்கு வின்மதன் செங்கை நிகர்க்குமால்.

[இ-ள்.] விரிக்கும்-விரிக்கின்ற, அம்-அழகிய, சிறை-சிறகுகளையும், மெல் நடை-மென்மையான நடைகளையும் உடைய, புள்-பறவைகளையுமுடைய, வயல்-கழனியானது, வரிக்கயல்-கோடுகளையுடைய மீனும், செங்கமலம்-செந்தாமரை மலர்களும், வரிவளை-நெடிய சங்கும், இருக்கையால்-இருத்தலாலும், மலர்-மலர்களையுடை, அம்பினை-நீரினை, ஏந்தலால்-தாங்குதலாலும், செருக்குவில்-கரும்பு வில்லையுடைய, மதன்-மன்மதனது, செங்கை நிகர்க்கும்-செய்ய கைகளை ஒத்திருக்கும் மன்மதனுக்கு, வரிக்கயல்-(மீன் வடிவமான ரேகை) மச்சரேகையும், செங்கமலம்-(தாமரை வடிவமான ரேகை) பத்ம ரேகையும், வரிவளை-(சங்கு வடிவமான ரேகை) சங்க ரேகையும், இருக்கையால்-இருத்தலாலும், மலர்-பூவாகிய, அம்பினை-அம்புகளை, ஏந்தலால்-ஏந்துகின்ற காரணத்தினாலும் என்று கரத்திற்கேற்பக் கொள்க. [எ-று.]

[கு-ரை.] ஆல், அசை. உத்தம இலக்கணம் வாய்ந்த மாந்தாது கைகளில் நல்ல இலக்கணத்தின் குறியாக மேற்சொன்ன ரேகைகள் அமைந்திருத்தல் இயல்பு. மன்மதன் உத்தம இலக்கணம் வாய்ந்த அழகன் ஆதலின்

அவனது கைகளில் இவ்விரேகைகள் உள்ளன. முதல் இரண்டு வரிகளும் மன்மதனது கைகளுக்கும் வயலுக்கும் சிலேடையாக வந்தது ஆதலின் சிலேடை அணி. அம் சிறை என்பது அழகிய சிறை என்பதன்றி அகம்+ சிறை எனக்கொண்டு உட்சிறகுகளையுடைய என்றும் பொருள் கொள்ள லாம். அப்பொழுது "அகம்முனர்ச்செவிகைவரின் இடையனகெடும்" என்பதில் செவிகை என்னும் முறையன்றிக் கூற்றினுல் அகம் முன்னர் சிறை என வருவதும் அம்சிறை என வரும் என்று கொள்க என்றார் உரை யாசிரியர். (12)

நளிர்க டற்றுயி லுரணன் தன்னுருக்
கொளவ ளிப்பவர் கையிற்கொ டுத்திடும்
வளை பி றக்கும் இடமென வண்புனல்
குளம னைத்தும் குடவளை மொய்க்குமால்.

[இ-ள்.] நளிர்-தண்மையான, கடல்-கடலின்கண், துயில்-தூங்குகின்ற, நாரணன்-திருமால், தன்உரு-தனது வடிவமாகிய சாரூப்பிய பதவியை, கொள-பெறும்படி, அளிப்பவர்-அளிசெய் யற்குரிய நித்திய சூரிகளது, கையில்-கையின் கண், கொடுத் திடும்-கொடுக்கப்படுகின்ற, வளை-சங்குகளானவை, பிறக்கும்-தோன்றும், இடம் என-இடம் என்று சொல்லும்படி, வண் புனல்-வளம் பொருந்திய நீரையுடைய, குளம் அனைத்தும்-தடாகங்கள் அனைத்தினும், குடவளை-குடம்போலுள்ள சங்கு களானவை, மொய்க்கும்-நெருங்கிச் சூழ்ந்திருக்கும். [எ-று.]

[கு-ரை.] சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் என்ற பதவி நான்கனுள் சாரூபம் என்பது தன்னைப்போல பஞ்சாயுதம் முதலிய எல்லாம் உடையவராகி ஸ்ரீதேவி முதலிய சத்திகளின்றி இருக்கும்படி தன்னையடைந் தோர்க்கு அளிக்கும் பதவி. பஞ்சாயுதத்தில் ஒன்றாய பாஞ்ச சன்னியம் என்று சொல்லப்படுகிற சங்கு பல வேண்டியிருத்தலின் பலருக்கும் கொடுப் பதற்கு வேண்டிய அளவு உண்டாகின்ற இடமாக அக்குளம் இருக்கின்றது என்றார்; எனவே அக்குளத்தின் சிறப்பும் அதனுள் இருக்கும் சங்கின் சிறப் பும் கூறப்பட்டது. குடவளை-உவமத்தொகை. ஆல் அசை. (13)

[மதில் அகழிகளின் சிறப்பு]

தாழ்ந்தோர் உயர்வர் என்றுமிக
உயர்ந்தோர் தாழ்வர் என்றுமறம்
சூழ்ந்தோர் உரைக்கும் உரைகண்டாம்
மதில்சூழ் கிடந்த தொல்லகழி
தாழ்ந்தோர் அனந்தன் மணிமுடிமேல்
நின்றன் றுயர்ந்த தடவரையைச்
சூழ்ந்தோர் வரையின் உதிப்பவன்றாட்
கீழ்நின்றது போய்ச்சூழ் எயிலே.

[இ—ள்.] தாழ்ந்தோர் உயர்வர் என்றும்-தாழ்ந்தவர்கள் உயர்வார்கள் என்றும், மிக உயர்ந்தோர் தாழ்வர் என்றும்-அதிகமாக உயர்ந்தவர்கள் தாழ்வார்கள் என்றும், அறம் சூழ்ந்தோர்-அற நூல்களை ஆராய்ந்தோரால், உரைக்கும்-சொல்லப்பட்ட, உரை-மெய்யுரை அளவையினை, கண்டாம்-அறிந்தோம், மதில்சூழ் கிடந்த-மதிலைச்சூழ்ந்து கிடந்த, தொல் அகழி-பழமையாகிய அகழியானது, தாழ்ந்து-தாழ்ந்தமையினாலே, ஓர் அனந்தன்-ஒப்பற்ற சேடனது, மணிமுடிமேல்-அரதனத்தையுடைய தலைமேலே, நின்றன்று-நின்றது, சூழ்-(அந்நகரத்தைச்) சூழ்ந்திருக்கிற, எயில்-மதிலானது, உயர்ந்து-உயர்ந்தமையால், தடவரையைச் சூழ்ந்து-மேருவை வலம்வந்து, ஓர் வரையின்-ஒப்பற்ற உதயகிரியினின்றும், உதிப்பவன்-உதயஞ் செய்பவனாகிய ஞாயிறினது, தாள்கீழ்-அடியின்கீழ், போய் நின்றது-(வளர்ந்து) தங்கிற்று. [எ—று.]

[கு-ரை.] மதில் சூரிய மண்டலம் வரையும் உயர்த்தப்பட்டும் அகழி நாகலோகம்வரை தாழ்த்தப்பட்டும் இருத்தலின் உயர்தல் மதிலின்கண்ணும் தாழ்தல் அகழியின்கண்ணும் கூறப்பட்டன. முன்னால் சொல்லப்பட்ட தாழ்ந்தோர் உயர்தலும், உயர்ந்தோர் தாழ்தலுமாகிய பொதுப்பொருளைப் பின்னால் கூறப்பட்ட சிறப்புப்பொருளைக்கொண்டு பெறவைத்தலால் இது **வேற்றுப்பொருள்வைப்பணி.** "அடக்கம் அமரருள் வைக்கும் அடங்காமை யாரிருள் உய்த்துவிடும்" "பணியுமாம் என்றும் பெருமை சிறுமையணியுமாம் தன்னை வியந்து" என்ற பொய்யாமொழிகளின் கருத்தை இதனோடு ஒப்பிட்டு நோக்குக. (இயேசு தன் மாணவர்க்குக் கூறிய உபதேச மொழிகளுள் ஒன்று தாழ்த்தப்பட்டார் உயர்த்தப்படுவர் உயர்த்தப்பட்டார் தாழ்த்தப்படுவர் என்பது. இக்கருத்தையும் இச்செய்யுளோடு ஒப்பு நோக்கி மகிழ்க.) (14)

சொற்போர் புரிவர் நான்மறையா
றங்கம் உணர்ந்த தொழுகுலத்தோர்
விற்போர் புரிவர் நெடியசிலை
யிராமனனைய விறல் வேந்தர்
பொற்போர் புரிவர் பிறர்பொருளும்
தம்போற் பேணிப்புரி வணிகர்
நெற்போர் புரிவர் அந்நகரின்
வேளாண் குலத்து நெறியினரே.

[இ—ள்.] அந்நகரில்-அந்த வனவசைமா நகரத்தின்கண், நான் மறை-நான்கு வேதங்களையும், ஆறு அங்கம்-(அவற்றின்) ஆறு அங்கங்களையும், உணர்ந்த-கற்று அறிந்த, தொழுகுலத்தோர்-அந்தணர், சொற்போர்-சொற்களினாலே செய்யப்படும்

போரை, புரிவர்-செய்வர், நெடிய சிலை-நீண்ட வில்லையுடைய, இராமன் அனைய - இராமபிரானை ஒத்த, விறல் - வல்லமை பொருந்திய, வேந்தர்-அரசராயினோர், விற்போர்-விற்களாலே செய்யப்படும் போரை, புரிவர்-செய்வர், பிறர் பொருளும்-பிறருடைய பொருள்களையும், தம்போல்-தம்முடைய பொருள்களைப்போல, பேணி-கப்பாற்றி, புரி-(வாணிபம்) செய்கின்ற, வணிகர்-வணிகராேனோர்கள், பொற்போர்-பொன்களாலே செய்யப்படும் போரை, புரிவர் - செய்வர், வேளாண்குலத்து-வேளாண்மையோடு கூடிய குலத்தினது, நெறியினர்-மரபிலே தோன்றியவர்கள், நெற்போர்-நெற்களாலே செய்யப்படும் போரை, புரிவர்-செய்வர். [எ—று]

[கு-ரை.] எகாரம் ஈற்றசை. முன்னிரண்டடியில் போர் சண்டையையும் பின்னிரண்டடியில் வந்துள்ள போர் குவியலையும் உணர்த்தியது. முதலெழுத்து நீங்க ஏனைய பல வெழுத்துக்கள் ஒன்றிவரத்தொடுப்பது திரிபு என்னும் அணியாதலின் இச்செய்யுள் திரிபணி. சொற்போர், விற்போர், மூன்றும் உருபும் பயனும் உடன்தொக்க தொகை. பொற்போர், நெற்போர், ஆறும் வேற்றுமைத்தொகை ஒன்றன் கூட்டத்தற்கிழமைப்பொருள். அந்தணரை ஏனைய வருணத்தார் தொழுதல்பற்றி தொழுகுலத்தார் என்றார் போலும். ஒன்றும் புகழ்தல்பற்றி விற்போரில் சிறந்தவன் இராமன் என்று கூறினர். "வாணிகஞ் செய்வார்க்கு வாணிபம்பேணிப் பிறவுந் தமபோற்செயின்" என்ற பொய்யாமொழியை உட்கொண்டது மூன்றாவது அடி. புரிவர் என முன்வந்த சொற்பொருளே பின்வந்தமையால் பின்வருநிலையணி. (15)

உடுப்போர்க் குடுக்குந் துகில்களா
லுண்போர்க் குண்ணும் பொருள்களாற்
றொடுப்போர்க் கெடுக்கும் மலர்களா
லணிவோர்க்கு அணியும் சுடரிழையால்
அடுப்போர்க் கடுக்கும் மனைகளாற்
குறைபா டுடைய தன்றதுதான்
கொடுப்பார்க் கிரப்போ ரிலாத
குறையொன் றுளது கூறுங்கால்.

[இ—ள்.] அதுதான்-அந்த வனவசைமா நகரந்தான், கூறுமிடத்து - சொல்லுமிடத்து, உடுப்போர்க்கு - உடுத்திக்கொள்கின்றவர்களுக்கு, உடுக்கும்-கட்டிக்கொள்ளும், துகில்களால்-ஆடைகளாலும், உண்போர்க்கு - உண்ணுகின்றவர்களுக்கு, உண்ணும்-உண்ணுதற்குரிய, பொருள்களால்-உணவுப்பண்டங்களாலும், தொடுப்போர்க்கு-கட்டுகிறவர்களுக்கு, எடுக்கும்-

எடுத்தற்கு வேண்டிய, மலர்களால்-பூக்களினாலும், அணிவோர்க்கு-அலங்காரம் செய்துகொள்ள விரும்புபவர்களுக்கு, அணியும்-புனைந்துகொள்ளுதற்கு வேண்டிய, சுடர் இழையால்-ஒளியுடைய ஆபரணங்களாலும், அடுப்போர்க்கு-வந்து நிலை பெறுவோர்க்கு, அடுக்கும்-குடியிருத்தற்கு உரியதான, மனைகளால்-வீடுகளாலும், குறைபாடு-குறைபடுதலை உடையது, அன்று-கிடையாது, கொடுப்போர்க்கு - கொடுக்கும் தன்மையுடைய கொடையாளிகளுக்கு, இரப்போர் - யாசிப்போர், இலாத-இல்லாத, குறை-குறைபாடு, ஒன்று உளது-ஒன்றே உளதாகும். [எ—று.]

[கு-ரை.] உடுப்போர் உண்போர் தொடுப்போர் அணிவோர் அடுப்போர் கொடுப்போர் இவைகள் வினையாலணையும் பெயர்கள். இவைகளின் ஈற்றயலிலுள்ள ஆகாரம் ஒகாரமாயிற்று. "பெயர்வினையிடத்து ன ள ர ய ஈற்றயல் ஆ வோ வாகலும் செய்யுளில் உரித்தே" என்பது சூத்திரமாதலின். சுடரிழை, இரண்டன் உருபும் பயனும் உடன்தொக்க தொகை. கொடுப்போர்க்கு இரப்பார் இலாத குறையொன்று உடையது என்ற நிந்தையால் அவ்வூரில் உள்ளார் யாவரும் பெருஞ் செல்வந்தராய் வாழ்கின்றார் என்ற புகழ்ச்சி தோன்றலால் வஞ்சப்புகழ்ச்சியணி. "குறிப்பு வெளிப்படுக்கும் சத்துவம் பிறிதின் மறுத்துரையாடல் இலேசமாகும்" என்ற இலேச அணியின் பிரிவாகக் கூறப்படும் "புகழ்வதுபோலப் பழித்திறம் புனைதலும் பழிப்பதுபோலப் புகழ் புலப்படுத்தலும் அவையும் அன்னவென்று அறைகுநர் உளரே" என்ற விதிப்படி பழிப்பதுபோலப் புகழ்தல் என்பர் தண்டியலங்காரக்காரர். (16)

[அங்கரின் யானை, குதிரைகளின் சிறப்பு]

ஈச னளித்த வொருகோட்டி
யானைக்கி யாங்க ளிணையாயின்
வாச வனைத்தாங் கீரிருகோட்
டியானை யெம்மை மானுமெனும்
பாச வுரற்கால் யானையொடு
பாண்டி லிழுக்கும் பகடுயரிற்
றேசி னிரதப் பரிசிறந்த
வென்னும் பரிகள் தெருவகலா.

[இ—ள்.] ஈசன்-சிவபெருமானாலே, அளித்த-தரப்பட்ட, ஒருகோட்டு-ஒரு கொம்பையுடைய, யானைக்கு-யானையாகிய விநாயகப்பெருமானுக்கு, யாங்கள்-இரண்டு கொம்புகளையுடைய யாங்கள், இணையாயின்-ஒப்பாவேமானால், வாசவனை-இந்திரனை, தாங்கும்-சுமக்கின்ற, ஈர்இரு-நான்கு, கோட்டு

யானை-கொம்புகளையுடைய யானையாகிய ஐராவதம், எம்மை மானும்-எங்களை ஒக்கும், எனும்-என்று களிக்கின்ற, பாசம்-கயிற்றால் கட்டப்படுவதும், உரல்கால்-உரல்போலும் கால்களையுடையதும் (ஆகிய), யானையொடு-யானைகளோடு, பாண்டில்-(இரண்டு சக்கரங்களையுடைய) வண்டியை, இழுக்கும்-இழுக்கின்ற, பகடு-கடாக்கள், உயரின்-(தம்மின்) உயருமாயின், தேசின்-சூரியனது, இரதம்-(ஓர் சக்கரத்தையுடைய) தேரினை இழுத்துச் செல்லுகிற, பரி-குதிரைகள், சிறந்த-(ஒன்றனையும் இழுத்துச் செல்லாத எம்மைக்காட்டிலும்) சிறந்தனவாகும், என்னும்-என்று களிக்கின்ற, பரிகள்-குதிரைகளானவை, தெருவகலா-வீதிகளின் நீங்காவாம். [எ-று.]

[கு-ரை.] தேசு ஆகுபெயர். ஒருகோட்டு+யானை, இருகோட்டு+யானை என்பனவற்றுள் கோடு என்பன "நெடிலோடு யிர்த்தொடர்க் குற்றுகரங்களுட் டறவொற்றிரட்டும் வேற்றுமை மிகவே" என்னும் விதிப்படி கோட்டு என நின்று, "உயிர்வரினுக்குறள் மெய்விட்டோடும்" என்ற சூத்திரத்துள் 'யவ் வரின் இய்யாம்' என்றபடி கோட்டியானை கோட்டியானை என நின்றது. யானைக்கு+யாங்கள் என்பது யானைக்கியாங்கள் என்பதற்கும் விதியதுவே. பாண்டில் என்றமையின் இரண்டு சக்கரங்கள் எனவும் சூரியன் இரதம் என்றமையின் ஒரு சக்கரம் எனவும் வருவித்து உரைக்கப்பட்டன. விநாயகரை யாங்கள் ஒப்போமானால் ஐராவதம் எங்களை ஒக்கும் என்று யானைகள் சொல்வதின் கருத்து கொம்பு மிகுதியால் உயர்வு கூறலாகாது ஆதலின் ஐராவதங்களைக் காட்டிலும் யாங்களே சிறந்தனவென யானைகள் சொல்லுவனவாகவும், வேலை மிகுதிபற்றி உயர்வு கூற வேண்டுமானால் இரண்டு சக்கரங்களை இழுக்கும் கடாக்கள் ஒரு சக்கரத்தை இழுக்கும் சூரியன் தேர்க்குதிரைகளைவிட உயர்ந்தனவாகும் எனவே அவ்வாறு உயர்வு கூறலாகாதெனவே சூரியன் தேர்க்குதிரைகளை விட சும்மா இருக்கின்ற நாங்களே சிறந்தவர்கள் என குதிரைகள் கூறுவனவாகவும் அமைந்துளது. இச்செய்யுள், இக்கருத்துகளை உய்த்துணரவேண்டியிருத்தலின் உய்த்துணர்வைப்பணி, என்னும் அணியாகும். "ஆலயமெனக்கொண்டெம்மனத்தமர்ந்த அருட்சிவ ஞானதேசிகவெம், பாலைய மலர்க்கண் இரண்டுடையாய்க்குப் பார்வை மூன்றுளனெனப்படுவோன், மேலவனென்னில் அவற்கு நாலிரு கண் விண்ணவனுயர்ந்தவ னவற்குச், சாலவு மதிகனுவனுயிரங்கட்டவளமார் கவளவாரணனே" என்று இவர் பிறிதோர் நூலுட் கூறுமாற்றையும் அறிந்தின்புறுக. (17)

மறையுங் கலைகள் பற்பலவும்
முழங்கும் ஒலியும் மங்கலஞ்செய்
பறையுங் குழலும் யாழுமியம்
பொலியுங் கரியும் பரிமாவும்

நிறையுந் தெருவி லோடுமணித்
தேரின் ஒலியும் நிறைகடலின்
அறையுந் திரையிற் சென்றுவிசும்
பமரர் செவியி னடைந்திடுமால்.

[இ-ள்.] மறையும்-வேதங்களும், கலைகள் பற்பலவும்-அறுபத்துநான்குகலைகளும், முழங்குமொலியும்-முழங்குகின்ற ஓசையும், மங்கலம்செய்-நற்செயல்கள் புரிகின்ற, பறையும்-தோற்கருவிகளையும், குழலும்-துளைக்கருவிகளையும், யாழும்-நரம்புக் கருவிகளையும், இயம்பு-முழக்குகின்ற, ஒலியும்-ஓசையும், கரியும்-யானைகளும், பரிமாவும்-விரைந்து செல்லும் குதிரைகளும் (ஆகிய இவற்றால்) நிறையும்-நிறைந்திருக்கின்ற, தெருவில் ஓடும்-வீதியின் கண்ணே ஓடுகின்ற, மணித்தேரின்-மணிகளையுடைய தேர்களது, ஒலியும்-ஓசையும், நிறைகடலின்-நீரால் நிரைந்த கடலினது, அறையும்-(கரையை) மோதுகின்ற, திரையிற்சென்று-அலைகள்போல ஒன்றோடொன்று தொடர்ந்து சென்று, விசும்பு-வானத்திலுள்ள, அமரர்-தேவர்களது, செவியின்-காதுகளை, அடைந்திடும்-சென்று சேரும். [எ-று.]

[கு-ரை.] தேவர்களது செவிக்கும் இவ்வொலிகட்கும் சம்பந்தமில்லாதிருக்கச் சம்பந்தத்தைக் கற்பித்தலால் தொடர்புயர்வுநவிற்சியணி. திரையிற்சென்று என்பது ஒப்பணி. இவ்விரண்டணியும் சேர்ந்து வருதலால், சேர்வையணி; தண்டியலங்காரத்தில் சங்கீர்ணவணி என்பதும் இது. மணித்தேர் இரண்டன் உருபும் பயனும் தொக்கதொகை. செவியின் இன்சாரியை ஏழாம் வேற்றுமைத்தொகை. ஆல், அசை (18)

வேயை நகுமென் சுடர்த்தொடிய
தோண்மா துமையை விடைகொண்டு
பேயும் அகன்று வரற்கரிய
கைலை மலையைப் பிரிந்தெய்தித்
தூய மனமுங் கலங்கவருந்
தவர்வேள் குவவுத் தோள்வீங்க
மாயை பிறந்த வனவசைமா
நகரின் வளத்தை யார்சொல்வார்.

[இ-ள்.] வேயை-மூங்கிலை, நகும்-பழிக்கின்றன, எனும்-என்று சொல்லப்படுகிற, சுடர்த்தொடிய-ஒளியுடைய வளையல்களை அணிந்த, தோள்-தோளையுடைய, மாது உமையை-அழகிய உமாதேவியினிடத்து, விடைகொண்டு-விடைபெற்று, பேயும்-

பைசாசங்களும், அகன்று-நீக்கி, வரற்கு-வருதலுக்கு, அரிய-அருமையான, கைலைமலையை-கைலாச மலையினின்றும், பிரிந்து-நீங்கி, எய்தி-(இப்பூமியை) அடைந்து, அருந்தவர்-செய்தற்கரிய தவத்தினையுடையாரது, தூயமனமும்-பரிசுத்தமான மனமும், கலங்க-நிலைகுலையவும், வேள்-மன்மதனது, குவவு-திரட்சி பொருந்திய, தோள் வீங்க-தோள்கள் பூரிக்கவும், மாயை-மாயையானவள், பிறந்த-தோன்றிய, வனவசை மாநகரின்-வன வசை என்னும் சிறந்த நகரத்தினது, வளத்தை-வளப்பத்தினை, யார் சொல்வார்-யாரால் சொல்லக்கூடும். [எ-று.]

[கு-ரை.] உமையை உருபு மயக்கம். தொடிய குறிப்புவினை முற்றெச்சம். இடுகோட்டுள் இடவளம் தெரியாதியங்குகின்ற பேய்க்கும் இன்பம் செய்தலின் பேயும் அகன்று வரற்கரிய என்றார். யார் சொல்வார் என்றதின் கருத்து ஒருவரும் இல்லை என்பது. விடைகொண்டு பிரிந்து எய்தி பிறந்த நகர் என வினை முடிவு காண்க. மனம் கலங்க தோள் வீங்கப்பிறந்த என்று கூட்டுக. மென்தோள் தொடிய தோள் எனக் கூட்டுக. மலையை உருபு மயக்கம். (19)

[அங்கராசன் சிறப்பு]

இம்மா நகரிற் கரசாகி இருந்து வாழ்வோ
னம்மால் புணரும் செயன்மா தரையாகம் வைத்தல்
சும்மா புகழன் றெனவிந்தையைத் தோளில்வைத்தோன்
கைம்மாறு வேண்டா மழைபோன் மமகார னென்பான்.

[இ-ள்.] இம்மா-இவ்வாறு கூறப்பட்ட சிறந்த, நகரிற்கு-வனவசைமா நகரத்திற்கு,அரசாகி-அரசனாகி, இருந்து-வீற்றிருந்து, வாழ்வோன்-வாழ்ந்து வருபவன், அம்மால்-அங்காரணன், புணரும்-கூடும், செயல் மாதரை-செயலுக்குரிய பெண்களை, ஆகம் வைத்தல்-மார்பின் கண்ணே வைத்திருத்தல், சும்மா-வீணுக்கும், புகழ் அன்று என-புகழைத் தருவது அன்று என்று சொல்லும்படி, விந்தையை-வெற்றித்திருமகளை, தோளில் வைத்தோன்-தோளின்கண் வைத்திருப்பவன், கைம்மாறு-எதிர் நன்றியை, வேண்டா-விரும்பாத, மழைபோல்-மேகம் போல்கின்ற, மமகாரன் என்பான்-மமகாரன் என்று சொல்லப் படுகிற பெயரை யுடையவன். [எ-று.]

[கு-ரை.] புகழைத் தருவதைப் புகழ் என்றார். இதுபோல் அது புகழுக்குக் காரணமாகாமையால் சும்மா புகழ் அன்றென வென்றார். "கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரி மாட்டு என்னாற்றுங்கொல்லோவுலகு" ஆதலின் கைம்மாறு வேண்டா மழைபோன் மமகாரன் என்று கூறப்பட்டது. வேண்டா ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். (20)

திறைதா னளக்குந் திறல்வேந்தர்க் கரிய சீரான்
குறைதா னிரக்கு மவர்க்கோடிக் குறுக நிற்பான்
நிறைதா னவெற்பு மணிநாகமும் நின்று தாங்கும்
பொறைதா னெடுக்கு மிகுமாற்றல் பொருந்து தோளான்

[இ—ள்.] திறைதான்-(தனக்குக்) கப்பங்களை, அளக்கும்-செலுத்துகின்ற, திறல்-வேந்தர்க்கு-வெற்றியையுடைய அரசருக்கு, அரிய சீரான்-காணுதற்கு அரிய மேம்பாட்டையுடையவன், குறைதான்-(தங்கள்) குறையைத் தீர்க்கும்படி, இரக்குமவர்க்கு-இரப்பவர்களுக்கு, ஓடிக்குறுக நிற்பான்-விரைந்து போய்க் காணும்படி எளியனாகி நிற்பவன், நிறைதான வெற்பும்-நிறைந்த மதத்தையுடைய மலைபோலுள்ள எட்டு யானைகளும், மணி நாகமும்-மணியையுடைய ஒன்பது நாகங்களும், நின்று தாங்கும்-நின்று சுமக்கின்ற, பொறை-பூமிபாரத்தை, தான் எடுக்கும்-தான் ஒருவனுமே சுமக்கின்ற, மிகும் ஆற்றல் பொருந்து-மிகுந்த வலிமை பொருந்திய, தோளான்-தோளையுடையவன். [எ—று.]

[கு-ரை.] நிறைதான வெற்பு, அன்மொழித்தொகை. மணிநாகம் சாதியொருமை. எட்டு திக்குகளுக்கும் எட்டு நாகங்களும் மத்தியில் சேடனும் ஆக நாகங்கள் ஒன்பது என்று உரைக்கப்பட்டது. திறல் வேந்தர்க்கு அரிய சீரான் என்றமையின் இவ்வரசன் பல வல்லரசுகளுக்கும் வல்லவனாகிய பேரரசன் என்பது பெறப்பட்டது. (21)

இரப்பார் வரினோ ரடிஞால மெளிய தன்றிக்
கரப்பார் கரக்கும் பொருளன் றெனவீகை கற்றே
உரைப்பார் உரைக்கு முரையாவும் புகழில் வைத்தோன்
தரைப்பா லுவமை யிலையாகத் தருக்கி வாழ்வோன்.

[இ—ள்.] இரப்பார்-(இப்பூமியை) யாசிப்பவர், வரின்-வந்தால், ஞாலம்-இப்பூமியானது, ஓரடி (நாரணனுக்கு)-ஓரடியுள் அடங்கியது, எளியதன்றி-எளிமையானதல்லாமல், கரப்பார்-உலுத்தராலே, கரக்கும்-மறைத்து வைக்கப்படுகிற, பொருளும் அன்று-பொருளும் அன்று, என-என்று நினைக்கும்படி, ஈகை கற்றே-கொடுத்தலைக்கற்று, உரைப்பார்-சொல்லுவார், உரைக்கும்-சொல்லும், உரையெல்லாம்-சொற்களை எல்லாம், புகழில்-(தனது) புகழின்கண், வைத்தோன்-வைத்தவன், தரைப்பால்-மண்ணுலகில், உவமை இலையாக-உவமப்பொருள் வேறொன்று இல்லை என்று சொல்லும்படி, தருக்கி-செருக்குற்று, வாழ்வோன்-வாழ்பவனாவான். [எ—று]

[கு-ரை.] அம்மறைத்து வைக்கப்படுகிற பொருள் பொன் மணிமுதலி யன. பொருளும் என்னும் எச்சவும்மை தொக்குநின்றது. ஓரடிமண், அன்றியும் அரியதுமன்று என நினைப்பன். என்றபடி, அப்படிப்பட்ட ஈகை கற்றவன் ஆதலின் பிறரால் உரைக்கப்படும் உரை யாவும் புகழில் வைத்த வன் என்றார். "உரைப்பார் உரைப்பவையெல்லாம் இரப்பார்க்கொன்றீவார் மேல் நிற்கும் புகழ்" என்ற தமிழ் மறையை உட்கொண்டது மூன்றுவது அடி, மாவலி என்பவன் இந்திரன் அரசைக் கைப்பற்றி தேவ லோகத்தை ஆண்டபோது தேவர்கள் வேண்டுகோளின்படி திருமால் வாமனர் (குள்ளர்) வடிவெடுத்து மாவலிபால்சென்று மூன்றடி மண் பெற்று பிறகு உயர்ந்த வடிவெடுத்து (திருவிக்கிரமம்) பூமியை ஓரடியாகவும் தேவருலகத்தை ஓரடியாகவும் அளந்து மூன்றுவது அடிக்கு இடம் இன்மையின் மாவலியின் தலையில் வைத்து அவனைப் பாதாள லோகத்தில் வைத்தார் என்ற புராண வரலாற்றை உட்கொண்டு ஓரடிஞாலம் என்றார். ஞாலுதல் என்ற சொல்லுக்குத் தொங்குதல் என்று பொருளாதலின், தொங்குகின்ற தன்மை வாய்ந்த உலகத்தை ஞாலம் என்றார். தரைப்பால், என்பதில் பால் ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்தது. (22)

[இதுமுதல் இரண்டு பாட்டுகளில் அவன்மனைவி சிறப்பு கூறப்படுகிறது]

அன்னான் மனைவி வணர்வார் குழலைய வேற்கண்
மின்னார் மருங்குல் தளர்ந்தொங்கி மெலிய விம்மிப்
பொன்னார் சுணங்கு விரிபூண் முலைப்பூங் கொம்புன்னாள்
இன்னா ரமுத மொழிமோகினி யென்னும் பேராள்.

[இ-ள்.] அன்னான் - அப்படிப்பட்ட மமகாரனுடைய, மனைவி-வாழ்க்கைத் துணைவியானவள், வணர்-வணங்கிய, வார்-நீண்ட, குழல்-கூந்தலையும், ஐய-அழகிய, வேல்-வேல்போலும், கண்-கண்களையும், மின்-மின்னற்கொடியை, ஆர்-ஒத்த, மருங்குல் - இடையானது, தளர்ந்து - தளர்ச்சியடைந்து, ஒல்கி-அசைந்து, மெலிய-வாடும்படி, விம்மி-பருத்து, பொன்-பொன்னை, ஆர்-ஒத்த, சுணங்கு-தேமல், விரி-படரப்பெற்ற, பூண்-அணிகளைக்கொண்ட, முலை-முலைகளையும் உடைய, பூங் கொம்பு-மலர்க்கொம்பு, அன்னாள்-போல்பவள், இன்-இனிமையால், ஆர்-நிறைந்த, அமுதமொழி-அமிழ்தம்போலும் சொல்லையுடைய, மோஹினி என்னும் பேராள்-மோஹினி என்னும் பெயரையுடையவள். [எ-று.]

[கு-ரை.] 'வேற்கண்' அமுதமொழி, உவமைத்தொகைகள் ஆர் உவம உருபு. (23)

[கு-ரை.] அம்மறைத்து வைக்கப்படுகிற பொருள் பொன் மணிமுதலியன. பொருளும் என்னும் எச்சவும்மை தொக்குநின்றது. ஓர்டிமண், அன்றியும் அரியதுமன்று என நினைப்பன். என்றபடி, அப்படிப்பட்ட ஈகை கற்றவன் ஆதலின் பிறரால் உரைக்கப்படும் உரை யாவும் புகழில் வைத்தவன் என்றார். "உரைப்பார் உரைப்பவையெல்லாம் இரப்பார்க்கொன்றீவார் மேல் நிற்கும் புகழ்" என்ற தமிழ் மறையை உட்கொண்டது மூன்றுவது அடி, மாவலி என்பவன் இந்திரன் அரசைக் கைப்பற்றி தேவலோகத்தை ஆண்டபோது தேவர்கள் வேண்டுகோளின்படி திருமால் வாமனர் (குள்ளர்) வடிவெடுத்து மாவலிபால்சென்று மூன்றடி மண் பெற்று பிறகு உயர்ந்த வடிவெடுத்து (திருவிக்கிரமம்) பூமியை ஓரடியாகவும் தேவருலகத்தை ஓரடியாகவும் அளந்து மூன்றுவது அடிக்கு இடம் இன்மையின் மாவலியின் தலையில் வைத்து அவனைப் பாதாள லோகத்தில் வைத்தார் என்ற புராண வரலாற்றை உட்கொண்டு ஓரடிஞாலம் என்றார். ஞாலுதல் என்ற சொல்லுக்குத் தொங்குதல் என்று பொருளாதலின், தொங்குகின்ற தன்மை வாய்ந்த உலகத்தை ஞாலம் என்றார். தரைப்பால், என்பதில் பால் ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்தது. (22)

[இதுமுதல் இரண்டு பாட்டுகளில் அவன்மனைவி சிறப்பு கூறப்படுகிறது]

அன்னான் மனைவி வணர்வார் குழலைய வேற்கண்
மின்னார் மருங்குல் தளர்ந்தொங்கி மெலிய விம்மிப்
பொன்னார் சுணங்கு விரிபூண் முலைப்பூங் கொம்பன்னாள்
இன்னா ரமுத மொழிமோகினி யென்னும் பேராள்.

[இ-ள்.] அன்னான் - அப்படிப்பட்ட மமகாரனுடைய, மனைவி-வாழ்க்கைத் துணைவியானவள், வணர்-வணங்கிய, வார்-நீண்ட, குழல்-கூந்தலையும், ஐய-அழகிய, வேல்-வேல்போலும், கண்-கண்களையும், மின்-மின்னற்கொடியை, ஆர்-ஒத்த, மருங்குல் - இடையானது, தளர்ந்து - தளர்ச்சியடைந்து, ஒல்கி-அசைந்து, மெலிய-வாடும்படி, விம்மி-பருத்து, பொன்-பொன்னை, ஆர்-ஒத்த, சுணங்கு-தேமல், விரி-படரப்பெற்ற, பூண்-அணிகளைக்கொண்ட, முலை-முலைகளையும் உடைய, பூங் கொம்பு-மலர்க்கொம்பு, அன்னாள்-போல்பவள், இன்-இனிமையால், ஆர்-நிறைந்த, அமுதமொழி-அமிழ்தம்போலும் சொல்லையுடைய, மோஹினி என்னும் பேராள்-மோஹினி என்னும் பெயரையுடையவள். [எ-று.]

[கு-ரை.] 'வேற்கண்' அமுதமொழி, உவமைத்தொகைகள் ஆர் உவம உருபு. (23)

மோஹினி என்னும் மாதும்-மோஹினி என்று சொல்லப்படுகிற மாதும், அம்-அழகிய, மகவு இன்மையின்-பிள்ளை இல்லாமையால், ஆர் அஞர்-நிறைந்த துன்பத்தை, எய்தி-அடைந்து, மெய்-உடம்பு, மெலி-வாடுதற்குக் காரணமான, நோன்பு-விரதங்களை, விளைத்தனர்-செய்தார்கள். [எ-று.]

[கு-ரை.] அன்று ஏ அசைகள். விரதமாவது-உடல் வாடுதல் உண்டி சுருக்கல் முதலானவற்றிற்குரிய காரணங்களைச் செய்தல். "பெறுமவற்றுள் யாமறிவதில்லை அறிவறிந்த மக்கட் பேறல்ல பிற" என்பவாதலின் மகப்பேறு குறித்து நோன்பு நோற்றனர். "வினையுந் தியானமில்லாத நெஞ்சும் ஞானம் இல்லாத வினையும்போலும் மக்களிலா வாழ்க்கை" என்றதுங் காண்க. (25)

முன்னிய நோன்புசெய் மோஹினி மாதின்
தன்னுத ரத்துமை தண்ணரு ளாலே
மன்னியல் மாரன் வலப்புய மாடக்
கன்னிகை மாது கருப்ப மடைந்தாள்.

[இ-ள்.] முன்னிய - கருதப்பட்ட, நோன்பு - விரதத்தை, செய்-செய்த, மோஹினி மாதின்தன்-மோஹினியாகிய மாதினது, உதரத்து-வயிற்றினிலே, உமை-இறைவியினது, தண் அருளாலே-தண்ணிய அருளினலே, மன் இயல் மாரன்-அரச இயலையுடைய மன்மதனது, வலப்புயம்-வலது தோள், ஆட-துடிக்க, கன்னிகை மாயை-கன்னிகையாகிய மாயையானவள், கருப்பம் அடைந்தாள்-கருப்பத்தைச் சேர்ந்தாள். [எ—று.]

[கு-ரை.] ஆட என்னும் செயவென்னெச்சம் அடைந்தாள் என்னும் பிற கருத்தா வினைகொண்டு முடிந்தது. ஆடவருக்கு வலந்துடிப்பது பின் வரு நிகழ்ச்சிக்கு அறிகுறியாதலின் மாரனுக்கு வலப்புயமாடிற்று என்க (26)

[கருப்பகாலக் குறி]

முத்தணி கொங்கை முகங்கள் கறுத்தாள்
மெய்த்திரு மேனி விளர்த்து நரம்பு
பைத்தன மீது பரப்ப இருந்தாள்
பொய்த்துயில் கொண்டு புளிக்கும் உவந்தாள்.

[இ—ள்.] முத்து அணி-முத்து மாலையால் அலங்கரிக்கப்பட்ட, கொங்கை முகங்கள்-முலைகளின் நுனிகள், கறுத்தாள்-கரிய நிறத்தை அடையப்பெற்ருள், மெய்திரு மேனி-வடிவத்தையுடைய அழகிய நிறமுடைய உடம்பு, விளர்த்து-வெண்ணிற

ஒன்றான நம்பன் மருங்கா யிழையுய்த்த மாயை
குன்றாத வாற்றன் முனிவோர் உளங்குன்று மாறு
பொன்றாத பொற்பிங் கிவள்பூங் கருப்போந்து பெற்றாள்
என்றால் இவளுக் கிணையா இனியாரைச் சொல்வாம்.

[இ—ள்.] ஒன்றான-ஒரே பொருளான, நம்பன்-இறைவனது, மருங்கு-பக்கத்திலிருக்கின்ற, ஆயிழை-உமாதேவியால், உய்த்த-ஏவி விடப்பட்ட, மாயை-மாயையானவள், குன்றாத-குறையாத (தளராத), ஆற்றல்-வலிமையையுடைய, முனிவோர்-முக்குறும்புகளையும் வெறுத்துவர்களது, உளம்-மனம், குன்றுமாறு-தளரும்படியாக, பொன்றாத-கெடாத, பொற்பு-அழகை, இங்கு-இப்பூமியின்கண், இவள்-இந்த மோஹினியினது, பூங்கரு-பொலிவு பொருந்திய கருப்பத்திலே, போந்து-வந்து, பெற்றாள் என்றால்-மகவாகப் பெற்றாளென்று சொன்னால், இவளுக்கு-இந்த மோஹினிக்கு, இணையா-ஒப்பாக, இனி யாரைச் சொல்வாம்-வேறு யாரைச் சொல்ல முடியும், முடியாதென்றபடி. [எ-று.]

[கு-ரை] பொன், நிலம், மாதர் என்ற மூன்றின்மேல் சென்ற விருப்பத்தை வெறுத்தவராதலின் முனிவர் எனப்பட்டார். முனிவு-வெறுப்பு, "சேற்றுவிலை முனை இய செங்கட்காரான்" என்பதுங் காண்க. காம வெகுளி மயக்கமாகிய மூன்று என்றும் கொள்ளலாம். அவ்வளவு சிறந்த முனிவரையும் மயக்கும் பேரழகினை மாயையானவள் மோஹினியின் கருப்பத்தை யடைந்து பெற்றாள் என்றால் மோஹினியின் அழகை என்னவென்று சொல்வது என்றபடி. ஆயிழை, அன்மொழித்தொகை. ஒன்று ஆன ஒப்பற்றது ஆன, என்றும் பொருள் கொள்ளலாம். பல சமயத்தார் சொல்லும் முடிவான தன்மையை உடையவனும் இறைவனேயாதலின், ஒன்றான என்றார். "தொல்லையில் ஒன்றேயாகித் துறைதொறும் பரந்த சூழ்ச்சிப் பல்வகைச் சமயம் சொல்லும் பொருளும்போற் பரந்தவன்றே" என்றதுங் காண்க. (24)

[அவ்விருவரும் மகவுவேண்டி நோற்றமை]

இம்மம காரனும் மோஹினி என்னும்
மைம்மலி மென்குழல் வாள்விழி மாதும்
அம்மக வின்மையின் ஆரஞர் எய்தி
மெய்ம்மலி நோன்பு விளைத்தனர் அன்றே.

[இ—ள்.] இம்மமகாரனும்-இத்தன்மை வாய்ந்த மமகார அரசனும், மை-கருமை, மலி-நிறைந்த, மென்குழல்-மெல்லிய கூந்தலையும், வாள்விழி-வாள்போலும் கண்களையுமுடைய,

[பிறந்துழி விழா வெடுத்தமை]

சங்கொடு தண்ணுமை சச்சரி தாளம்
வங்கியம் வெந்துடி வார்முர சங்கள்
மங்கல மங்கை மகப்பெறு நாளில்
அங்கசன் வெம்முர சென்ன வதிர்ந்த.

[இ–ள்.] சங்கு-சங்கமும், தண்ணுமை-மத்தளமும், சச்சரி-பிரமதாளமும், வங்கியம்-ஊதுகொம்பும், வெம்-விருப்பத்தைத் தரும், துடி-உடுக்கையும், வார்-வாரினால் இழுத்து இறுக்கப் பட்ட, முரசங்கள்-முரசங்களும், மங்கலம்-நன்மை பொருந்திய, மங்கை-மோஹினியானவள், மகப்பெறு நாளில்-பிள்ளை பெற்ற நாளிலே, அங்கசன்-மன்மதனது, வெம்முரசு என்ன-வெவ்விய முரசமாகிய கடல் போல, அதிர்ந்த-ஒலித்தன. [எ–று]

[கு-ரை.] மோஹினி மகவீன்ற காலத்துப் பல இயங்களும் கடலைப் போல ஒலித்தன என்பது. கடலை அதனது இயற்பெயரால் கூறாது பிறி தொரு வகையாற் பெறவைத்தமையின் பிறிதினவிற்சியணி. இது ஒப்ப ணிக்கு அங்கமாக வந்தது. சங்கொடு என்பதிலுள்ள ஒடு இசை நிறைத்தற் பொருட்டு வந்தது. சங்கு முதலியவற்றின் செவ்வெண்ணின் முற்றும்மை யும் தொகைச்சொல்லும் தொக்கு நின்றது. மன்மதனுக்கு கடல் முரசம் என்பது கடல் முரசம் ஆர்ப்ப என்பதனாலும் அறியப்படும். (29)

தூண்டொளி போன்மகள் தோன்ற உவப்புற்
றாண்டகை மன்னவன் அந்தணர் கொள்ளப்
பூண்டுகின் மாமணி பொன்னிலம் மற்றும்
வேண்டின யாவும் வெறுப்ப அளித்தான்.

[இ–ள்.] ஆண்தகை மன்னவன் - ஆண் தன்மையை யுடைய மமகார அரசன் என்பவன், தூண்டு ஒளிபோல்-தூண்டப்பட்ட விளக்குப்போல, மகள் தோன்ற-புத்திரி பிறக்க, உவப்புற்று-மகிழ்ச்சியடைந்து, அந்தணர் கொள்ள-அந்தணர் பெற்றுக்கொள்ள, பூண்-ஆபரணமும், துகில்-ஆடையும், மாமணி-பெரிய அரதனங்களும், பொன்-தங்கமும், நிலம்-பூமி யும், மற்றும்-பிறவும், (ஆகிய இவற்றுள்) வேண்டின-(அவைகளில்) விரும்பப்பட்ட, யாவும்-எல்லாம், வெறுப்ப-வெறுக்கும்படி, அளித்தான்-கொடுத்தான். [எ–று.]

[கு-ரை.] தோன்ற என்னும் செயவெனெச்சம் காரணப்பொருளில் வந்து உவப்புற்று என்னும் பிறகருத்தாவினைகொண்டு முடிந்தது. (30)

[மாயை தோன்றினபோது மன்மதன் செயல்]

இங்கொரு மாயை யென்னும்
எழின்முளை தோன்ற லோடும்
பொங்குறும் உவகை நெஞ்சம்
பொறுக்கல னாகி எய்யும்
வெங்கணை மழையும தூவு
மென்மலர் மழையும ஒன்ரு
யெங்கணும் மதன வேள்நின்
றிடையறச் சொரிந்தான் அம்மா.

[இ—ள்.] இங்கு-இவ்விடத்தில், ஒரு மாயை என்னும்-ஒரு மாயையென்று சொல்லப்படுகிற, எழின்முளை-அழகிய முளையானது, தோன்றலோடும்-தோன்றிய மாத்திரத்தே, பொங்குறும்-மிகுகின்ற, உவகை-மகிழ்ச்சியை, நெஞ்சம்-மனத்திடத்தே, பொறுக்கலனாகி-பொறுக்கமாட்டாதவனாகி, எய்யும் (தன்னால்)-செலுத்தப்படுகிற, வெங்கணை மழையும்-வெவ்விய அம்புகளின் மாரியும், தூவும்-இறைக்கப்படுகின்ற, மென் மலர் மழையும்-மெல்லிய மலர்களின் மாரியும், ஒன்று-ஒன்றாக, மதனவேள்-மதனனாவன், எங்கணும்நின்று-எவ்விடத்துந் தானொருவனே நின்று, இடையற-ஒழிவில்லாமல், சொரிந்தான்-(மலர்களைச்) சொரிந்தான், அம்மா-(என்னே இருந்த) வியப்பு. [எ—று.]

[கு-ரை.] எழின்முளை தோன்றலோடும் எனவே ஒப்பு உயர்வு இல்லாத அழகே ஒரு பெண் வடிவங்கொண்டது என்றதாயிற்று. ஒருவனே ஒரே காலத்தில் எங்கும் நிற்றலும், துன்பம் செய்வதாகிய மலர் மழையும் ஒன்றேயாதலும் பெருவியப்பாதலின் அம்மா என்றார். செவ்வேளின் விலக்குதற்கு மதனவேள் என்றார். மதனவேள் இருபெயரொட்டு. (31)

[மாயை பிறந்தமையின் தவத்தினர் அடைந்த செயல்]

கண்ணகன் நிலத்த கங்கைக்
கரையிலும் முழை யிடத்தும்
புண்ணிய வனத்தும் எய்திப்
புற்றுமாய் மரமாய் உற்றும்
தண்ணிய புனலில் தீயில்
சார்ந்தும்ஊண் துயில்து றந்தும்
பண்ணிய தவத்தோர் நெஞ்சம்
பதைத்தன மயலின் மூழ்கி.

[இ—ள்.] (அப்படிச் சொரிந்த காலத்து) கண்-இடம, அகல்-விரிந்த, நிலத்த-நிலத்திடத்துள்ளனவாகிய, கங்கைக்கரையிலும்-கங்கையாற்றங் கரையினிலும், முழையிடத்தும்-மலைக் குகையிடத்தும், புண்ணியவனத்தும்-புண்ணியம் செய்தற்குரிய காடுகளிடத்தும், எய்தி-அடைந்து, புற்றுமாய்-மேலே புற்று மூடவும், மரமாய்-மேலே மரம் முளைக்கவும், உற்றும்-யோகத்திலிருந்தும், தண்ணியபுனலில்-(பனிக்காலத்திலே) குளிர்ந்த நீரிலும், தீயில்-(வேனிற்காலத்திலே) பஞ்சாக்கினி நடுவிலும், சார்ந்தும்-சேர்ந்தும், ஊண்-உணவு, துயில்-தூக்கம் முதலியவற்றைத், துறந்து-ஒழித்து, பண்ணிய-செய்யப்பட்ட, தவத்தோர்-தவத்தையுடைய முனிவரது, நெஞ்சும்-மனங்களும், மயலில்-மயக்கத்தில், மூழ்கி-அழுந்தி, பதைத்தன-பதைப்படைந்தன. [எ-று.]

[கு-ரை.] ஆயிரண்டும் வினையெச்சத்திரிபு. புண்ணியவனம் என்பது நைமிசம் முதலியன. பஞ்சாக்கினியேனில் நண்பகலில் நாற்புறமும் தீமூட்டி நடுவில் இருந்து காய் கதிரவனைநோக்கி இருத்தல். உற்ற நோய் நோன்றலும் தவத்திற்கு உறுப்பாதலின் வேனில் வெப்பத்தையும் பனிக்காலக் குளிரையும் ஆற்றியிருந்தனர். புற்று மூடிய விடத்தும் மரம் முளைத்த விடத்தும் சலிப்படையாத நெஞ்சம் மன்மதன் மலர்க்கணையால் சலிப்படைந்த என்று மன்மதன் வலிமை கூறியவாறு. மன்மதன் வலிமையைப் பாசவதைப் பரணி முதலியவற்றில் விரிவாகக் காண்க. (32)

[அவர் அதற்குக் காரணம் ஆராய்ந்தமை]

ஐம்பெரும் பூத மெல்லா
  மடுக்கழிந் தொழியும் போதும்
கம்பமில் நமது நெஞ்சம்
  கலங்கிய தென்னை கொல்லோ
வம்புறு செயலிஃ தீங்கு
  வந்தவா றெவ்வா றென்னச்
செம்பொரு ளுணர்ந்த சீர்சால்
  செய்தவ ரிருந்த காலை.

[இ—ள்.] ஐம்பெரும்பூதம்-ஐந்து பெரிய பூதங்களாகிய நிலம் நீர் தீ காற்று வானமும், எல்லாம்-அவற்றைப் பற்றி நிற்கின்ற இயங்கியல் நிலையியற்பொருள்களும், அடுக்கு அழிந்து-நிற்கும் நிலைகுலைந்து, ஒழியும்போதும்-அழிய வருகிற முடிவுக்

காலத்திலும், கம்பம் இல்-அசைவு இல்லாத, நமது நெஞ்சம்-நம்முடைய நெஞ்சு, கலங்கியது-கலங்கியதற்குக் காரணம், என்னை-யாதோ, வம்புறு-புதிய இவ்வதிசயமாகிய, செயல் இஃது-இச்செய்கையானது, ஈங்கு வந்தவாறு-இங்கே வந்தவழி, எவ்வாறு என்று-எவ்வழி என்று, செம்பொருள் உணர்ந்த-தத்துவப் பொருளை அறிந்த, சீர்சால்-புகழ் நிறைந்த, செய்தவர்-செய்கின்ற தவத்தையுடைய முனிவர்கள், இருந்தகாலை-இருந்த சமயத்து. [எ-று.]

[கு-ரை.] ஓ அசை. கொல் ஐயப்பொருளில் வந்தது. காலை ஏழாம் வேற்றுமை காலம் இடமாக வந்தது. செய்தவர் வினைத்தொகை. ஈங்கு சுட்டு நீண்டது; செய்யுள் ஆதலின். (33)

[அப்போது துர்வாசர் வந்தமை]

தளர்ந்துழி யுதவும் கல்வி
 தானெனத் துருவா சப்பேர்
கொளுந்தனி முனிவர் கோமான்
 குறுகலும் முனிவர் எல்லாம்
உளங் களிவர நின்றேத்தி
 உயர் தவி சிடை இருத்தி
வளங்கெழு மலர்கள் தூவி
 வந்தனை செய்து சொல்வார்.

[இ-ள்.] தளர்ந்துழி-சோர்வுற்ற விடத்து, உதவுங் கல்வி தானென-உதவுகின்ற வித்தைபோல, துருவாசப்பேர் கொளும்-துருவாசனென்கிறபெயரைக்கொண்ட, தனி-ஒப்பற்ற, முனிவர் கோமான்-முனிவர்களில் சிறந்தவன், குறுகலும்-(தம்மிடத்துச்) சார்தலும், முனிவர் எல்லாம்-முனிவர்கள் எல்லோரும், உள்ளம்-(அவரது) மனம், களிவர-மகிழ்ச்சி வரும்படி, நின்று ஏத்தி-எழுந்து நின்று துதிசெய்து, உயர்தவிசிடை இருத்தி-உயர்வாகிய பீடத்தில் இருக்கச்செய்து, வளங்கெழு மலர்கள் தூவி-சிறப்புப்பொருந்திய மலர்களைச் சொரிந்து, வந்தனை செய்து-வழிபாடு செய்து, சொல்வார்-(கீழ்க்கணடவற்றைச்) சொல்வாரானார். [எ-று.]

[கு-ரை.] முனிவர் ஏத்தி இருத்தி தூவி செய்து சொல்வார். தளர்ந்துழி-உழி ஏழாம்வேற்றுமை இடப்பொருள் சோர்வுற்றவிடத்து உதவலாவது ஆபத்துவேளையிலே வந்து அதனை நீக்குதற்கான உபாயத்தைச்சொல்லுதலாகும். (34)

[முனிவர்கள் வினா]

என்றுமெம் முள்ள மெல்லாம்
எழுதிய விளக்குப் போல
நின்றிடும் இன்றென் கொல்லோ
நிலைதடு மாறு நின்ற
தென்றல் முன்னிருந்த செய்ய
சிறுசுடர் போல வைய
நன்றிதை யுணருமாறு நவின்
றருள் செய்தி என்றார்.

[இ—ள்.] ஐய-ஐயனே, என்றும்-எக்காலத்தும், எம் உள்ளம் எல்லாம்-எம்முடைய மனங்களெல்லாம், எழுதிய விளக்குப்போல-ஓவிய விளக்குப்போல, நின்றிடும்-அசையாதிருக்கும், இன்று என் கொல்-இன்றைக்கு என்ன காரணத்தினாலோ, தென்றல் முன் இருந்த-சிறு காற்றாகிய தென்றற் காற்றுக்குமுன் இருந்த, செய்ய சிறு சுடர்போல-செவ்வையாகிய சிறு விளக்குப் போல, நிலைதடுமாறுநின்ற - அசைகின்றன, நன்று-நன்றாக, இதை உணருமாறு-இதனை நாங்கள் அறியும்படி, நவின்று-சொல்லி, அருள்செய்தி என்றார்-அருள் செய்யவேண்டுமென்றனர். [எ—று.]

[கு-ரை.] கொல்-ஐயம் ஓ அசை. மெல்லிய நடையதாய் அவிக்கமாட்டாமைபற்றி தென்றல் சொல்லப்பட்டது.

கம்பம் இல்மனம் அசைதலுக்குத் தென்றல் உவமை கூறப்படுதலின் உவமையணி. எழுதிய விளக்கு அசையா மனம்; அது நிலை தடுமாறுதல்-அசைதல். (35)

[திருவாசர் விடை]

சங்கரி ஒரு சூளாற்றன்
தமோகுண வடிவ மாயை
மங்கையை விடுப்ப வன்னாள்
வனவசை நகரிற் பிள்ளைத்
திங்களின் உதித்தா ளின்று
செய்தவக் கிழமை பூண்டீர்
உங்கள் நெஞ்சதனா லாற்றல்
உடைந்ததென் றவனு ரைத்தான்,

[இ—ள்.] செய்தவக்கிழமை பூண்டீர்-செய்யப்படுகிற தவவுரிமையை மேற்கொண்டவரே, சங்கரி-பார்வதியானவள், ஒரு சூளால்-(கடவுளிடத்துச் செய்யப்பட்ட) ஒரு வஞ்சினத்தினால்,

தன்தமோகுணவடிவ-தனது தமோகுண வடிவமாகிய, மாயை மங்கையை-மாயையென்னும் பெயருடைய மங்கையை, விடுப்ப-அனுப்ப, அன்னுள்-அவள், வனவசை நகரில்-வனவசை நகரத்தின்கண், இன்று-இன்றைக்கு, பிள்ளைத்திங்களின்-இளஞ் சந்திரன்போல், உதித்தாள்-பிறந்தாள், உங்கள் நெஞ்சு-உங்களது மனம், அதனுல்-அக்காரணத்தால், ஆற்றல் உடைந்தது என்று-வலிமை அழிந்தது என்று, அவன்-அம்முனிவன், உரைத்தான்-(அம்முனிவர்களுக்குச்) சொன்னுன். [எ—று.]

[கு-ரை] மாயை மங்கை, பிள்ளைத்திங்கள்-பண்புத்தொகை. திங்களின் ஐந்தாம் வேற்றுமை; ஒப்புப்பொருள். விடுப்ப என்னும் வினையெச்சம் உதித்தாள் என்னும் பிறவினை கொண்டு முடிந்தது. (36)

[முனிவர் அவ்விடையை ஏற்றுக்கொண்டமை]

அருந்தவ முனிநீ கூறிற்
  றுண்மையே யன்றி யெங்கள்
பெருந்தவ முயலு நெஞ்சம்
  பிறழ் தாற்கேது வில்லை
இருந்துளம் வருந்தி ஆய்ந்த
  எம்மிடை ஐயம் எல்லாம்
பரிந்தன அருளால் நீயெம்
  பால்வரு கையினு லென்று.

[இ—ள்.] அருந்தவ முனி-செய்தற்கரிய தவத்தையுடைய முனியே, நீ கூறிற்று-உம்மாலே சொல்லப்பட்டது, உண்மையே-வாய்மையேயாகும், அன்றி-அல்லாமல், பெருந்தவமுயலும்-பெரிய தவத்தை முயலுகின்ற, எங்கள் நெஞ்சம்-எம்முடைய மனங்கள், பிறழ்தரற்கு-கலங்குதற்கு, ஏது இல்லை-காரணம் இல்லை, இருந்து-(இங்கு) வீற்றிருந்து, உளம் வருந்தி-நெஞ்சம் வருத்தமுற்று, ஆய்ந்த-ஆராய்ந்த, எம்மிடை ஐயமெல்லாம்-எம்மிடத்திலுள்ள சந்தேகமெல்லாம், அருளால் நீ-அருளினுலே நீ, எம்பால் வருகையினுல்-எம்மிடத்து எழுந்தருளலால், பரிந்தன-களையப்பட்டன, என்று-என்று சொல்லி. [எ—று.]

[கு-ரை.] கூறிற்று-வினைமுற்று. செயப்பாட்டு வினைப்பொருளில் வந்தது இப்பாட்டிலுள்ள என்று என்னெச்சம் அடுத்த செய்யுளில் உள்ள வழுத்தி என்பதனோடு முடியும். பால் ஏழாம் வேற்றுமை இடப்பொருளில் வந்தது. (37)

[முனிவர் அதனை விரித்துரை என்றமை]

முனிவரர் துருவா சப்பேர்
முனிவர்கோன் தனைவ ழுத்திப்
பனிமலை வல்லி ஏவப்
பட்டெழில் மாயை யென்னும்
வனிதை இவ்வுலகில் வந்த
வாறுநீ விரித்தி யாங்கள்
இனிதுணர் வுறுமா றோது
கென்றலு மவனு ரைப்பான்.

[இ-ள்.] முனிவரர்-அங்குள்ள தவத்தினர், துருவாசப் பேர்-துருவாசன் என்னும் பேரையுடைய, முனிவர்கோன்தனை-முனிவரிற் சிறந்தோனை, வழுத்தி-துதித்து, பனிமலைவல்லி-இமயமலைபெற்ற கொடிபோல்பவளான உமாதேவியினாலே, ஏவப்பட்டு-செலுத்தப்பட்டு, எழில் அழகையுடைய, மாயை யென்னும்-மாயையென்று சொல்லப்படுகிற, வனிதை-அழகிய மங்கை, இவ்வுலகில்-இந்நில உலகத்தின்கண், வந்தவாறு-வருதற்கு உண்டாகிய காரணத்தை, யாங்கள்-நாங்கள், இனிது-இனிதாக, உணருமாறு-அறியும்படிக்கு, நீவிரித்து-நீவிரிவாக, ஓதுக-சொல்லுக, என்றலும்-என்று சொன்னமாத்திரத்தில், அவன்-துருவாச முனிவன், உரைப்பான்-சொல்லுவான். [எ-று]

[கு-ரை.] விரித்து+யாங்கள்-விரித்தியாங்கள் என்றாயிற்று "உயர் வரின்......................யவ்வரின் இய்யாம" என்ற விதிப்படி. (38)

[துருவாசர் விரித்துரைத்தல்]

கயிலையோ லக்கத் துற்ற கண்ணுதல் அல்ல மன்றன்
இயல்பினை யறிதல் தேற்றாய் என்றுமை யுடனு ரைப்ப
மயிலிய லறிவல் என்று மாயையைவிளக்கைக் காண்பான்
பயிவிரு ளினைவி டுத்த பரிசென விடுத்தாளன்றே.

[இ-ள்.] கயிலை-கயிலாச கிரியில், ஓலக்கத்து உற்ற-திருக்கூட்டத்திலிருந்த, கண்ணுதல்-நெற்றிக்கண்ணுடைய சிவபெருமான், அல்லமன்றன்-அல்லமதேவனது, இயல்பினை-தன்மையை, அறிதல்-அறிதலைத், தேற்றாய்-தெளியாய், என்று-என்று, உமையுடன் உரைப்ப-உமாதேவியுடன் சொல்லினாக, மயில் இயல்- மயில்போலும் சாயலையுடைய உமாதேவியானவள், அறிவல் என்று-அறியமாட்டுவேன் என்று,

விளக்கை-விளக்கினைக், காண்பான்-கண்டு வருதற்பொருட்டு, பயில்-(விளக்கில்லாத இடத்தே) தங்கியிருக்கின்ற, இருளினை-இருட்டினை, விடுத்த-அனுப்புவித்த, பரிசு என-தன்மையைப் போல, மாயையை விடுத்தாள்-மாயையை விடுத்தாள். [எ-று.]

[கு-ரை.] கண்ணுதல், மயிலியல்-அன்மொழித்தொகைகள். தேற்றாய் தன் வினைக்கும் பிறவினைக்கும் பொது; ஈண்டு தன்வினைக்கண் வந்தது. உரைப்ப என்னும் செயவெனெச்சம் விடுத்தாள் என்னும் பிறகருத்தாவினை கொண்டு முடிந்தது "முதலில் நான்கும் ஈற்றில் மூன்றும் வினைமுதல் கொள்ளும் பிறவும் ஏற்கும்" என்னும் நூற்பாவின்படி. அறிவல் அறி முதனிலை அல் தன்மை ஒருமை விகுதி. காண்பான் பான் வினையெச்ச விகுதி. காண்பான் விடுத்தான் என்னும் பிற கருத்தாவினைகொண்டு முடிந்தது. விளக்கைக் காண்பதற்கு இருளை ஏவினாற்போல அல்லமனை அறிதற்கு மாயையை ஏவினாள், என்றது உவமையணி. அன்று ஏ அசைகள் (அல்லது) அன்றே அப்போதே அனுப்பித்தாள் எனலும் ஆம். (39)

[இடையூறு நீக்குமாறு கூறினமை]

காரண மிதுவே யெங்கோன்
 கைலையை விடுத்து மாயை
தாரணி தனில்வ ரற்குத்
 தக்கவம் மாயை யென்னும்
மாரண விடங்க லந்த
 மயக்கமல் லமனென் றிட்ட
பேரணி கலுழன் றன்னை
 நினைத்திடிற் பெயரு மன்றே.

[இ-ள்.] மாயை-மாயையானவள், எங்கோன்-எமது தலை வணங்கிய கடவுளது, கைலையை விடுத்து-கைலாயத்தினின்றும் நீங்கி, தாரணிதனில்-பூமியில், வரற்கு-வருதலுக்கு, காரணம்-காரணம், இதுவே-இதுவேயாகும், தக்க-(அவ்வாறு வருந்து தற்குத்) தகுந்த, அம்மாயை என்னும்-அந்த மாயை என்று சொல்லப்படுகிற, மாரணம்-மரணத்தைச் செய்கின்ற, விடம்-நஞ்சானது, கலந்த-கலத்தலாகிய, மயக்கம்-மயக்கமானது, அல்லமன் என்றிட்ட-அல்லமன் என்று சொல்லப்பட்ட, பேரணி-பெயரை யணிந்துள்ள, கலுழன் தன்னை-கருடனை, நினைந்திடில்-தியானம் செய்யில், பெயரும்-நீங்கிப்போகும் [எ-று.]

[கு-ரை.] அன்று ஏ அசைகள் (அல்லது) அதுபோதே நீங்கிப்போகும் என்று கோடலும் பொருந்தும். இப்பொருளில் ஏகாரம் தேற்றம். கருட மந்திரம் கூறினவுடன் விஷரோகம் நீங்கும் என்பது வழக்காதலின்

மாயையை நஞ்சாகவும் அல்லமனைக் கருடனாகவும் உருவகம் செய்தார். உருவக அணி. "ஆமாகோனவ்வனையவும் பெறுமே" என்ற விதிப்படி எங்கோன் என்பதில் கோ னகரச்சாரியைபெற்று கோன் என்றாகியது. (40)

[இதுவும் அது]

பிணிதப வேண்டில் வாழ்நாள்
பெரிதுற வேண்டில் செல்வம்
அணிதர வேண்டில் கல்வி
யறிதர வேண்டில் வானம்
பணிதர வேண்டில் முத்திப்
பயன்பெற வேண்டில் என்றும்
இணையறு மல்லமப் பேர்
எந்தையை நினைப்ப ரென்று

[இ–ள்.] பிணி-நோய், தப-கெட, வேண்டில்-விரும்பினாலும், வாழ்நாள்-ஆயுள், பெரிது உற-மிகுதியாக அடைய,வேண்டில்-விரும்பினாலும், செல்வம் அணிதர வேண்டில்-செல்வத்தை அழகுறப்பெற விரும்பினாலும், கல்வி-கல்வியை, அறிதர-கற்க, வேண்டில்-விரும்பினாலும், வானம்-விண்ணுலகத்தார், பணிதர-வணங்க, வேண்டில்-விரும்பினாலும், முத்தி-இறைவனோடு கலத்தலாகிய வீடுபேறாகிய,பயன்-சிறந்த பயனை,பெற-அடைய, வேண்டின்-விரும்பினாலும், என்றும்-எப்போதும், இணையறும்-ஒப்புமை இல்லாதிருக்கின்ற, அல்லமப்பேர்-அல்லமனென்னும் பெயரையுடைய, எந்தையை-எம்முடைய சுவாமியை, நினைப்பர்-மனதினால் பல்கால் எண்ணுவர், என்று-என்று. [எ–று.]

[கு-ரை.] வானம், இடவாகு பெயர். இணையறு அல்லமன், தனக்குவமை இல்லாதான் என்றபடி. அல்லமனை நினைத்தல், இடைவிடாது மனதின்கண் தங்கி இருக்கும்படி எண்ணுதல். "ஈசனை இருத்துறும் இதயம் என்றார்" பிறிதோரிடத்தும் உலகுக்கெல்லாம் அம்மையப்பனாக விளங்குபவனாதலின் அல்லமனை எந்தை என்றார். (41)

புகன்றவ ருளத்திற் றுன்பம்
போக்குபு துருவா சன்றான்
அகன்று தன்னிடத் தடைந்தான்
அன்றுதொட் டருந்த வத்தோர்
மகிழ்ந்தரு ளல்ல மன்றன்
மலரடி மனத்திற் றாங்கி
யுகந்தவன் புகழாய் வந்த
வாறெலாம் உரைக்க லுற்றார்.

[இ-ள்.] புகன்று-சொல்லி, அவர் உள்ளத்தில்-அம்முனிவர்களது மனதில் உள்ள, துன்பம்-துக்கத்தை, போக்குபு-நீக்கி, துருவாசன்றான்-துருவாச முனிவர், அகன்று-அவ்விடத்தினின்றும் நீங்கி, தன்னிடத்து-தான் இருக்கும் இடத்தை, அடைந்தான்-சேர்ந்தான், அன்றுதொட்டு-அந்நாள்முதல், அருந்தவத்தோர்-செய்தற்கரிய தவத்தைச்செய்யும் முனிவர், மகிழ்ந்து-இன்புற்று, அருள் அல்லமன்தன்-அருள் வடிவமான அல்லமதேவனது, மலரடி-தாமரை மலர்போலும் திருவடியை, மனத்தில்-உள்ளத்தில், தாங்கி-சேர்த்து, உகந்து-விரும்பி, அவன் புகழாய்-அல்லம தேவன் புகழாய், வந்த ஆறுஎலாம்-வந்த தன்மையெல்லாம், உரைக்கலுற்றார்-சொல்லலுற்றார். [எ-று.]

[கு-ரை.] போக்குபு-செய்பு என்னும் வாய்பாட்டுவினையெச்சம் அகன்று என்னும் வினையெச்சம் கொண்டு முடிந்தது. (42)

நெஞ்செனு மகலி லன்பா நெய்நிறைத்துள்ள மென்னும்
பஞ்சுறு திரியா னுச்சி பற்றிட வல்ல மப்பேர்
அஞ்சுடர் இலக வேற்றி அருந்தவர் மாயை யென்னும்
துஞ்சிருள் அகன்றி ருந்தார் தொல்லைமா தவங்கள்
[செய்து.

[இ-ள்.] நெஞ்செனும்-மனம் என்கிற, அகலில்-தகளியின்கண், அன்பாம்நெய்-பக்தியாகிய நெய்யை, நிறைத்து-நிரப்பி, உள்ளம் என்னும்-கருத்து என்கிற, பஞ்சுறு-பஞ்சினாலியன்ற, திரியின் உச்சி-வத்தியினது முனையில், பற்றிட-பற்றி எரிய, அல்லமப்பேர்-அல்லமன் எனப்படுகிற பெயரையுடைய, அஞ்சுடர்-அழகிய விளக்கை, இலக ஏற்றி-விளங்கும்படி ஏற்றி, மாயையென்னும்-மாயையென்று சொல்லப்படுகிற, துஞ்சு இருள்-அழிவிற்குக் காரணமான மலமாகிய இருள், அகன்று-நீங்கப்பெற்று, தொல்லை-பழமையான, மா தவங்கள்-பெரிய தவங்களைச், செய்து இருந்தார்-செய்து இருந்தார்கள். [எ-று.]

[கு-ரை.] நெஞ்சு-அகல், அன்பு-நெய், உள்ளம்-திரி, அல்லமன் விளக்கு, மாயை-இருள் என உருவகம் செய்தமையின் உருவக அணி. முன்னும் மாயையை "விளக்கைக் காண்பான் பயில் இருளினை விடுத்த" என்று கூறியதும் காண்க. நிறைத்து பற்றிட ஏற்றி அகன்று இருந்தார் என வினை முடிவு காண்க. (43)

மந்தர கிரிப்பேர் பெற்ற மத்தெறி கடல்போ லையர்
சிந்தனை கலங்கி மெல்லத் தெளிந்தமை தெரிந்துரைத்தாம்
வந்துமண் பிறந்த வன்றே மாதவர் மனங்க லக்கும்
வெந்திறல் மமகா ரன்றன் மகள்திறம் விளம்ப லுற்றாம்.

[இ-ள்.] மந்தரகிரி-மந்தரமலை என்னும், பேர்பெற்ற-பேரையுடைய, மத்து-மத்தினால், எறி-கலக்கப்பட்ட, கடல் போல-கடலைப்போல, ஐயர்-முனிவர்களது, சிந்தனை-மனமானது, கலங்கி-கலக்கமுற்று, மெல்ல-மெதுவாக (பையப்பைய), தெளிந்தமை-தெளிவடைந்த தன்மையை, தெரிந்து உரைத்தாம்-தெரிந்து சொன்னோம், மண் வந்து-மண்ணில் வந்து, பிறந்த அன்றே-தோன்றிய அப்பொழுதே, மாதவர்-பெரிய தவத்தினரது, மனம்-மனத்தினை, கலக்கும்-கலக்கிய (மகள்), வெந்திறல்-வெவ்விய தன்மையையுடைய, மமகாரன்றன்-மமகார அரசனது, மகள்-புதல்வியானவள், திறம்-செய்தியை, விளம்பல் உற்றாம்-சொல்ல முற்படுகின்றனன். [எ-று.]

[கு-ரை.] மந்தர மலையாகிய மத்தால் கலக்கப்பட்ட கடல்போல ஐயர் சிந்தனை கலக்கமுற்றது என்பது உவமையணி. (தொழில் பற்றியது)ஐயர்-ஐ தலைமை என்ற முதனிலையாகத் தோன்றியது ஐயர் என்பது, இதற்குப் பெண் பால் ஐயை என்பது; செந்தமிழ்ச்சொல். தெளிந்த நீர் கலங்குவது விரைவில் ஏற்படக்கூடியது; மீண்டும் தெளிவடைவது மெதுவாக என்பதை உணர்த்துபவர் மெல்லத் தெளிந்தவர் என்றார். இதனால் அவரது மனம் கலக்கமுற்றது மாயை தோன்றிய உடனே என்பதும் பெறப் பட்டது. (44)

[தந்தை பெயரிடுதல் முதலிய சிறப்புச் செய்தமை]

காந்தம் வலியும் இரும்புபோல்
கண்கள் தன்னோ டுறப்பிணித்து
நேர்ந்த மனமோ ரணுவென்னல்
நியாயம் அன்றென் றம்மனத்தில்
போந்த ஆசைப் பெருங்கடலைப்
புகட்டு மகளைக் கண்டுவந்து
வேந்தன் மாயை எனும்நாமம்
விளம்பிச் சிறப்புப் பலசெய்தான்.

[இ-ள்.] காந்தம்-காந்தக் கல்லினாலே, வலியும்-இழுக்கப் படுகின்ற, இரும்புபோல்-இரும்பைப்போல, கண்கள்-(மமகாரனது) பார்வைகள், தன்னோடுஉற-தன்னோடே பொருந்தும்படி,

பிணித்து - அகப்படுத்திக்கொண்டு, நேர்ந்த-(யாவற்றையும் ஏற்றுக்கோடற்கு) இயைந்த, மனம்-மனத்தினை, ஓர் அணு என்னல்-(நியாய நூலோர்) ஒரு சிறிய அணுவடிவம் என்று சொல்லுதல், நியாயம்-நடுநிலைமை (அல்லது நீதி), அன்று என்று-அன்று என்று, அம்மனத்தில்-(அம்மமகாரனது) மனதின்கண், போந்த-தன்னைப்பற்றி உண்டாகிய, ஆசைப்பெருங் கடலை-ஆசையாகிய பெருங்கடலை, புகட்டும்-புகும்படிச்செய்கிற, மகளை-புதல்வியைக், கண்டு-பார்த்து, உவந்து-மகிழ்ந்து, வேந்தன்-மமகாரனாகிய அரசன், மாயை எனும் நாமம்-மாயை என்கிற பெயரை, விளம்பி-சொல்லியதோடு, சிறப்புப்பல-மற்றும் பல சிறப்புகளையும், செய்தான்-செய்தனன். [எ-று.]

[கு-ரை.] காந்தம்-மாயை, இரும்பு-மமகாரனது பார்வை, காந்தம் இரும்பைத் தன்வசம் அகப்படுத்திக்கொண்டதுபோல என்பது உவமையணி தருக்க நூலார் மனம் அணுத்தன்மை என்று சொல்வர். கண்கள் என்றது அவைகளினது பார்வைக்கு ஆயிற்று. மிகப் பெரிய கடலினும் மிகச் சிறிய மனம் பெரிதாக ஏற்றுக்கொண்டது என்பது பெருமையணி. (45)

[மோகினி மகளை வளர்த்தல்]

மாயைப் பெயர்கொள் மகளை நறு
மஞ்சள் திமிர்ந்து கணைக்காலின்
ஏயக் கிடத்தி நீராட்டி
இணைக்கண் உந்தி நீரூதி
நேயத் துகிலின் மெய்துடைத்து
நெகிழ்மென்முலை யோடுறத் தழுவி
வாயில் திவலை கொடுதேய்த்து
மண்பொட் டணிந்து நீறிட்டு,

[இ-ள்.] மாயைப் பெயர்கொள் மகளை-மாயை என்னும் பெயரைக்கொண்ட மகளை, நறு-மணமுள்ள, மஞ்சள்-மஞ்சளை, திமிர்ந்து-பூசி, கணைக்காலின்-கணைக்கால்களின்மேல், ஏய-பொருந்த, கிடத்தி-கிடக்கும்படிசெய்து, நீராட்டி-நீரால் குளிப்பாட்டி, இணைக்கண்-இரண்டு கண்களிலும், உந்தி-(மஞ்சள் பொடி முதலியன) விழாமல்படி ஒதுக்கி, நீர் ஊதி-கண்ணிலும் உச்சியிலும் நீரை (வாயால்) ஊதி, நேயத்துகிலின்-மென்மையான ஆடையினால், மெய்துடைத்து-உடம்பைத் துடைத்து,

நெகிழ்மென்முலையோடு-மகப்பெற்றதால் மென்மையான முலைக ளோடு, உறத்தழுவி-பொருந்தும்படி தழுவி, வாயின் திவலை-வாயினது எச்சில் துளியைக், கொடு-கொண்டு, தேய்த்து-இழைத்து, மண்பொட்டு-நிலப்பொட்டு, அணிந்து-இட்டு, நீறு இட்டு-திருநீறணிந்து. [எ—று.]

[கு-ரை.] குழந்தையைக் குளிப்பாட்டுகிற உலகறி வழக்கத்தினை எடுத்துக் காட்டப்பட்டதால் தன்மைநவிற்சியணி. இப்பாட்டு குளகம் நேயம்-விருப்பம் விருப்பத்திற்குக் காரணமான மென்மைத்தன்மை என்று ஆடைக்கு உரைக்கப்பட்டது. (46)

கண்ணிற் கமைய மையெழுதிக்
காற்குச் சதங்கை பொற்றண்டை
நண்ணப் புனைந்து பொன்னரைஞா
ணடுவிற் பூட்டிப் புலியுகிர்சேர்
வண்ணப் பசும்பொ னணிமார்பில்
வனைந்து சிறுமென் றொடிசேர்த்திப்
பெண்ணிற் கரசி திருநுதற்பொற்
பிறைமேற் சுட்டி யொன்றணிந்து.

[இ—ள்.] கண்ணிற்கு-கண்களுக்கு, அமைய-அழகுநிறைய, மைஎழுதி-அஞ்சனம் தீட்டி, காற்கு-கால்களுக்கு, சதங்கை-சதங்கைகளையும், பொன் தண்டை-பொன்னாலான தண்டை களையும், நண்ண-பொருந்தும்படி, புனைந்து-அணிந்து, பொன் அரைஞாண்-பொன்னாலான அரைநாணினை, நடுவில் பூட்டி-இடையிலே பூட்டி, புலியுகிர்சேர்-புலியின்நகம் சேர்ந்த, வண் ணம்-அழகிய, பசும்பொன்-பசிய பொன்னாலாகிய, அணி-மார் பின் பதக்கத்தை, மார்பில் வனைந்து-மார்பிலே சேர்த்து, சிறுமென்தொடி சேர்த்து-சிறிய மென்மையான வளையல்களைக் கைக்குஅணிந்து, பெண்ணிற்கு அரசி-பெண்களுக்கு அரசிபோல் பவளான மாயைக்கு, திருநுதல்-அழகிய நெற்றியாகிய, பொன் பிறைமேல்-பொன்னிறமுடைய பிறையின்மேல், சுட்டி ஒன்று அணிந்து-சுட்டி என்னும் அணி ஒன்றினைக் கட்டி [எ—று.]

[கு-ரை.] அரைஞாண்-அரையில் கட்டப்படும் கயிறு என்னும் கார ணக்குறி. அரை, அளவாகுபெயர். புலிப்பல்லைக் கோத்து குழந்தைகளுக்கு அணிதல் பண்டையர் மரபு. "வயங்கொள் மறப்புலி வாய் பிளந்து பெற்ற மாலை வெண்பற்றாலிநிரைபூட்டி" என்பர் பிறரும். 'தாலி களைந்தின்றும் இலனே' என்னும் புறநானூற்றடியும் பார்க்க. நுதற்பிறை, உருவகம்.

எழுதி, புனைந்து, பூட்டி, வனைந்து, சேர்த்தி, அணிந்து என்று செய்து என்னெச்சம் பல அடுக்கி வந்து நாற்பத்தொன்பதாம் செய்யுளிலுள்ள வளர்த்தாள் என்னும் வினைகொண்டன. குழந்தைகளுக்கு இடுகின்ற அணிகளின் தன்மைகளை நவில்வதால் தன்மைநவிற்சியணி. காற்கு சதங்கையும் தண்டையும் அணிந்து என்று பொருள் கொள்க. (47)

போக்கும் பொருளால் கண்மிச்சில்
போக்கி யன்பால் முலையூட்டி
தூக்கும் பவளக் காற்பசும்பொன்
தொட்டில்,மலியக் கிடத்தியே
பார்க்கும் சுவைவா னமுதமே
பார்வேந் தணியே யென் துயரம்
தீர்க்கும் கரும்பே கண்மணியே
திருவே யென்று சீராட்டி.

[இ—ள்.] கண்மிச்சில்-(பிறரது) பார்வையால் வந்த குற்றத்தை (கண் திருஷ்டி), போக்கும் பொருளால்-போக்குதற்குரிய பொருள்களினாலே, போக்கி-விலகும்படிசெய்து, முலையூட்டி-முலைப்பாலை உண்பித்து, தூக்கும்-தூக்கப்பட்ட, பவளக்கால்-பவளக்கால்களையுடைய, பசும்பொன் தொட்டில்-பசிய பொன்னுலாகிய தொட்டிலின்கண், மலிய-நிறையும்படி, கிடத்தியே-படுக்கவைத்து, பார்க்கும்-பார்த்து மகிழ்தற்குரிய, சுவை-இனிமையையுடைய, வான் அமுதமே-மேன்மையான அமுதமே, பார்வேந்து-உலகையாளும் அரசனுக்கு, அணியே-அழகு செய்பவளே, என் துயரம்-எனது துன்பத்தைத், தீர்க்கும்-ஒழிக்கும், கரும்பே-கரும்புபோல்பவளே, கண்மணியே-கண்ணுள் வசிக்கும் பாவைபோல்வாளே, திருவே-கண்டார் விரும்பும் தன்மையுடையவளே, என்று சீராட்டி-என்று பல வகையாகச் சிறப்பினைச் சொல்லி சீராட்டி. [எ—று.]

[கு-ரை.] போக்கும் பொருள் மஞ்சள்நீர் சோற்று உருண்டை முதலியன சுற்றல் முதலியன. தூக்கும் பவளக்கால் பசும் பொன் தொட்டில் என்பது உயர்வு நவிற்சி. மகவில்லாத் துன்பத்தைப் போக்குதலின் வான் அமுதம் என்றும், உயிர்க்கும் தோறும் இனிமை பயத்தலின் கரும்பேயென்றும், அகத்துறுப்புகள் பலவற்றினும் சிறந்தது கண் அதனினும் அதனுள் பாவை சிறந்ததாதலின் அச்சிறப்புகள் தோன்ற கண்மணியே என்றும், தனக்கேயன்றி கண்டவர் யாவரானும் விரும்பப்படும் தன்மையுடைமைபற்றி திருவேயென்றும் கூறப்பட்டது. அமுதே அணியே கரும்பே கண்மணியே என்பன சீராட்டு வகைகள். அழுதலின் இரங்கிப் பாலூட்டும் தாயினும் அன்புமேலீட்டால் நினைக்குந்தோறும் தானே குழந்தைக்குப் பாலூட்டும் தாய் சிறந்தாளென்பதை அறிவுறுத்த அன்பால் முலையூட்டி என்றார். (48)

மிடியன் ஒருசெய் யாளனச்செய்
விளையக் காக்கும் செயல்போல
படியில் கல்வி விரும்பினோன்
பாடம் போற்று மதுபோல
ஒடிவில் செங்கோல் மனுவேந்தன்
உலகம் புரக்கும் முறைபோல
கொடிய நோன்பு செய்தீன்ற
கொடியை வளர்த்தாள் மோஹினியே.

[இ-ள்.] மிடியன்-வறியனாகிய, ஒரு செய்யாளன்-ஒரு வயலையுடையவன், அச்செய்விளைய-அவ்வயல் பயன்தருவான் வேண்டி, காக்கும்-காப்பாற்றுகின்ற, செயல்போல-செய்கையைப்போலவும், படியில்-ஒப்பு இல்லாத, கல்வி-கற்றற்குரிய வித்தையை, விரும்பினோன்-கற்றுக்கொள்வதில் விருப்பமுடையவன், பாடம்-கற்கவேண்டிய பாடத்தை, போற்றுமதுபோல-காப்பாற்றுகின்ற செய்கையைப் போலவும், ஒடிவு இல்-கெடுதல் இல்லாத, செங்கோல்-செங்கோலையுடைய, மனுவேந்தன்-மனுநூல் வழியே நடக்கின்ற அரசன், உலகம்-உயிர்களை, புரக்கும்-காப்பாற்றுகின்ற, முறைபோல-செய்கையைப் போலவும், மோஹினி-மோஹினியானவள், கொடிய-துன்பத்திற்குக் காரணமான, நோன்பு-விரதங்களைச், செய்துஈன்ற-செய்து பெற்ற, கொடியை-பூங்கொடிபோன்ற மகளை, வளர்த்தாள்-வளர்த்தனள். [எ-று.]

[கு-ரை.] மனுவால் செய்த நூலை மனு என்றலும், கொடிபோல் வாளைக்கொடி என்றலும் ஆகுபெயர்கள். மோஹினி; மிடியன், கல்வி விரும்பினோன், மனுவேந்தன் முதலியோர்கள் செய்யையும் பாடத்தையும் உயிர்களையும் காப்பாற்றுவதுபோல மகளாகிய மாயையை ஒழிவின்றி தன் மனம் முழுதும் அவளிடத்தே வைத்து நல்லனவே யெல்லாம் செய்தும் தீயவற்றை யெல்லாம் போக்கியும் வளர்த்தாள் என உவமையை விரித்துக்கொள்க. "ஓர் ஏர் உழவன் போல" என்றார் பிறரும்.

ஆசிரியரும் சிற்றுயிர்க்குற்ற துணை கல்வியினூங்கில்லை யாதலின், படியில் கல்வியென்றார். "நாயகன் அல்லன் நம்மை நனிபயந்தெடுத்து நல்கும் தாயென இனிதுபேணத் தாங்குதி தாங்குவன்" என்றபடி அரன் குடிகளுக்குத் தாய்போல்வானாதலின் ஈண்டு செங்கோல் மனுவேந்தன் உலகம் போற்றுமது போல என்றார். செய்யாளன் வயலில் உள்ள களைகளைக் களைவதுபோலவும், மனுவேந்தன் கொலையிற் கொடியாரை ஒறுத்தல் போலவும் மோஹினி தீயனவற்றைப் போக்கினாளென்றும் கொள்ளவைத்தார். மஞ்சள் திமிர்ந்து முதலாக ஆரம்பித்த எச்சங்களெல்லாம் கூட்டி இந்தச் செய்யுளில் வளர்த்தாள் என்று முடித்தார். இந்நான்கு பாட்டுகளும் குளகம் (49)

[மாயை வளர்தற் சிறப்பு]

கள்ள மாயை தன்னெழில்போல்
 கண்ட தில்லை யென்னமிக
வுள்ளம் வியந்து தலையசைப்ப
 தொப்ப அசையும் சுடர்பார்த்து
மெள்ள விரலொன் றனைச்சுவைத்து
 மிளிர்பூஞ் சதங்கைத் தாளுதைத்து
விள்ளு மலர்வாய் குவித்தழுது
 மீள நகைத்துங் கிடக்குமால்.

[இ-ள்.] கள்ளமாயைதன்-வஞ்சக மாயையின், எழில் போல்-அழகுபோல, கண்டது இல்லையென-(யான்) பார்த்தது இல்லையென்று, மிக உள்ளம் வியந்து-மிகவும் மனதின்கண் ஆச்சர்யமடைந்து, அசைப்பது ஒப்ப-தலையினை அசைப்பதுபோல, அசையும்-அசைகின்ற, சுடர்-விளக்கினை, பார்த்தும்-கண்டும், விரல் ஒன்றனை-விரலில் ஒன்றினை, மெள்ளச் சுவைத்தும்-மென்மையாகச் சுவைத்தலைச் செய்தும், மிளிர்-விளங்குகின்ற, பூ-அழகிய, சதங்கை-சதங்கைகளையுடைய, தாள் உதைத்து-கால்களை உதைத்துக்கொண்டு, விள்ளும்-விரிந்து மலரும், மலர் வாய்-மலர்போன்ற வாயை, குவித்து அழுதும்-குவியும்படிக்கு அழுதும், மீளநகைத்தும்-மீண்டும் சிரித்தும், கிடக்கும்-படுத்திருக்கும். [எ-று.]

[கு-ரை.] சுடர் பார்த்தும் விரல் ஒன்றனைச் சுவைத்தும், அழுதும், நகைத்தும், கிடக்கும் என்று குழந்தைகளின் சாதித்தன்மை கூறுதலான் தன்மையணி. விளக்கு சுடர் அசைதல் தலை அசைப்பதாகக் கூறுதல் தற்குறிப்பேற்ற அணி. உள்ளத்தை உள்ளவாறு உணர்ந்துள்ள அறிவையும் மயக்குகின்றதாதலின் கள்ள மாயை யென்றார். அசையும் செய்யும் என்னும் பெயரெச்சம் சுடர் என்னும் பெயர் கொண்டது. சதங்கை "பூப் பெயர்முன் இனமென்மையுந்தோன்றும்" என்றதால் பூஞ்சதங்கை என வந்தது. மலர்வாய் உவமைத்தொகை. ஆல் அசை. (50)

மாயை கவிழ முகங்கவிழ்ந்த
 மதனன் இருந்தான் அவள் இருப்ப
போய சிலையொன் றெடுத்தெழுந்தான்
 பொன்னு லியன்ற பாவையெழ
மேய வனங்க வேணடந்தான்
 வேந்தன் பயந்த மகணடப்பத்
தூய தவஞ்செய் தைந்தவித்த
 துறவி னோர்பா லோடினன்.

[இ-ள்.] மாயை கவிழ-மாயையானவள் முகங்கவிழ்கின்ற பருவத்தை நண்ண, முகம் கவிழ்ந்த மதனன்-(அதற்குமுன்பே நாணத்தால்) முகம் கவிழ்ந்த கிடந்த மன்மதன், இருந்தான்-உட்கார்ந்தான், அவன் இருப்ப-மாயை உட்காரும் பருவமடைய, மேய-(மன்மதனின்) கைவிட்டுப்போன, சிலை ஒன்று-வில் ஒன்றினை, எடுத்து எழுந்தான்-எடுத்துக்கொண்டு எழுந்தனன், பொன்னுலியன்ற பாவை-பொன்னினாலாகிய பாவை போன்ற மாயையானவள், எழ-எழுந்து நிற்கும் பருவமடைய, மேய-விரும்பப்பட்ட, அனங்கவேள்-மன்மதன், நடந்தான்-நடத்தலைச் செய்தான், வேந்தன்-மமகார அரசன், பயந்தமகள்-பெற்றெடுத்த மகளாகிய மாயை, நடப்ப-நடக்கும் பருவமடைய, தூய தவம் செய்து-பரிசுத்தமான தவத்தைச்செய்து, ஐந்து அவித்த-ஐந்து ஆசையும் ஒழித்த, துறவினோர் பால்-முனிவர் இடத்துக்கு, ஓடினான்-விரைந்து சென்றான். [எ-று.]

[கு-ரை.] பாவை, ஐந்து ஆகுபெயர்கள் அனங்கவேள் இருபெயரொட்டு. இனைத்தென அறிந்த கிளவியாதலின் ஐந்தும் என வரவேண்டிய முற்றும்மை செய்யுளாதலின் தொகுத்தல் காரணத்தால் தொக்கது. ஐந்தவித்தாரையும் அலைப்பான்வேண்டி சமயம் பார்த்திருந்த அனங்கன் மாயை நடக்கும் பருவம் அடைந்ததும் அவர்களிடத்துச் சென்றான். மன்மதனது இருத்தல் முதலிய காரியங்களுக்கு மாயையினது கவிழ்தல் முதலியவற்றைக் காரணங்களாகக் கூறுதலின் காரணமாலையணி. (51)

குழலும் யாழும் இனியவெனக்
கூறுவண்ணம் மென்கனி வாய்
மழலை மொழிந்தும் உடற்கின்பம்
மருவவோடி மேல்விழுந்தும்
விழையும் அமிழ்தின் மிக இனிமை
விளைய நுகரும் சுவையழகில்
செழிய சிறுகை யாலளைந்தும்
செய்தாள் மோகம் ஈன்றோரை.

[இ-ள்.] குழலும்-புள்ளாங்குழலினிசையையும், யாழும்-வீணையின் இசையையும், இனியவெனக் கூறுவண்ணம்-இன்பம் தருவனவென்று சொல்லாதபடி, மென்கனிவாய்-மெல்லிய கனி போன்றுள்ள வாயினால், மழலைமொழிந்தும்-திருத்தமுறாத சொற்களைப்பேசியும், உடற்கின்பம்-உடம்புக்கு இன்பம், மருவ-உண்டாகும்படி, ஓடி-தளர்ந்து ஓடி, மேல் விழுந்தும்-மேலே

விழுந்தும், விழையும்-(யாராலும்) விரும்பப்படுகின்ற, அமிழ்தின்-அமிழ்தத்தைக் காட்டிலும், மிக இனிமை விளைய-மிகவும் இன்பம் பயக்க, நுகரும்-உண்ணப்படுகின்ற, சுவை-அறுசுவை பொருந்திய, அடிசில்-உணவினை, செழிய-செழுமை பொருந்திய, சிறு கையால்-சிறிய கைகளால், அளைந்தும்-குழப்பியும், ஈன்றோரை-பெற்றோர்களுக்கு, மோகம்-விருப்பத்தினை, செய்தாள்-உண்டாக்கினாள். [எ-று.]

[கு-ரை.] குழல், யாழ் ஆகு பெயர்கள். ஈன்றோர்க்கு எனற்பாலது ஈன்றோரை என வந்தது உருபு மயக்கம். "யாதன் உருபிற் கூறிற்றாயினும் பொருள் செல்மருங்கில் வேற்றுமை சாரும்." "குழலினிது யாழினிது என்ப தம்மக்கள் மழலைச்சொற் கேளாதவர்" எனவும், "மக்கள் மெய்தீண்டல் உடற்கின்பம் மற்றவர் சொற்கேட்டல் இன்பம் செவிக்கு" எனவும் "அமிழ்தினும் ஆற்ற இனிதே தம்மக்கள் சிறுகை யளாவியகூழ்" எனவும் பொய்யாமொழியார் கூறியதுங் காண்க. குழந்தைத்தன்மை கூறியதினால் தன்மை நவிற்சியணி. "இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும் நெய்யுடை அடிசில் மெய்ப்பட விதிர்த்தும்" என்றார்பிறரும். செவிக்கின்பம் உடற்கின்பம் நாவின்பம் என மூவின்பமும் இங்கு கூறப்பட்டுள்ளது எனவே காண்கின்ற காட்சியின்பமும் உச்சிமோத்தலாகிய உயிர்க்கின்பமும் கொள்ளப்படும். (52)

பரவு பெருஞ்சீர் அல்லமனைப்
பற்ற வந்த மதியாற்றன்
உருவ நிழலைப் பற்றநினைந்
தோடி ஓடிக் கலுழ்ந்திடுவாள்
பொருவின் மதிய மேல்முனிந்து
பொங்கு மழலை வீசாமல்
மருவி உறவு கொள்வாள்போல்
வாவா வென்ன அழைத்திடுவாள்.

[இ-ள்.] பரவுபெரும்சீர்-உலகமெல்லாம் பரவிய பெரிய மிகு புகழையுடைய, அல்லமனை-அல்லமாப்பிரபு தேவனை, பற்ற வந்த-பிடிப்பான் விரும்பிவந்த, மதியால்-அறிவினாலே, தன் உருவ நிழலை-தனது வடிவத்தின் சாயையை, பற்ற நினைந்து-பிடிக்க எண்ணி, ஓடி-ஓடி, கலுழ்ந்திடுவாள்-வருந்துவாள், பொருவு இல் மதியம்-ஒப்பில்லாத சந்திரனானவன், மேல்-பிற்காலத்தில், முனிந்து-வெறுத்து, பொங்கும்-கொதிக்கின்ற, அழலை-(கிரணமாகிய) நெருப்பினை, வீசாமல்-வீசாது இருக்கும்படி, மருவி-அடுத்து, உறவு கொள்வாள்போல்-நட்பு கொள்வதைப்போல, வாவாவென்ன அழைத்திடுவாள்-வாவா வென்று பலதரம் கூப்பிடுவாள். [எ-று.]

[கு-ரை] மதி ஈண்டும் குறிப்பால் பேதமை உணர்த்திற்று. நிழலைப் பற்ற எண்ணுதலும் திங்களை வாவென அழைத்தலும் குழந்தை இயல்பாத லின் தன்மை நவிற்சியணி. சந்திரனைக் கூப்பிடுதற்கு இயைபு கூறுதல் தற்குறிப்பணி. ஓடிஓடி, வாவா அடுக்குகள். (53)

[மாயை பெதும்பைப்பருவ மடைந்தமை]

மாதிப் பரிசு தந்தைதாய்
    மகிழ வளர்வுற் றரசிருந்த
நீதிக் கிழவ னிறப்பவவன்
    நெறிசே ரிளஞ்சேய் அவன் தவிசின்
மீதுற் றதுபோல் முன்முளைத்த
    வெண்பல் விழவே றெயிறுதிப்ப
பேதைப் பருவம் கடந்துமேல்
    பெதும்பைப் பருவம் நண்ணினள்.

[இ-ள்.] மாது-மாயையானவள், இப்பரிசு - இத்தன்மை யள் (ஆக), தந்தைதாய் மகிழ-பெற்றோர்கள் மகிழும்படி, வளர் வுற்று-வளர்ச்சியடைந்து, அரசு இருந்த-அரசு செலுத்தி இருந்த, நீதிக்கிழவன்-அரசியல் தவறாத அரசன், இறப்ப-இறந்து கழிய, அவன் நெறிசேர்-அவ்வரசன் வழியிற்றோன்றிய, இளஞ்சேய்-இளம் புதல்வனானவன், அவன் தவிசின்-அவனது சிம்மாசனத்தின், மீது உற்றதுபோல்-மேலே அமர்ந்ததுபோல, முன்முளைத்த-முன்னே முளைத்திருந்த, வெண்பல் விழ-வெள் ளிய பற்கள் விழுதலாலே, வேறு எயிறு உதிப்ப-அது இருந்த இடத்து வேறு பற்கள் தோன்ற, பேதைப்பருவங்கடந்து-பேதைப் பருவத்தைத் தாண்டி, மேல்-அதன்பின் வரக்கடவ தாகிய, பெதும்பைப் பருவம்-பெதும்பை என்னும் பருவத்தை, நண்ணினள்-அடைந்தாள். [எ-று.]

[கு-ரை.] முன் இருந்த அரசன் இறப்ப இளவரசன் அரசு வீற்றிருந் தாற்போல முன் பல் விழ வேறு பல் ஆண்டு முளைத்தது என்பது உவமை யணி. எழாண்டளவும் பேதைப்பருவம், பன்னிரண்டு வயதளவும் பெதும் பைப்பருவம். பரிசு என்றதின்பின் ஆக என ஒரு சொல் வருவிக்க. நீதிக் கிழவன் என்றதற்கேற்ப வெண்பல் என்றார். (54)

செய்யவல்ல கம்மியன் செய்
    சிங்கம் சுமந்த மணியணைமேல்
பைய வந்து மணிமௌலி
    பார்வேந் திருக்கும் பரிசுபோல்

வெய்ய குதம்பை வளர்த்தகல
விழுநீர் வள்ளைக் காதினிடைத்
துய்ய பசும்பொன் மணிகுயின்ற
துணைத்தோ டமையத் தோன்றினாள்.

[இ—ள்.] செய்யவல்ல - பண்ணுதல் வல்லமையுடைய, கம்மியன்-கம்மாளனாலே, செய்-செய்யப்பட்ட, சிங்கம் சுமந்த-சிங்கங்களால் சுமக்கப்பட்டதாகிய, மணி அணைமேல்-மணி அழுந்திய படத்தின்மேல், மணி மௌலி-மணிகளால் செய்யப்பட்ட முடியினை உடைய, பார் வேந்து-அரசனானவன், பைய வந்து-மெள்ளமாக வந்து, இருக்கும் பரிசுபோல்-கொலுவாக வீற்றிருக்கும் தன்மைபோல, வெய்ய குதம்பை-வெவ்விய தக்கைகளானவை, வளர்த்தகல-வளர்த்து நீங்க, விழுநீர்-சிறந்த குணத்தையுடைய, வள்ளைக் காதினிடை-வள்ளைபோலுங் காதுகளிடத்து, துய்ய பசும்பொன்-பரிசுத்தமான பசிய பொன்னிலே, மணிகுயின்ற-மணிகள் அழுத்தி செய்யப்பட்ட, துணைத்தோடு-ஒன்றுக்கொன்று ஒப்பான குண்டலங்கள் (கம்மல்கள்), அமைய-பொருந்த, தோன்றினாள். [எ—று.]

[கு-ரை.] உவமையணி. காதில் உள்ள சிறு துளையை வருத்தப் படுத்தி வளர்க்கின்றதனால் வெய்ய குதம்பை என்றார். வள்ளைக்காது உவமைத்தொகை. சிம்மவாசனம், சிம்மவடிவாகச் செய்யப்பட்டு ஆசனம் மேலே அமைத்திருப்பதால் காரணக்குறி. (55)

[பெதும்பைப் பருவத்தின் வளர்ச்சி]

மட்டுக் கணைவே ளரணாக
வளர்த்த குழற்கா டலர்விரவிக்
கட்டுற் றதுநம் பரன்களத்திற்
கடுவும் விழிகள் சிறிதுற்ற
முட்டித் துறவாம் பறவைமயன்
முடியிற் படுதல் மெல்லமறைந்
தெட்டிப் பார்ப்ப வெனமுகங்கொண்
டெழுந்த மார்பின் இளமுலைகள்.

[இ—ள்.] மட்டு-தேனையுடைய, கணை-மலரம்புகளை ஏந்திய, வேள்-மன்மதனுக்கு, அரணாக-(காடு) பாது காவலாகும்படி, வளர்த்த-வளர்க்கப்பட்ட, குழற்காடு-கூந்தற்காடானது, அலர் விரவி-மலரொடு கலந்து, கட்டுற்றது-கட்டப்படுதலை அடைந்தது, விழிகள்-கண்களானவை, நம்பரன்களத்தின்-நமது இறைவனது கழுத்திலுள்ள, கடுவும்-விஷத்தின் தன்மையையும்,

சிறிது உற்ற-சிறிது பொருந்தின, இள முலைகள்-தோன்றுகின்ற நகில்கள், துறவாம் பறவை-துறந்தோராகிய பறவைகள், முட்டி-முட்டப்பெற்று, மயல் முடியிற்படுதல்-மயக்கமாகிய கண்ணியிலே அகப்படுதலை, மறைந்து-மறைந்திருந்து, மெல்ல-மெதுவாக, எட்டிப் பார்ப்பனபோல்-எட்டிப் பார்க்கின்ற தன்மையை உடையனபோல, முகங்கொண்டு-முகம் தெரியும்படி நின்று, மார்பினின்றும் எழுந்த-மார்பினின்று புறப்பட்டன. [எ—று.]

[கு-ரை.] மலையரண், காட்டரண், அகழியரண், மதிலரண் நான்கில் காட்டரண் கூறப்பட்டது. மன்மதன் தன்னை வென்ற முனிவரை வெல்வான் வேண்டி பெண்களை (சிறப்பாக மாயையைப்) படையாகக் கொண்டனனாதலால் அதற்கேற்ப மாயையின் கூந்தலைக் காட்டரணாகக் கூறப்பட்டது. அலர் விரவி கட்டுற்றது என்ற விடத்தில் கவலையுற்றது என்று பொருள் கொள்ள நின்றது. துறவு என்பது துறந்தோர்க்கு ஆகியது துறந்தோரைப் பறவையாக உருவகித்தார். கடுவும் என்பது கொல்லுதற்றொழிலையுடையதாயிற்று. துறவும் கடுவும் ஆகுபெயர்கள். நஞ்சமாகிய உவமானத்தின் குணத்தை உபமேயமாகிய கண்களின்மேல் ஏற்றியதால் இது காட்சியணி. தோன்றுகின்ற நகில்களை எட்டிப் பார்ப்பதாகத் தற்குறிப்பேற்றம் செய்வதால் தற்குறிப்பேற்ற அணி உருவகத்தை அங்கமாகக் கொண்டுவந்தது. (56)

[இதுவும் பருவ வளர்ச்சி]

அன்ன நடையும் அன்னமிலா
ஐயர் நடையும் தளர்பெய்த
கன்னி நடக்கும் நடைகற்றாள்
கரும்பு கசக்கும் மொழிபெற்றாள்
மன்னு மலர்வீழ் சுரும்பனைய
மைந்தர் பார்வைக் குறிப்புணர்ந்தாள்
தன்னை அரியள் எனவறிந்து
தானே மனத்திற் றருக்குற்றாள்.

[இ-ள்.] அன்ன நடையும்-அன்னத்தினது நடையையும், அன்னம் இலா-உணவைவிட்ட, ஐயர் நடையும்-முனிவரது ஒழுக்கமும், தளர்பெய்த-சோர்வை அடையும்படி, கன்னி-மாயையானவள், நடக்கும்-நடக்கின்ற, நடைகற்றாள்-நடையும் கற்றுக்கொண்டாள், கரும்பு-கரும்பின் இரசமும், கசக்கும்-(இதை நோக்க) கசத்தற்றன்மையுடையது என்று எண்ணும்படி, மொழி பெற்றாள்-சொற்களைப் பெற்றாள், மன்னுமலர் வீழ்-

வளம் மிகுந்த மலரின் கண் வீழ்கின்ற, சுரும்பு அனைய-வண்டு களை ஒத்த, மைந்தர் பார்வை-காளையரது பார்வையின், குறிப்பு உணர்ந்தாள்-குறிப்பினை உணர்ந்தாள், தானே தன்னை அரியள்-(அதனால்) தானே தன்னை மிகவும் அரியள், என அறிந்து-என்று தெரிந்து, தருக்குற்றாள்-செருக்கையடைந்தாள். [எ-று.]

[கு-ரை.] அன்னம் முதலில் பறவையையும் பிறகு உணவையும் குறித்தது. நடைமுன் நடையினையும், பின் ஒழுக்கத்தையும் உணர்த்திற்று. அன்ன நடையும் ஐயர் நடையும் தளர்வெய்த கன்னி நடந்தாள் என இரண்டிற்கும் ஒரே முடிவு கொடுத்தலால் ஒப்புமைக்கூட்ட அணி. கசக்கும் என்பது கசப்பாக்கும் எனப் பிறவினைப்பொருளில் வந்தது. கரும்பையும் கசப்பாக்கும் மொழி என்றது உயர்வு நவிற்சியணி. மன்னுமலர் வீழ் என்பதற்கு தேனும் மகரந்தமும் வாசனையும் மன்னிய என்று கொண்டு அதற்கேற்ப பொருளில் வடிவும அழகும் இளமையும் கொள்ளவேண்டும். சுரும்பு மலரைக் கண்டதும் அதிலுள்ள தேன் முதலியவற்றை உண்ண அதனைச்சுற்றித் திரிதல்போல மைந்தர்களும் மாயையின் அழகைக்கண்டு ஈடுபட்டு சுற்றித் திரிவார்கள் என்பது கொள்ளக்கிடக்கிறது. அத்தகைய மைந்தர் பார்வை காதற் குறிப்புணர்த்துமாதலின் பார்வைக்குறிப்பு உணர்ந்தாள் என்றார். மன்னுமலர்வீழ் சுரும்பனைய மைந்தர் என்பது உவமையணி வடிவ முதலியவற்றால் பிறமகளிரையும் எல்லாம் தன்னிற்றாழ்ந்தவர்களாக மதிக்கும் தன்மையைச் செருக்குற்றாள் என்றார். இலா என்னும் ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம் ஐயர் என்னும் பெயர்கொண்டு முடிந்தது. (57)

[இதுவும் அப்பருவ வளர்ச்சி]

இந்தக் கன்னி முழுமதிநோக்
கெய்திச் செவ்வாய் வலிவடைந்து
சந்தச் சிங்கம் தனையடுத்த
தக்க வரவின் வலிசார்ந்து
முந்தைக் கொடிமீனத்
தலைவன் முனிவராகும் பகைவெல்ல
கந்தப் பகழி பலவேழக்
கருப்புச் சிலையில் தொடுத்தனனால்.

[இ-ள்.] இந்தக்கன்னி-இந்த மாயையினது, மதிமுழு நோக்கெய்தி-சந்திரன்போலுள்ள முகத்தின் முழுப்பார்வையைப்பெற்று, செவ்வாய் வலியடைந்து-சிவப்புநிறம் பொருந்திய வாயினது வன்மையை அடைந்து, சந்தர்-அழகிய, சிங்கம்தனை-சிங்கத்தின் இடுப்புப்போன்ற இடையினை, அடுத்த-அடுத்திருப்பதாகிய, தக்க அரவின்-தகுதிப்பாடு உடைய அரவு

போன்ற அல்குலினது, வலிசார்ந்து-வலிமையையும் சேர்ந்து, முந்தைக்கொடி-கொடிகளில் முதன்மைபெற்ற கொடியாகிய, மீனத்தலைவன்-மீனக்கொடிக்குத் தலைவனான மன்மதன், முனிவராகும் பகை-துறவோராகிய பகைவரை, வெல்ல-வெற்றி பெறுவதற்காக, வேழக் கருப்புச்சிலையில்-வேழக் கரும்பாகிய வில்லில், பல கந்தப்பகழி-பலவாகிய மணம்பொருந்திய அம்பு களை, தொடுத்தனன்-எய்தனன். [எ-று.]

[கு-ரை.] மீனத்தலைவன், மீனராசியை ஜன்ம லக்கினமாகக்கொண்டவன். சந்திரனுக்கு எழாமிடப்பார்வை சிறந்தது. அதனால் சந்திரன் கன்னியில் இருக்க இரண்டு ஒன்பதுக்கிடையே செவ்வாய் எழிலே சந்திரனோடு கூடி சந்திரமங்கள யோகத்திலே நிற்க ஆறுமிடமாகிய சிங்காசியில் ராகு விருக்க மீனத்தலைவனாகிய மன்மதன் பகை வெல்ல கோசார பலன் பார்த்துப் புறப்பட்டான் என்ற பொருளும் தோன்றக் கிடக்கிறது. ஆறுமிடத்தில் கருங்கோளாகிய ராகு நிற்றல் பகைவர்களை அடிபபடுத்தற்குரிய தன்மையைத் தரும். சந்திரனும் செவ்வாயும் கூடுதல் அதற்குச் சிறந்த வலியுடைமையாகும் இவைகள் எல்லாம் சாதகாலங்காரத்துட் கண்டது.

மதி—சந்திரன்போன்ற முகம், சிங்கம்—சிங்கத்தை ஒத்த இடை, அரவு அரவின் படம் போன்ற அல்குல் என உவமைகூறி பொருளை உணர்த்தலால் உருவக உயர்வு நவிற்சியணி. மன்மதனது செயலால் கோசார பலன். ஆல் அசை. வேழக்கரும்பு—இருபெயரொட்டு. மன்மதனுக்குக் குயில்—ஊது குழல், தென்றல்—தேர், மீனம்—கொடி, கரும்பு—வில், சுரும்பு—நாண், மலர்—அம்பு, திங்கள்—குடை, என்னும் வழக்குப்பற்றி மீனக்கொடி கூறப்பட்டது. காம வெகுளி மயக்கங்களை முனிந்தவர்களாதலின் முனிவர் என்றூர். அவர்களுக்கு மன்மதன் பகைவன் என்றும் கூறுதல் மரபு. அம்மாபுபற்றி மாயை தோன்றியது முதலே இவ்வாசிரியர் மன்மதன் முனிவர்களை வெல்லுதற்குரிய சிறந்த வழியாகக்கொண்டு கூறி வருகிறூர் என்பதை அறிந்து இன்புறத்தக்கது. (58)

[மாயை மங்கைப்பருவ மடைந்தமை]

பாக மாகப் பொங்கியெழும்
பதமே போலப் பொங்குமெழில்
மோக மாயை தன்பருவ
முன்னிமுடிவேந் தயனு மால்
ஆகு மாடம் ஒன்றுபுரிந்
ததன்கட் கல்வி பற்பலவும்
போகு மாதர் பலர்சூழப்
போற்றி இருப்பச் செய்தனனல்.

[இ-ள்.] பாகமாக-பக்குவமாக, பொங்கி எழும்-பொங்கி எழுகின்ற, பதமேபோல-சோற்றைப்போல, பொங்கும் எழில்-அழகு பொங்குகின்ற வளர்ச்சியையுடைய, மோகமாயைதன்-கண்டவர்களை விரும்பச் செய்கின்ற மாயையினது, பருவம் உன்னி-மங்கைப்பருவத்தை நினைத்து, முடிவேந்தன்-தந்தையாகிய முடியுடைய மமகார அரசன், அயனும்-நான்முகனும், மாலாகும்-மயங்குதற்குரிய, மாடம் ஒன்று புரிந்து-மாளிகை ஒப்பற்றதாக செய்வித்து, அதன்கண்-அம்மாளிகையிடத்து, கல்வி பற்பலவும்-(கற்பிக்கப்பட்ட) நானாவித வித்தைகளையும், போகுமாதர் பலர்-முடிவு போகுமாறு கற்றுவல்ல மகளிர் பலரும், சூழ-சூழ்ந்து நிற்க, போற்றி இருப்ப-(அவர்களோடு) சிந்தித்து இருக்கும்படி, செய்தனன்-செய்தான். [எ-று.]

[கு-ரை.] ஆல், அசை. சோறு பக்குவமானதும் உண்பதற்குத் தகுதியானதே; அதேபோல் மாயையின் வளர்ச்சியும் நுகர்தற்குரியதாக ஆனது என்று கொள்ளக் கிடக்கிறது. இதனால் மங்கைப்பருவம் அடைந்தாளெனவும் அறிக. பற்பல வித்தைகள், அறுபத்து நான்கு கலைகள். போற்றி இருப்ப என்றதனால் முன்னரே கற்பிக்கப்பட்டது என்றும், இப்போது இவைகளை ஆராய்தல் என்றும் கொள்ள வைத்தார். வேந்து என்னும் சொல் குடிமை ஆண்மை என்ற தொல்காப்பிய நூற்பாவில் உயர்திணையாகக் கருதப்பட்டு ''நின்றாங்கிசைத்தல் இவண் இயல்பின்று'' என்பதால் காலம் முதலிய சொற்களைப் பிரித்து வேந்து செங்கோலன் என்று வரும் என்றார் ஆதலின் வேந்து செய்தனன் என்று வந்தது. (59)

[மாயை பொழுது போக்கு]

வேறு

வாய்த்துள அம்மணி மாடம் நண்ணுபு
பாத்தொடை பற்பல பயின்றும் தந்திரி
நாத்தனி யாழைமா ணுக்க னென்றுதான்
பேர்த்துளர் விரல்களால் பேசு வித்துமே.

[இ-ள்.] வாய்த்துள-(தனக்குத்) தகுந்ததாக அமைந்துள்ள, அம்மணிமாடம்-அந்த அழகிய மாடத்தை, நண்ணுபு-அடைந்து, பாத்தொடை-பாமாலைகள், பற்பல பயின்றும்-பல பலவைகளைப் பலகால் படித்தும், தந்திரி-நரம்பாகிய, நா-நாவையுடைய, தனியாழை-ஒப்பற்ற வீணையை, மாணுக்கன் என்று-தன்னுடைய மாணுக்கன் என்று பிறர் சொல்லும்படி, பேர்த்து-அசைத்து, உளர்-தடவுகின்ற, விரல்களால்-விரல்களினாலே, பேசுவித்தும்-(யாழைப்) பேசும்படி செய்தும். [எ-று.]

[கு-ரை.] பாத்தொடை பல பயிலல் என்பது வாயால் பாடியும் தான் பாடியதை விரல்களால் யாழையிசைத்துப் பாடச் செய்தலால் அதனை மாணுக்கன் என்றும் கூறினர். ஆசிரியன்முன் மொழிய மாணுக்கன் பின் மொழிவது இசைநூன் மரபாதலின் பயின்றும் பேசுவித்தும் பொழுது போக்கு நாள் என 64-ம் பாட்டில் ஈற்றடியோடு முடியும். தனியாழ் என்றமையின் பேரியாழ், மகரயாழ், செங்கோட்டியாழ், சகோடயாழ் என்னும் நால்வகையினுள் பேரியாழ் என்பது பெறப்படும். (60)

அங்கொரு மடவரல் அதிர்ப்பத் தண்ணுமை
மங்கையர் சிலரிசை மரபிற் பாடுறக்
கொங்கவிழ் மலரளி குமுறத் தென்றலாற்
பைங்கொடி அசைதல்போல் பாடி ஆடியும்.

[இ-ள்.] அங்கு ஒரு மடவரல்-அவ்விடத்து ஒரு மங்கை யானவள், தண்ணுமை-மத்தளத்தை, அதிர்ப்ப-முழக்காநிற்ப, மங்கையர்சிலர்-பெண்களில் சிலர், இசை-பண்கள், மரபின்-முறைமைப்படி, பாடுற-பாடாநிற்க, பைங்கொடி-பசுமையின் கொடியானது, கொங்கு-மணம், அவிழ்-விரிந்த, மலர்-மலரின் கண், அளி-வண்டுகள், குமுற-ஒலிசெயாநிற்க, தென்றலால்-தென்றற்காற்றினுல், அசைதல்போல-அசைகின்றதைப்போல, பாடி ஆடியும்-பாடிக்கொண்டு நடித்தும். [எ-று.]

[கு-ரை.] வண்டுகள் ஒலிப்பதைப்போல் பாடியும் கொடிகள் அசைதல் போல் ஆடியும் எனக்கொள்க இது நிரல் நிரையணியும், உவமையணியும் சேர்ந்து வந்தன. பைங்கொடி, பண்புத்தொகை. ஆடல், பாடல், யாழ் வாசித்தல், தண்ணுமை முழக்கல் முதலிய எல்லாம் பெண்களாலேயே நடைபெற்றன கன்னிமாடம் ஆதலின். (61)

வருமுலை யிறைக்கிணை யாக வந்துறக்
கரமெனு மேவலன் புடைக்குங் காட்சிபோல்
விரைமல ரோதிமேல் மிஞிறிரைந் தெழப்
பருமணி குயின்றமென் பந்த டித்துமே.

[இ-ள்.] வருமுலை இறைக்கு-வளர்கின்ற நகிலாகிய அரசனுக்கு, இணையாக-நேராக, வந்துற-வாராநிற்க, கரமெனும் ஏவலன்-கையாகிய (அவ்வரசனின்) பணியாளன், புடைக்கும்-அடித்துத் துரத்தும், காட்சிபோல்-தன்மையைப்போல, விரை மலர்-வாசனைபொருந்திய மலர் (அணிந்த) ஓதிமேல்-கூந்தலின் மேலே, மிஞிறு-வண்டுகள், இரைந்து-ஒலித்து, எழ-எழும்படி,

பருமணி-பருத்த முத்தினால், குயின்ற-அழுத்தி செய்யப்பட்ட, மென் பந்தடித்தும்-மெல்லிய பந்துகளை அடித்தும். [எ—று]

[கு-ரை.] மார்பிற்கு நேராக வருகிற பந்தினை அடிக்குங் காட்சியை முலையாகிய அரசனுக்கு நேராக முலையை ஒத்துள்ள பந்து வரக்கண்டு முலையரசனின் ஏவலாளன் போன்ற கைகள் விரட்டின என்று தற்குறிப்பேற்றுதலின் **தற்குறிப்பணி.** (62)

பூந்தொடை வார்குழல் புனைந்தும் நல்விரைச்
சாந்தமும் நானமும் தயங்கப் பூசியும்
ஏந்திழை பலவுறுப் பிசையத் தாங்கியும்
மாந்துறு சுவைபல வகைய மாந்தியும்.

[இ—ள்.] பூந்தொடை-மலர்மாலையை, வார்குழல்-நீண்ட கூந்தலில், புனைந்தும்-சூடியும், நல்விரை-நல்ல மணமுள்ள, சாந்தமும்-சந்தனத்தையும், நானமும்-கஸ்தூரியையும், தயங்க-விளங்கும்படி பூசியும், பல உறுப்பு இசைய-பல அங்கங்களுக்கும் பொருந்த, ஏந்து இழை தாங்கியும்-தாங்குதற்குத் தகுதியான அணிகளை அணிந்தும், மாந்து-குடித்தற்கு, உறு-பொருந்திய, சுவை பலவகைய-சுவையினையுடைய பலவகைப்பட்ட பானங்களை, மாந்தியும்-குடித்தும். [எ—று.]

[கு-ரை.] பூந்தொடை, மூன்றும் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை. (63)

தீங்கனி பாலொடு செம்பொன் பஞ்சரம்
தாங்குறு பைங்கிளி யூட்டித் தன்மொழி
ஆங்கது பயில்வுற அளித்துங் கற்பகப்
பூங்கொடி யனையவள் பொழுது போக்குநாள்.

[இ—ள்.] தீங்கனி-தித்திப்பான பழங்களை, பாலோடு-பாலொடு சேர்த்து, செம்பொன்-சிவந்த பொன்னாலாகிய, பஞ்சரம்-கூடுகள், தாங்குறு-தாங்கிக்கொண்டிருக்கிற, பைங்கிளி-பசுமையான நிறமுடைய கிளியை, ஊட்டி-உண்பித்து, தன் மொழி-தனது சொல்லினை, அதுபயில்வுற-அது கற்றுக்கொள்ளும்படி, அளித்தும்-(கற்றுக்)கொடுத்தும், கற்பகப்பூங்கொடி-கற்பக மலரையுடைய வல்லிபோல்பவள், பொழுது போக்கு நாள்-காலங்கழித்து வருகிறநாளில் (ஒருநாள்) [எ—று.]

[கு-ரை.] பைங்கிளியூட்டி இரண்டாம் வேற்றுமைத்**தொகை.** கற்பகத்தின் பூங்கொம்போ என்றார் பிறரும். ஆதலின் கற்பகப்பூங்கொடி என்

றார். ஆங்கு அசை "ஆங்க உரையசை கேண்மின் என்றாகும்" என்றா ராதலின். (64)

[மணத்தலைவனைத் தேர்தல்]

தென்னவன் செம்பியன் சேரன் கொங்கண
மன்னவன் மாளுவன் மகத நாட்டிறை
யென்னுமிங் கிவர்தமுள் யாவர் கண்ணதோ
கன்னிதன் மணவினைக் கடனென் றுன்னியே.

[இ—ள்.] தென்னவன்-பாண்டியன், செம்பியன்-சோழன், சேரன்-சேரவரசன், கொங்கண மன்னவன்-கொங்கண நாட்டரசன், மாளுவன்-மாளுவதேசத்தரசன், மகதநாட்டிறை-மகத நாட்டரசன், என்னும்-எனப்படுகின்ற, இங்கு-இவ்வுலகத்திலுள்ள, இவர் தம்முள்-இவர்களுக்குள், யாவர்கண்ணதோ-எவரிடத்தோ, கன்னிதன்-எனது புதல்வியாகிய மாயையினது, மணவினைக் கடன் என்று-திருமணத்திற்குரிய செய்தொழிற் கடமை என்று, உன்னி-நினைத்து. [எ—று.]

[கு-ரை.] எகாரம் ஈற்றசை. மமகார அரசனாதலின் தன் தகுதிக்கேற்ப வினைய அரசிளங்குமரர்களையே நாடலானான். (65)

ஆய்ந்திருந் தனன்மம காரன் ஆயிடைப்
போந்தனன் அவன்குரு வாகப் போற்றுறும்
சாந்தவாங் காரனும் தகுதிப் பேரினன்
வேந்தனும் எதிர்கொளீஇ விதியிற் றாழ்ந்தனன்.

[இ—ள்.] மமகாரன்-மமகார மன்னன், ஆய்ந்திருந்தன்-(மண மக்களைப்பற்றி) ஆராய்ந்திருந்தனனாக, அவன் குருவாகப் போற்றுறும்-அவ்வரசன் தனக்குக் குருவாக வழிபடுகின்ற, சாந்த ஆங்காரனும்-சாந்தத்தையுடைய அகங்காரனாகிய, தகுதிப் பேரினன்-தக்கதாகிய பெயரையுடையவன், ஆயிடை-அவ்விடத்து, போந்தனன்-வந்தான், வேந்தனும்-அம்மமகாரனும், எதிர்கொளீஇ-எதிர்சென்று அழைத்து, விதியில் தாழ்ந்தனன்-(பெரியோர்களை வணங்கும்) முறைப்படி வணங்கினான். [எ—று.]

[கு-ரை.] ஆ இடை ஆயிடை எனச் சுட்டு நீண்டது. யகர உடம்படு மெய் பெற்றது. "இடையுரி வடசொலின் இயம்பிய கொளாதவும்" என்ற புறனடையால் எதிர்கொளீஇ என்பது வந்தது. (66)

மன்னவன் வந்தனம் மரபிற் கொண்டவன்
கன்னிதன் எழில்நலம் காணப் போயினுன்
அன்னவள் எதிர்நடந் தாரி யன்றனைச்
சென்னியின் வணங்குபு சிறப்புச் செய்தனள்.

[இ—ள்.] அவன்-அந்த ஆசிரியன், மன்னவன்-மமகார அரசனுடைய, வந்தனம்-வழிபாட்டினை, மரபில்-முறைப்படி, கொண்டு-ஏற்று, கன்னிதன்-மாயையினது, எழில்-அழகிய வளர்ச்சியினையும், நலம்-நற்குணங்களையும், காண-காண்பான், போயினுன்-(அவளிருக்குமிடத்திற்கு) போயினுன், அன்னவள்-அந்த மாயையும், எதிர் நடந்து-எதிர் கொண்டுவந்து, ஆரியன்தனை - அவ்வாசிரியன்தனை, சென்னியால் - தலையால், வணங்குபு-வணங்கி, சிறப்பு-(பெரியோரைக்கண்டு செய்கிற சிறப்பாகிய) பூசை பலவற்றையும், செய்தனள்-செய்தாள். [எ-று.]

[கு-ரை.] எழில் என்பது நாளுக்குநாள் எழுகின்ற வளர்ச்சியோடு கூடிய உறுப்புக்கு காரணக்குறி. நலம் குணநலம். வடிவழகும் குணவழகும் சிறத்தல்பற்றி பிற்கூறினுர் முன்னதிலும் பின்னது வலியுடைத்து ஆதலின் ஆரியர் என்முர் பெரியோர்களை; பெரியோர்களை வணங்குதல் தொன்று தொட்டுவந்த மரபு. வணங்குபு என்பது செய்பு என்னும் வினையெச்சம் செய்தனன் என்னும் வினைகொண்டு முடிந்தது. (67)

மாந்தளிர் ஆலிலை வயங்கு கோங்கரும்
பேந்தெழின் மரைமலர் எய்தி அற்புதப்
பூந்துணர் வல்லிநேர் பொன்னைக் கண்டவன்
ஓர்ந்தனன் காரண மாதென் றுன்னியே.

[இ—ள்.] மாந்தளிர்-மாந்தளிரையும், ஆலிலை-ஆல இலையையும், வயங்கு-விளங்குகின்ற, கோங்கு அரும்பு-கோங்கினது அரும்பினையும், ஏந்து எழில்-தாங்குகின்ற அழகிய, மரைமலர்-தாமரை மலரினையும், எய்தி-அடைந்து, அற்புத-ஆச்சரியமாகிய, பூந்துணர்-பூங்கொத்தையுடைய, வல்லிநேர்-கொடியைப் போன்ற, பொன்னைக்கண்டு-செந்திருவைப் பார்த்து, அவன்-அவ்வாசிரியன், உன்னி-யோசித்து, காரணமாது-ஒரு காரணத்தால் தோன்றிய பெண்ணுவாள், என்று ஓர்ந்தனன்-என்று அறிந்துகொண்டனன். [எ—று.]

[கு-ரை.] மாந்தளிர்-கை, ஆலிலை-வயிறு, கோங்கரும்பு-நகில், மரைமலர்-முகம் என்று கூருது உவமையைக்கூறி பொருளைப் பெறவைத்தலான்

உருவாக உயர்வு நவிற்சியணி. மாந்தளிர் ஆலிலை கோங்கரும்பு மரைமலர் ஒருகொடியில் பூத்தல் இல்லை. பூத்ததாகக் கூறப்படுதல் அதிசயமானதால் அற்புதப்பூந்துணர் என்றனர். மரை-தாமரை, முதற்குறைப்பதம் "ஒருமொழி மூவழிக்குறைதலும் உரித்தே" என்றுராதலின். (68)

மாதுரு வுறுகுறி மதித்த றிந்தவன்
ஆதர வொடுமுடி அரசை நோக்கிநின்
கோதையை யார்கொலோ தோளிற் கொள்பவர்
ஓதுக என்றலும் உரைத்தல் மேயினான்.

[இ-ள்.] மாது-மாயையினது, உரு-வடிவத்தில், உறு-பொருந்திய, குறி-அடையாளத்தை, மதித்து-சிந்தித்து, அறிந்தவன்-தெரிந்துகொண்ட அவ்வாரியன், முடி அரசை-முடி அணிந்த மமகார அரசனை, ஆதரவோடு நோக்கி-அன்போடு பார்த்து, நின் கோதையை-நினது மகளை, தோளில் கொள்பவர்-கைபற்றி மணந்துகொள்பவர், யார் ஓதுக-எவர் சொல்லுக, என்றலும்-என்று ஆரியன் கேட்ட மாத்திரத்து, உரைத்தல் மேயினான்-(அரசனும்) சொல்லத் தொடங்கினான். [எ-று.]

[கு-ரை.] குறி அடையாளம். பெண்கள் அங்க இலக்கணத்தை அறிந்து சொல்லலும், கைரேகை அறிந்து சொல்லலும் ஆகும். கோதை கூந்தல் அதனையுடைய மாயைக்கு ஆயிற்று ஆகுபெயர். தோள் என்பது கை, கை பிடித்தல் இதனைப் பாணிக்கிரகணம் என்பார் வடநூலார். (69)

உணர்ந்திலன் அடியனேன் ஒருநங் கோதைதன்
மணந்தனக் குரியவர் மனிதர் வானவர்
கணங்களுள் ஒருவரைக் கருத்தில் தேர்ந்துநீ
இணங்குற எனக்கிவண் இயம்பு கென்றனன்.

[இ-ள்.] அடியனேன்-அடியேன், உணர்ந்திலன்-தெரிகின்றிலேன், மனிதர்-மனிதர்களுள்ளும், வானவர் கணங்களுள்-தேவரது கூட்டங்களுள்ளும், ஒரு-ஒப்பற்ற, நம் கோதை தன்-நமது பெண்ணினது, மணந்தனக்கு உரியவர்-திருமணத்திற்கு உரியவராகிய, ஒருவரை-ஒரு மணாளனை, நீ கருத்தில் தேர்ந்து-நீ திருவுளத்தில் ஆய்ந்து, எனக்கு-எனக்கு, இணங்குற-பொருந்த, இவண் இயம்புக என்றனன்-இங்கே சொல்லுக என்று கூறினான். [எ-று,]

[கு-ரை.] மனிதர் வானவர் எனும் இரண்டிற்கும் கணங்கள் என்பதைக் கூட்டிப் பொருள் கொள்ளலும் ஆம். (70)

கொங்கவிழ் தொடையினுய் கூன்கொக் கன்றுவான்
கங்கையை அடைவது கடவுள் அன்னமே
மங்கையை அணைபவர் மனிதர் அல்லர்தம்
சங்கர னேயிவள் தலைவ னென்றனன்.

[இ-ள்.] கொங்கு-மணம், அவிழ்-விரிந்த, தொடையினுய்-மாலையையுடைய அரசனே, வான் கங்கையை அடைவது-ஆகாயத்திலுள்ள கங்கையைச் சேர்வது, கூன் கொக்கு அன்று-கூனையுடைய கொக்கு அன்று, கடவுள் அன்னமே-தெய்வத் தன்மை பொருந்திய அன்னப்பறவையேயாம், மங்கையை-மாயையை, அணைபவர்-சேரவல்லவர், மனிதர் அல்லர்-மனிதராகமாட்டார், நம் சங்கரன்-நமது இறைவனே, இவள் தலைவன்-இவளது நாயகன், என்றனன்-என்று கூறினுன். [எ-று.]

[கு-ரை.] உவம உருபு இல்லாது பொருளையும் உவமையும் தனித் தனிக் கூறினமையின் எடுத்துக் காட்டு உவமையணி. (71)

மாலுநான் முகனுநா டரிய வள்ளலிவ்
வேலவார் குழலினுட் கெளிய னேயெனு
ஆலமார் மிடற்றினேன் அன்பர் வேண்டிய
கோலமாய் நணுகுமீ துண்மைக் கூற்றென்ருன்.

[இ-ள்.] மாலும் - திருமாலும், நான்முகனும் - அயனும், நாடு அரிய-தேடற்கு அரிதாகிய, வள்ளல்-வேண்டுவார்-வேண்டியதை வரையாது கொடுக்கும் இறைவன், இவ்-இந்த, ஏலம்-மணம்மிக்க சாந்தம் பூசிய, வார்-நீண்ட, குழலினுட்கு-கூந்தலையுடைய மாயைக்கு, எளியனே-எளிதாகக்கிடைக்கும் தன்மையையுடையனுவனே, என-என்று அரசன் சொல்ல, (ஆசிரியன்) ஆலம்-விஷம், ஆர்-பொருந்திய, மிடற்றினுன்-கழுத்தையுடைய இறைவன், அன்பர்-அன்புமிக்க அடியார்கள், வேண்டிய-விரும்பிய, கோலமாய்-வடிவமாக, நணுகும்-அண்மைக்கண் அணுகுவான், இது-இச்செய்தி, உண்மைக்கூற்று-மெய்ம்மையான சொல், என்ருன்-என்று சொன்னுன். [எ-று.]

[கு-ரை.] நாடு+அரிய=நாடரிய "உயிர்வரின்" என்பதும் "உடல்மேல் உயிர்வந்து ஒன்றுவது இயல்பே" என்பதும் விதி. "நெடிலோடு உயிர்த்தொடர்க் குற்றுகரங்களுள் டற வொற்றிரட்டும் வேற்றுமை மிகவே" என்பதால் மிடறு+இன் மிடற்றின் என்ருகி ஆன் என்பது சேர மிடற்றினுன் என ஆகி "பெயர் வினையிடத்து னளரய ஈற்றயல் ஆ, ஓ ஆகலும் செய்யுளுள் உரித்தே" என்றபடி மிடற்றினேன் என ஆயிற்று. (72)

இன்னணம் அரசனோ டியம்பி மாயையாங்
கன்னியை விளித்தவள் கருத்தி ணங்குற
செந்நிலை தனையுப தேசித் தேகினன்
தன்னிகர் குருபரன் தனதிடத் தரோ.

[இ-ள்.] இன்னணம்-இந்த விதமாக, அரசனோடு-வேந்தனோடு, இயம்பி-சொல்லி, மாயையாங்கன்னியை-மாயையாகிய பெண்ணினை, விளித்து-அழைத்து, அவள் கருத்து-அவளது மனதிற்கு, இணங்குற-பொருந்த, செந்நிலைதனை-செவ்வையான விரதங்களை, உபதேசித்து-உபதேசம் செய்து, தன்னிகர் குருபரன்-தன்னைத்தானே ஒத்த தேசிகனாகிய மேலானவன், தனதிடத்து-தன் இருப்பிடத்திற்கு, ஏகினன்-சென்றான். [எ-று.]

[கு-ரை.] அரோ-அசை. செந்நிலை-செம்மையான பரம்பொருளைச் சேர்தற்குரிய நிலைகள், தீக்ஷை முதலியன. (73)

குருவருண் மொழிநெறி கொண்டு மாயைதான்
வரவன வசைநகர் மதுகை நாதனை
பரவினள் அருச்சனை பயின்று பூசனைக்
கருவிகள் முழுவதும் கடைப்பிடித் தரோ.

[இ-ள்.] மாயைதான்-மாயையானவள், குரு-ஞானாசிரியனது, அருள்மொழி-உபதேச மொழியின், நெறிகொண்டு-வழியைப் பின்பற்றி, வரவன, வசைநகர்-மேலான வனவசை நகரிலுள்ள, மதுகைநாதனை-மதுகேசனை, பூசனை-பூசித்தற்குரிய, கருவிகள்-துணைப்பொருள்கள், முழுவதும்-குறைவில்லாமல், கடைப்பிடித்து-தேடி சேர்த்துக்கொண்டு, அருச்சனை பயின்று-பூசனை முதலியன செய்து, பரவினள்-வழிபட்டாள். [எ-று.]

[கு-ரை.] வனவசை நகரிலுள்ள இறைவன் பெயர் மதுகைநாத ஈஸ்வரர் என்பது. பூசனைக்கருவிகள் நீராட்டுதற்குரியன, அருச்சனைக்குரியன புகைத்தற்குரியன, சுடர்காட்டற்குரியன, நைவேத்தியத்திற்குரியன எனப் பலவும் ஆம். (74)

மாயையின் உற்பத்தி கதி முற்றிற்று.

---

நான்காவது

## மாயை பூசை கதி

[மாயையானவள் வனவசை நகரின்கணுள்ள மதுகை நாதனுகிய இறையைப் பூசை செய்கிற ஒரு நாளின் தன்மையை விரித்துக் கூறும் பிரிவு என்று பொருளாகும்.]

[கலி நிலைத்துறை]

பதியை மேவுறுங் காதனெஞ் சகத்தினுட் பதித்து
மதுகை நாதனை வரன்முறை வரிவிழி மாயை
உதய காலையில் பூசைசெய் நாள்களு ளொருநாள்
விதியை ஓதுவன் குவிமனத் தவர்கொள விரித்து.

[இ—ள்.] வரிவிழி மாயை-வரிபரந்த கண்களையுடைய மாயையானவள், பதியை-தகுந்த மணமகனை, மேவுறும்-அடையவேண்டும், காதல்-விருப்பத்தினை, நெஞ்சு அகத்தினுள்-தனது உள்ளத்தின்கண், பதித்து-இருக்கவைத்து, மதுகை நாதனை-மதுகேசுரனை, வரன்முறை-மேன்மையான விதிப்படி, உதயகாலையில்-அருணன் தோன்றுகிற காலத்தில், பூசைசெய் நாள்களுள்-பூசை செய்கின்ற நாட்களுக்குள், ஒருநாள்-ஒருநாள், விதியை-(செய்கின்ற) முறையை, குவிமனத்தவர்கொள-குவிந்த மனத்தையுடைய சான்றோர் கொள்ளும்படி, விரித்து-விவரித்து, ஓதுவன்-(யான்) சொல்லுவன். [எ—று.]

[கு-ரை.] வரிவிழி மாயை என அடை சினைமுதல் மூன்றும் முறையாக வந்தன "அடை சினை முதல் முறை அடைதலும்" என்ற விதிப்படி. ஓதுவன் என்பதில் அன்விகுதி தன்மைக்கண் வந்தது. யான் தோன்றா எழுவாய். (1)

[ஞாயிறு தோற்றம்]

விதுவைச் சேய்மையிற் கண்டலர் குவளைகள் மெலிய
முதிர்விற் பூணிள முலையெழில் மாயைதன் முகமா
மதியைச் சேர்தரு வரிக்கருங் குவளைகள் மலரக்
குதிரைத் தேரவன் எழுந்தனன் குணதிசைக் குன்றில்.

[இ—ள்.] விதுவை-திங்களை, சேய்மையில்-தூரத்தில், கண்டு-பார்த்து, அலர்-மலர்கின்ற, குவளைகள்-நீலோற்பலங்கள், மெலிய-வாடவும், முதிர்வில்-மிகுந்த ஒளி பொருந்திய, பூண் இள முலை-அணிகள் அணிந்த இளமையான முலைகளை

யுடைய, எழில் மாயைதன்-அழகு பொருந்திய மாயையின்-முக மாம் மதியை-முகமாகிய திங்களை, சேர்தரு-சேர்ந்த, வரிக்கண் கருங்குவளை-வரி பொருந்திய கண்களாகிய நீலோற்பலங்கள், மலர - மலரவும், குதிரைத்தேரவன் - பச்சைக்குதிரைகட்டிய தேரையுடைய சூரியன், குணதிசைக்குன்றில்-கிழக்குத் திசைக் கண் உள்ள உதய மலையில், எழுந்தனன்-தோன்றினான். [எ-று.]

[கு-ரை.] வரிக்கண் கருங்குவளை உருவகம். மதியைத் தூரத்தில்கண்டு அலர்கின்ற குவளையை வாடச்செய்யும் தன்மையுடைய சூரியனும் மதியின் அண்மையில் உள்ள குவளையை மலரச் செய்தானென்று கூறுவது பெரியாரைச் சார்ந்தார் பகைவருக்கு அஞ்சார் என்னும் பொருள் தோன்றக் கிடக்கின்றது. கருடனைக்கண்டு அஞ்சவேண்டிய பாம்பும் இறைவன் சடையில் இருக்குங்கால் அஞ்சுவதில்லை என்று பிறிதோரிடத்தில் இவர் கூறியதினாலும் இப்பொருள் விளங்கும். சூரியோதய காலத்தில் குவளைகள் கூம்புதலும் துயில்வோர் துயில் நீத்து கண் விழித்தலும் இயற்கை. இதனை ஆசிரியர் கற்பித்துக் கூறுகிறார் ஆதலின் தற்குறிப்பேற்ற அணி. மெலிய மலர என்னும் செயவெனெச்சங்கள் எழுந்தனன் என்னும் பிறகருத்தாவினை கொண்டு முடிந்தன. (2)

அனைய காலையி லன்னமென் தூவிபெய் யணைமேல்
தனியள் மாமயில் போல்துயின் றவள்துயில் தணந்து
வினையி னன்மலி மஞ்சனச் சாலையுள் மேவி
இனிய வாசநீர் ஆடினள் சேடியர் ஏந்த.

[இ-ள்.] அனையகாலையில்-அப்போது, அன்னம்-அன்னத்தினது, மென்தூவி-மென்மையான இறகுகளை, பெய்-பதமாக்கியமைக்கப்பட்ட, அணைமேல்-படுக்கையின்மீது, தனியள்-தனிமையுடையளாய், மாமயில்போல்-பெருமை பொருந்திய மயிலைப்போல், துயின்றவள்-தூங்கினவளாகிய மாயையானவள், துயில் தணந்து-தூக்கத்தினின்றும் நீங்கி (விழித்து எழுந்து), வினையினால் மலி-தொழிற்பாடு நிறைந்த, மஞ்சனச் சாலையுள்-குளித்தற்குரிய அறையுள், மேவி-சென்று, சேடியர்-தோழிகள், இனியவாசநீர்-இனிமையான மணம் வீசுகின்ற, நீரினை, ஏந்த-எடுத்துக்கொடுக்க (மொண்டுகொடுக்க), ஆடினள்-குளித்தாள். [எ-று.]

[கு-ரை.] குளிக்கும் அறை பலவித வேலைப்பாடுகளையுடையதென்றுவது குளித்தற்குரிய பொருள்கள் பலவற்றையும்கொண்டது என்றுவது கொள்க. அன்னத்தின் மென்மையான இறகுகளை உள்ளீடாக வைத்துத் தைக்கப்பட்ட மெத்தை உடலுக்கு நன்மை தரும். (3)

விலைவ ரம்பறி யாமணிக் கோவைசூழ் விளிம்பு
கலைய ணிந்தொரு தலைமுலை மேலலங் கரித்தாள்
முலையொடுந் துகில் கண்டநாண் முதற்றொடர்ந் தன்றே
இலகு றுங்கலை வல்லவர் கடபடாம் என்றல்.

[இ-ள்.] விலை வரம்பு அறியா-விலை இவ்வளவு என்று மதித்து அறியப்படாத, மணிக்கோவைசூழ் - இரத்தினக் கோவைகள் சூழ்ந்த, விளிம்பு-கரையையுடைய, கலை அணிந்து-பட்டாடையை உடுத்தி, ஒருதலை-அதன் ஒரு பக்கமாகிய முன்றானையை, முலைமேல் அலங்கரித்தாள்-முலைமீது அழகு பெறும்படியாக அணிந்தாள், முலையொடும்-முலைகளோடு, துகில்-ஆடையினைக், கண்டநாள்-பார்த்தநாள், முதல் தொடர்ந்தன்றே-முதல் தொடங்கியதிலிருந்தன்றே, இலகுறும் கலைவல்லவர்-கற்றதால் விளக்கமுறும் தருக்கநூல் வன்மையுடையார், கடபடாம் என்றல்-கடபடாம் என்று உதாரணம் கொடுத்தல். [எ-று.]

[கு-ரை.] கடபடா நியாயம் என்பது தர்க்கத்தில் கூறப்படும் நியாயங்களில் ஒன்று. கடம்-குடம், படம்-ஆடை. இவ்விரண்டும் வெவ்வேறு காரணங்களாலான வேறு வேறுபொருள்களாயினும் கடபடாம் என்ற சொற்றொடர் கருதி ஒன்றாக எண்ணுவது என்பது மரபு. முலையைக் கடம் என்றும் ஆடையைப் படம் என்றும் கூறி இரண்டும் சேர்ந்துள்ளமை கருதி தர்க்கர் கடபடாம் என்னும் நியாயம் கூறுவார் என்றது தற்குறிப்பேற்றம். முலைக்கு ஏற்ப தலை என்று உறுப்பின் பெயர் வந்தது ஆயினும் அப்பொருள் தரவில்லை. (4)

மணிய மைந்தபொன் பாதுகை ஒருத்திமுன் வைப்ப
பிணிய விழ்ந்தசெந் தாமரைப் பதங்கொடு பெயர்ந்தே
அணிய ணிந்திடு மண்டபத் தணைமிசை யமர்ந்தாள்
பணிய ணிந்திடும் மங்கையர் அடைந்தனர் பலரே.

[இ-ள்.] ஒருத்தி-ஒரு தோழியானவள், மணியமைந்த-அழகு பொருந்திய, பொன் பாதுகை-பொன்மயமாகச் செய்யப்பட்ட மிதியடிகளை, முன்வைப்ப-கொண்டுவந்து முன்னர் வைக்க, பிணி அவிழ்ந்த-கட்டு நீங்கிய, செந்தாமரைப் பதம்-செந்தாமரை மலர்போன்ற பாதங்களை, கொடு-மாட்டிக் கொண்டு, பெயர்ந்து-நடந்துசென்று, அணி-ஆபரணங்களை, அணிந்திடும்-அணிந்துகொள்ளுதற்குரிய, மண்டபத்து-மண்டபத்தின்கண் உள்ள, அணைமிசை-பீடத்தின்கண், அமர்ந்தாள்-விற்றிருந்தனள், மணி-ஆபரணங்களை, அணிந்திடும்-புனைவிக்கின்ற, மங்கையர்-தோழிப்பெண்கள், பலர் அடைந்தனர்-பல பேர்கள் அங்கு வந்து சேர்ந்தனர். [எ-று.]

[கு-ரை.] செந்தாமரை இனம்உடைய அடைமொழி, பண்புத் தொகை. செந்தாமரைப்பதம்-உவமையணி. மென்மையும் செம்மையும் பற்றி விவரிக்கப்பட்டது. (5)

மார வேள்சிலை வளைந்திடப் பூட்டிய வண்டு
நாரி யோர்தலை நெகிழ்த்துவிட் டெனவொரு நாரி
கார வாமலர்க் குழற்சடை கைபுனைந் தியற்றி
வீர வேனெடுங் கண்ணிதன் முதுகுற விடுத்தாள்.

[இ-ள்.] மாரவேள்-மன்மதன், சிலை-வில், வளைந்திடப் பூட்டிய-வளையும்படி பூட்டப்பெற்ற, வண்டு-வண்டாகிய, நாரி-நாணியின், ஓர் தலை-ஒரு பக்கமாக (கீழ்க்குதையை) நெகிழ்த்து-அவிழ்த்து (குறையினின்றும் கழற்றி), விட்டென-விட்டதைப் போல, ஒரு நாரி-ஒரு பணிமகள், கார் அவா-கருமையும் விரும்பத்தகுந்த, மலர்க்குழல்-மலரையுடைய கூந்தலை, கைபுனைந்து சடை இயற்றி-கையாற் பின்னி அலங்காரமாகப் பின்னுதலைச் செய்து, வீரவேல்-வெற்றிவேலை ஒத்த, நெடுங்கண்ணிதன்-நீண்ட கண்ணையுடைய மாயையின், முதுகுஉற விடுத்தாள்-முதுகிற் றொங்கும்படி விட்டனள். [எ-று.]

[கு-ரை.] மாரவேள் மீமிசைப்பதம் (ஒருபொருட் பலபெயர் சிறப்பினின் வழா என்பது விதி) இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. இரண்டாம் அடியில் முதல் நாரி நாணையும் கடைசி நாரி பெண்ணையும் குறித்து நின்றது. கார் அவா, மேகமும் விரும்பும் கருமை என்றும் கொள்ளலாம். கார் அவா குழல் மலர்க்குழல் எனத் தனித்தனி கூட்டுக. 'வண்டு நாரி' என்பது பண்புத்தொகை. (6)

[சூரிய சந்திர பிறை அணிதல்]

பின்னும் வேணிவார் குழலெனும் கரிய பேரரவம்
முன்னம் ஆர்தரு சுடர்களை உமிழ்ந்திடு முறைபோல்
கன்னி வாணுதல் மிசைக்கதிர் பிறையொடு கவினப்
பொன்ன வாஞ்சுணங் கவிர்முலை ஒருத்திகை புனைந்தாள்.

[இ-ள்.] பொன் அவாம்-பொன்னும் விரும்பும் நிறமுடைய, சுணங்கு-தேமலால், அவிர்-விளங்குகின்ற, முலை ஒருத்தி-நகிலையுடைய ஒரு சேடியானவள், பின்னும் வேணி-பின்னி விடப்பட்ட சடையாகிய, வார்குழல்-நீண்ட கூந்தல், எனும் கரிய பேர் அரவம்-என்று சொல்லப்படுகின்ற கருமையாகிய பெரிய பாம்பானது, முன்னம் ஆர்தரு சுடர்களை-முன்னால் விழுங்கப்பட்ட சூரிய சந்திரர்களை, உமிழ்ந்திடு முறை

போல்-உமிழ்ந்துவைத்த தன்மையைப்போல, கன்னி-மாயையினது, வாள் நுதல்-ஒளிபொருந்திய நெற்றியின், மிசை-மேலே, கதிர் பிறையோடு-சூரிய பிறை சந்திரபிறை என்று சொல்லப்படுகிற அணிகளை, கவின-அழகுற, கைபுனைந்தாள்-ஒப்பனை செய்தாள். [எ-று.]

[கு-ரை.] திருமால் மோஹினி அவதாரங்கொண்டு பாற்கடலில்வந்த அமுதத்தை தேவர்களுக்குப் பகுந்தளிக்கும்போது அசுரன் ஒருவன் வடிவமாறி உண்டதாகவும், அதனைச் சூரியர் சந்திரர் இருவரும் கோள்மூட்டியதாகவும், அதனால் மோஹினி பங்கிட்ட சட்டுவத்தால் அவன் தலையைத் துணித்துவிட்டதாகவும், அமுதம் உண்ட காரணத்தால் துணிக்கப்பட்ட உடலுக்குப் பாம்பின் தலையும், தலைக்கு பாம்பின் வாலுமாக வளர்ந்துவிட்டதாகவும், அவர்கள் தாம் கேது, இராகு என்பவர்கள் என்றும், அவர்கள் அதற்குப் பதிலாக சந்திர சூரியர்களை விழுங்கி உமிழ்வதாகவும் புராண வரலாறு. அதைப்போல குழலை அரவமாகவும், சூரிய சந்திரனைப்போல் செய்யப்பட்ட அணிகளை சூரிய சந்திரராகவும் தற்குறிப்பேற்றம்செய்து உவமை கூறியதால் **தற்குறிப்பேற்ற உவமையணியாகும்.** ஒருத்தி பிறைபோல் நுதல் மிசைக்கவினப் புனைந்தாள் என வினைமுடிவு செய்க. கவின என்னும் செயவென்னெச்சம் புனைந்தாள் என்னும் பிற கருத்தாவினை கொண்டு முடிந்தது. ஒடு உருபு உடனிகழ்ச்சிப்பொருளில் வந்தது அன்றி அசையெனலும் ஆம். (7)

[சுட்டியணிதல்]

ஓதி யாகிய அறல்மிசைச் சுவடுற ஊர்ந்து
தீதி லாதவெண் சந்தனத் திலகவெண் மதிக்குப்
போது மோர்சிறு பாம்பென மயிர்வகிர்ப் பொருந்தச்
சோதி மாமணிச் சுட்டியொன் றொருத்திதூக் கினளால்.

[இ-ள்.] ஒருத்தி-ஒரு தோழியானவள், தீது இலாத வெண்சந்தனம் திலக வெண்மதிக்கு-குற்றம் இல்லாத சந்தனத்தால் அமைக்கப்பட்ட பொட்டாகிய வெண்மையான திங்களைக் கவருதற்கு, ஓதியாகிய-கூந்தலாகிய, அறல்மிசை-கருமணலின் மேல், சுவடு உற-வடு உண்டாக, ஊர்ந்து-சென்று, போதும்-செல்லுகின்ற, ஓர் சிறு பாம்பு என-ஒரு சிறிய பாம்பைப்போல, மயிர் வகிர்ப்பொருந்த-மயிர் வடுவிலே பொருந்தும்படி, சோதி-ஒளி விளங்குகின்ற, மா-பெருமை பொருந்திய, மணிச்சுட்டி-மாணிக்கம் இழைத்த சுட்டி, ஒன்று-ஒன்றினை, தூக்கினள்-தொங்கவிட்டனள். [எ-று.]

[கு-ரை.] கருமணல்மேல் சிறு பாம்பு ஊர்ந்து சிறு மதியைப் பிடிக்கப் போவதைப்போல சுட்டியணிந்தாள். கருமணல் கூந்தலுக்கும், சுவடு வகிருக்கும், சிறுசுட்டி பாம்பிற்கும், சந்தனப்பொட்டு சிறுமதிக்கும் உவமை. பாம்பு என்பதற்கேற்ப மாணிக்கச் சுட்டி என்றார். உருவகத்தை அங்கமாகக் கொண்டுவந்த நற்குறிப்பேற்றவணி. ஆல்—அசை. போதும் பெயரெச்சம். இலாத எதிர்மறைப்பெயரெச்சம். சந்தனம் என்னும் பெயர் கொண்டது. மணிச்சுட்டி மூன்றும் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்க தொகை. (8)

[குவளைமலர் அணிதல்]

வேன லம்பதி கொலைவிடம் மூட்டிய வெவ்வேல்
மான அஞ்சனம் எழுதிய விழிபொர வரலால்
தான தன்பகை தனைத்துணை கொண்டுறுந் தகைபோல்
பான லஞ்செவி மிசையணிந் தனளொரு பாவை.

[இ-ள்.] ஒரு பாவை-ஒரு தோழியானவள், வேனலம்பதி-மன்மதனது, கொலைவிடம்-கொல்லுதல் அமைந்த நஞ்சினை, ஊட்டிய-பூசப்பட்ட, வெவ்வேல்-கொடிய வேலை, மான-ஒப்ப, அஞ்சனம்-மை, எழுதிய விழி-இடப்பட்ட கண்ணனது, பொர-(தன்னோடு) போர்செய்ய, வரலால்-வருதலினாலே, அதன் பகைதனை-அக்கண்ணின் பகைவனை குவளை மலரை, தான் துணை கொண்டுறும்-தான் படைத்துணையாகச் சேர்த்துவைத்திருக்கும், தகைபோல்-தன்மைபோலத் தோன்றும்படி, பானல்-குவளை மலரை, அஞ்செவிமிசை-அழகிய காதின்மேல், அணிந்தனள்-சூடினாள். [எ—று.]

[கு-ரை.] வேனில் வேந்தன் என்று மன்மதனைக் கூறுகிற மரபாம் ஆதலின் வேனலம்பதி என்றார். விடம் பூசிய வேல் மை எழுதப்பட்ட கண்ணிற்கு உவமை. குவளையைக் கண்ணுக்கு உவமை கூறும் காரணம்பற்றிக் கண்ணுக்குப் பகையென்றார் குவளையினை. பகைவன் தன்னிடத்துப் போர் செய்ய வருங்கால் அவன்பகைவனை தனக்குத் துணையாகச் சேர்த்துக்கொள்ளுதல் உலகியற்கையாதலால் உலக நவிற்சியணியை அங்கமாகக்கொண்டு வந்த தற்குறிப்பேற்றம். ஆடவர்களை உயிரை வாங்கும் தன்மையையுடையது மகளிரது மையுண்ட கண். அக்கண்ணை மன்மதனது விடமபூசப் பெற்ற வேல் என்றார். பாவை-உவமையாகுபெயர். பகை—பண்பாகு பெயர். "அகமுனர்ச்செவிகைவரி னிடையன கெடும்" என்றாராதலின் அகம் செவி அம்செவி என்றாகி, "மவ்வீறு ஒற்றழிந்து உயிரீறு ஒப்பவும் வன்மைக்கு இனமாத்திரிபவும் ஆகும் என்றதால் அஞ்செவி" என ஆயிற்று. (9)

[காதணி அணிதல்]

அடுத்து மாதவம் அழிமின்என் றனங்கவேள் தமக்கு
விடுத்த வோலையைக் கண்கள்தம் மேற்பழி விளம்பில்
கொடுத்த வேண்மிசை நிந்தைகூ றுதற்குவைத் திருத்தல்
கடுத்து வாழ்தர ஒருத்திபொன் னோலைகா தணிந்தாள்.

[இ—ள்.] ஒருத்தி-ஒரு தோழியானவள், அடுத்து-துறந்தவர்களை அண்மி, மாதவம்-பெரிய தவத்தை, அழிமின்-அழியுங்கள் என்று, அனங்கவேள்-மன்மதன், தமக்கு-தங்களுக்கு, விடுத்த-அனுப்பிய, ஓலையை-ஓலைச்சுருள்களை, கண்கள்-கண்களானவை, தம்மேல்-தங்களின்மீது, பழி விளம்பில்-நிந்தை சொல்வார்களானால், கொடுத்து-(அவ்வோலையை நிந்தைசொல்பவர்களது கையில்) கொடுத்து, அவ்வேள்மிசை-அந்த மன்மதன்மேல், நிந்தை கூறுதற்கு-பழி சொல்வதற்கு, வைத்திருத்தல் கடுத்து-தம்பக்கல் வைத்திருப்பதை ஒத்து, வாழ்தர-தோன்றும்படி, பொன்னோலை-பொன்னால் செய்யப்பட்ட ஓலைச்சுருள்களை, காது-காதுகளினிடத்தே, அணிந்தாள்-தரித்தாள்.
[எ—று.]

[கு-ரை.] மாதவம் என்றதற்கேற்ப துறவோரை அடுத்து என்று கூறப்பட்டது. பனைமரத்தின் இலையை ஓலை என்றல் மரபு. அதனைச் சுருள் செய்து காதில் அணிவது. அதனால் காதணியை ஓலைஎன்றது காரணக் குறி. அதன் வடிவமாகப் பொன்னால் செய்தவோலையும் அப்பெயர் கூறுதல் மரபு. தோடு என்றதும் அதுபற்றியே. அழிமின் என்பதில் மின் முன்னிலை ஏவல் விகுதி, அனங்கவேள், "ஒரு பொருள் பன்மொழி சிறப்பினின் வழா" என்ற விதிப்படி ஒரு பொருள்மேல் இரு பெயர் வந்தது; மீமிசைப்பதம் என்பர். (10)

[மூக்கணி அணிதல்]

தன்னை நிந்தைசெய் வெண்ணகை மேற்பழி சார
மன்னி யங்கது நிகரற வாழ்மனை வாய்தன்
முன்னி றந்திடு வேனென ஞான்றுகொண் முறைமை
யென்ன வெண்மணி மூக்கணி ஒருத்திநின் றிட்டாள்.

[இ—ள்.] ஒருத்தி-ஒரு தோழியானவள், தன்னை நிந்தைசெய்-தன்னை இகழ்கின்ற, வெண்நகைமேல்-வெள்ளிய நகையின்மேல், பழிசார-இகழ்ச்சி அடையும்படி, மன்னி-நிலைபெற்று, அங்கு அது-அந்த பல்லானது, நிகர்-ஒப்பு, அற-இல்லாதபடி, வாழ்-வாழ்கின்ற, மனைவாய்தன் முன்-வீடாகிய வாயின்

முன்னே சென்று, இறந்திடுவேன் என-சாவேன் என்று, ஞான்று கொள்முறைமை என்ன-ஞான்று கொள்ளுகிற தன்மையைப்போலத் தோன்றும்படி வெண்மணி-வெள்ளிய முத்தானது கோர்க்கப்பட்ட, மூக்கணி-மூக்கில் அணியும் (புலாக்கு) மூக்கணியை, நின்று இட்டாள்-அண்மையினின்று அணிந்தாள். [எ—று.]

[கு-ரை.] நகை என்பது ஆகு பெயர். உலகில் ஒருவருக்கு ஒருவர் இகழ்ச்சியை உண்டாக்கினால் இகழ்ச்சியடைந்தார் மானம் பொறாது இகழ்ச்சிக்குக் காரணமானவர் வீட்டின்முன் சென்று நாணுக்கொண்டு உயிர் விடுதல் வழக்கம். அதன்படி முத்துக்கள் பற்களால் இகழப்பட்ட காரணத்திற்காக பற்களின் வீட்டுக்கு முன்னால் நாணுக்கொண்டு இறந்ததைப்போல தொங்கின என்று தற்குறிப்பேற்றம் கூறினார் ஆசிரியர். முத்துப்போன்றன என்று உவமையாகக் கூறப்படவேண்டிய பற்கள் உவமையாக்கப்பட்டு பொருளாக முத்தினைக் கூறப்பட்டதால் முத்துக்கள் பற்களால் இகழப்பட்டன என்று கூறப்பட்டது. ஞான்று கொள்ளுதல் நாணுக்கொள்ளுதல் என்பதாகும். (11)

[கழுத்தணி அணிதல்]

கற்றை யங்குழல் நறுமலர்த் தொடையொடு கனமா
யுற்ற ணங்குமென் றிலகுபூண் பிடித்ததை யொப்ப
விற்ற யங்குவா ணுதலெழின் மாயைதன் மிடற்றிற்
பொற்ற டந்தகட் டணியொரு மடவரல் புனைந்தாள்.

[இ—ள்.] ஒரு மடவரல்-ஒரு மடப்பம் அமைந்த தோழியானவள், கற்றை-கற்றையாக உள்ள, அம்குழல்-அழகிய கூந்தலானது, நறுமலர்-நல்ல மணம் பொருந்திய மலர்களாலான, தொடையொடு-மாலையோடு, கனமாய்-பாரமாய், உற்று-அடைதலாலே, அணங்கும் என்று-(கழுத்து) வருந்தும் என்று, இலகு பூண்-விளங்காநின்ற பொன்னாலான பூணை, பிடித்ததை-சேர்த்ததை, ஒப்ப-ஒக்கும்படி, வில்-வில்லைப்போல, தயங்கும்-விளங்காநின்ற, வாள் நுதல் எழில்-ஒளி பொருந்திய நெற்றியையுடைய அழகிய, மாயைதன்-மாயையினுடைய, மிடற்றில்-கழுத்தில், பொன்-பொன்னாலான, தகட்டு-பரப்பையுடைய தகடாகிய, அணி-ஆபரணத்தினை, புனைந்தாள்-தரித்தாள். [எ—று.]

[கு-ரை.] மேலுள்ள பாரத்தைத் தாங்கும் கீழுள்ள பாகம் தாங்காதென எண்ணினால் அப்பகுதிக்குப் பூண் பிடிப்பது வழக்கமாதலால், அதன்படி கழுத்துமேலுள்ள கூந்தற்பொறையோடன்றி பூவின் பாரத்தையும் தாங்காதென்று கருதி கழுத்தின்கண் அகன்ற தகட்டு வடிவமான ஓர்

அணியை அணிந்தாள் என்று கூறப்படுகிறது. பூண் என்பது ஏதாவது ஒரு பகுதியை உள்ளடக்கிக்கொண்டு அகன்று அதனைச் சுற்றி இருப்பது பூண். ஒடு உடனிகழ்ச்சிப்பொருள். மிடறு "நெடிலோடுயிர்த்தொடர்க் குற்றுகரங்களிற்றடவொற்றிரட்டும் வேற்றுமை மிகவே." என்றபடி மிடறு + இல் = மிடற்றில் என ஆயிற்று. (12)

[கையில் கடகம் அணிதல்]

கன்னி யத்தம்வந் தினமணி கற்கட கத்தின்
மன்னி யுற்றது அற்புதமென வளைபல காக்க
வின்னு தற்கருங் கண்மட மாதுகை விளங்க
பொன்னி னற்கட கம்புனைந் தனளொரு பூவை.

[இ-ள்.] ஒரு பூவை-(நாகண வாய்ப்புள்போலும் பேச் சழகுவாய்ந்த) ஒரு தோழியானவள், வில்நுதல்-விற்போன்ற நெற்றியையும், கருங்கண்-கரிய கண்களையும், மடம்-பேதைமை யையும் உடைய, மாது-மாயையினது, கை-கைகளிலே, கன்னி அத்தம் வந்து-கன்னியாகிய மாயையினது கைகள்வந்து, இன மணி கற்கடகத்தில்-கூட்டமான ஒரு சாதியான மாணிக்கக் கற்கள் பதிக்கப்பெற்ற கடகமாகிய அணியினுள்ளே, மன்னி உற்றது-நிலைபெற்றது, அற்புதம் என-ஆச்சரியம் என்று சொல்லவும், வளை பல காக்க-வளைகள் பலவற்றைக் காக்கவும், விளங்க-விளங்கும்படி, பொன்னின்-பொன்னாலான, நல்கடகம்-நல்ல மணிக் கடகத்தை, புனைந்தனள்-அணிந்தனள். (கன்னி அத்தம்வந்து-கன்னியா ராசிக்குரிய அஸ்த நக்ஷத்திரம்வந்து, இனமணி கற்கடகத்தில்-கூட்டமாகிய முத்துக்கள்போன்ற கற்கடக இராசியிலே நிலைபெற்றிருக்கிறது, அற்புதம் என-ஆச்சரியம் என்று சொல்லவும். என்னும் கருத்தும் தோன்றி நிற்கின்றதால் உற்றதுவரை சிலேடை). [எ-று.]

[கு-ரை.] உத்திரத்து 4-ம் காலும் அஸ்தம் முழுமையும் சித்திரைமுதல் இரண்டுகாலும் கன்னியா ராசிக்குரியது. அந்த நக்ஷத்திரம் புனர்பூசத்துக் காலும் பூசம் ஆயில்யத்துக்குரிய கடக ராசியில் செல்ல அப்படியிருக்க அமைந்தது ஆச்சரியம் என்றும், கைகள் கடகத்தில் நுழைந்தது ஆச்சரியம என்று தோன்றவும் கூறிய அழகுகூர்ந்து கவனிக்கத்தக்கது. இது சிலேடை யணி. பூவை-ஆகுபெயர். அஸ்தம்-அத்தம் என நின்றது. அற்புதம் உல கியற்கைக்கு மாறுபட்ட செயல். என, காக்க என்பதன் ஈற்று உம்மைகள் தொக்குநின்றன. (13)

[முன் கையில் பவளமாலை அணிதல்]

ஆயும் இன்சுவை தரச்செலுங் கையுடன் அடுத்து
வாயின் ஒண்கவின் காணிய மருவுறு மாபோன்
மாயை தன்கையிற் பொற்கட கத்தின்முன் வனைந்தாள்
தூய செம்பவ ளங்களைக் கோத்தொரு தோகை.

[இ—ள்.] ஒரு தோகை-ஒரு மயில்போன்ற தோழியான வள், மாயைதன் கையில்-மாயையினுடைய கைகளிலே, ஆயும் இன்சுவை - ஆராய்ந்துகொள்ளப்பட்ட இனிய அறுவகைச் சுவைகளையுடைய உணவுகளை, தரச்செலும்-தருதற்குச் செல்லு கின்ற, கையுடன் அடுத்து-கையோடு கூடிச்சென்று, வாயின்-வாயினது, ஒண்கவின்-ஒளிபொருந்திய அழகினை, காணிய-காணுதற்பொருட்டு, மருவுறுமாபோல்-சேர்ந்திருந்தாற்போல, பொன் கடகத்தின்முன்-பொன்னாலியன்ற கடகவணிக்கு முன் னால், தூய-குற்றமில்லாத, செம்பவளங்களை-செம்மையான பவளங்களை, கோத்து - கோவைசெய்து, வனைந்தாள் - அணிந் தாள். [எ—று.]

[கு-ரை.] தன்னின் இழிந்தார் தன்னைக்காட்டிலும் சிறந்துளார் என்று கேள்விப்பட்டவர், அவரது சிறப்பினைக் காணவேண்டி அவரோடு பழக்க மாகச் செல்லுபவரோடு சேர்ந்து இருந்து அவர் செல்லும்போது அவரோடு சென்று சிறப்புத் தன்மையைக் காணுதல் என்பது உலகவழக்கம். அதுபோல இதழுக்கு உவமையாகக் கூறப்பட்ட பவளம் பொருளாகக் கூறப்பட்டவுடன் தனக்கு உவமையாகும் சிறப்பினையுடைய இதழழகைக்காண விழைகின்ற தாகவும் அதற்காக இதழ் பொருந்தியவாயினுக்கு வேண்டிய உணவைக் கொண்டு செல்லுகின்ற கையுடன் சேர்ந்து இருந்து அது போகும்போது உடன் சென்று இதழ் அழகைக் காண்பதாகவும் கூறுகின்ற நயம் பாராட்டத் தக்கது. தோகை-ஆகுபெயர். காணிய செய்யிய என்பன வினையெச்சம். செம்பவளம்-இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர். இயைபின்மை நீக்கிய விசேடணம் என்பர் வடநூலார். செம்பவளம்-பண்புத்தொகை. பொற் கடகம்-மூன்றும் உருபும் பயனும் உடன்தொக்க தொகை. (14)

[மணிவடம் அணிதல்]

மங்க லத்தொழி லாடவர் மனநடக் கிற்காக்
குங்கு மப்பெருஞ் சேற்றினைக் குறித்திடு கற்போன்
மங்கை யர்க்கொரு திலகமா கியஎழில் மாயை
கொங்கை யிற்புனைந் தனளொரு பெண்மணிக் கோவை.

[இ—ள்.] ஒருபெண்-ஒரு தோழியானவள், மங்கையர்க்கு-பெண்களுக்கு, ஒரு திலகமாகிய-திலகம்போல் சிறந்தவளாகிய, எழில்-அழகினையுடைய, மாயை-மாயையினது, கொங்கையில்-

நகில்களின்மேல், மங்கலத்தொழில்-சுபகரமான செயல்களை யுடைய, ஆடவர் மனது-வாலிபரது மனங்கள், நடக்கிற்கா-நடத் தற்பொருட்டாக, குங்குமம்-செஞ் சாந்தாகிய, பெரும் சேற்றி னைக் குறித்து-பெரிய சேற்றினை (மனதின் கால்கள் அழுந்தி சேறு படாமல்) குறித்து வைக்கப்பட்ட, இடுகற்போல்-இடப் பட்ட கற்கள்போலத் தோன்றும்படி, மணிக்கோவை-நவமணி யாலான வடங்களை, புனைந்தனள்-அலங்கரித்தாள். [எ—று.]

[கு-ரை.] சேற்றில் நடக்கவேண்டியவர்கள் கால்களில் சேறுபடாத படி மத்தியில் மத்தியில் கற்களைப்போட்டு அதன்பேரிலேயே காலில் சேறு படாமல் அடி வைத்துச் செல்லுதல் உலக வழக்கு. அதுபோல ஆடவர்கள் மனம் மகளிரது கொங்கைகளிற் செல்லுதல் வழக்கம்; மனம் அவ்வாறு செல்லுங்காலத்து அக்கொங்கைகளிற் பூசப்பட்ட செஞ்சாந்துச் சேற்றில் மனதினுடைய கால்கள் படாமல் இருக்கும்படி மணிவடம் புனைந்தாளென்று தற்குறிப்பேற்றுகின்றார். "நோக்கிய நோக்கெனும் நுதிகொள் வேல் இணைதாக்கணங்கனையவள் தனத்திற்றைத்தவே" என்பதும் நோக்கத்தக்கது. மனதை உறுப்புடையதாகக் கூறலும், அது நடத்தல் முதலாகக் கூறுதலும் வழுவமைதி. ஆடவர்கள் மகளிரைக்கண்டு அவர்கள்மேல் காதல்கொண்டு மணம் புரிதற்குக் காரணம் அவர்கள் மனம் கண்வழி மகளிரது நகில்களைக் காணுதலாதலின் மங்கலத்தொழில் ஆடவர் என்றார். பெருஞ்சேறு—பெயரெச்சத்தொடர். (15)

[மேகலாபரணம் அணிதல்]

பாயும் வெண்டிரைக் கருங்கடல் நிலச்சுமை பாம்பின்
ஆயி ரம்படங் களுந்திறை யிட்டன வனைய
மீயி லங்கொளி விரிமணி மேகலை வேய்ந்தாள்
மாயை மங்கைத னல்குலின் ஒருதிரு மடந்தை.

[இ—ள்.] ஒருதிருமடந்தை-ஒரு அழகிய தோழியானவள், மாயை மங்கைதன் அல்குலின்-மாயையாகிய மங்கையினது அல் குலின்மீது, பாயும் வெண்திரை-தாவுகின்ற வெள்ளிய அலைகளை யுடைய, கருங்கடல்-கரிய கடலால் (சூழப்பட்ட), நிலம்-நிலத் தினை, சுமை-தலையிற் சுமந்துகொண்டிருக்கிற, பாம்பின்-பாம் பாகிய ஆதிசேடனின், ஆயிரம் படங்களும்-ஆயிரம் படங்களினு லும், திறையிட்டன அனைய-கப்பம் கட்டப்பட்டனபோல்வன வாகிய, மீஇலங்கு-மேலாக விளங்குகின்ற, ஒளி விரி மணி மேகலை-கதிர் விரிந்த மணிகளாலாகிய மேகலாபரணத்தை, வேய்ந்தாள்-அலங்கரித்தாள். [எ—று.]

[கு-ரை.] பூமியை ஆதிசேடன் தாங்கிக்கொண்டிருப்பதாகவும் ஆதிசேடனாகிய பாம்புக்கு ஆயிரம் தலை இருப்பதாகவும் புராண வழக்கு. பாம்பின் படம்போலும் அல்குல் என்று கூறுவர் உவமைப் புலவர். ஆனால் அல்குலைக்கண்ட பாம்பும் திறையிட்டதாகக் கூறுதல் அதனின் ஒப்புயர்வற்ற சிறப்பு நோக்கி. எனவே மேகலாபரணம் அதிக இரத்தினங்கள் இழைக்கப் பெற்றிருந்தது என்பது பெறப்படும். மடந்தை என்பது பருவம் குறியாது பெண் என்ற பொருளில் வந்தது. பாயும்-செய்யும் என்னும் வாய்பாட்டுப் பெயரெச்சம். வெண்திரை,கருங்கடல்-பண்புத்தொகைகள். (16)

[சிலம்பு அணிதல்]

கறைய டிக்களி யானையின் வரவினைக் கண்டு
மறுகி னுற்றவர் இரிதர மணிமருங் கிடல்போல்
உறுத வத்தினர் அறிந்தனர் ஓடலொண் ணுதற்கு
நறுமலர்ப்பதத் தணிந்தனள் சிலம்பொரு நங்கை.

[இ-ள்.] ஒரு நங்கை-ஒரு தோழியானவள், ஒண்ணுதலுக்கு-ஒளிபொருந்திய நெற்றியையுடைய மாயைக்கு, கறை-உரல்போலும், அடி-அடிகளையும், களி-களிப்பினையும் உடைய, யானையின்-யானையினது, வரவினைக்கண்டு-வருதலைத் தெரிந்து, மறுகின்-வீதியில், உற்றவர்-அடைந்தவர், இரிதர-விலகியோட, மணி-மணிகளை, மருங்கு-இரண்டு பக்கங்களிலும், இடல்போல்-கட்டுதலைப்போல, உறுதவத்தினர்-மிகுந்த தவத்தையுடைய முனிவர்கள், அறிந்தனர்-மாயை வருவதை அறிந்தவர்களாக, ஓட-ஓடும்படிக்கு, நறு மலர்ப்பதம்-நல்ல மலர்போன்ற அடிகளிலே, சிலம்பு-சிலம்பு என்னும் அணியை, அணிந்தனள்-(அழகுபெறக்) கட்டினாள். [எ-று.]

[கு-ரை.] யானை முதுகினின்றும் இரு பக்கங்களிலும் தொங்கும்படி இரண்டு மணிகட்டித் தொங்கவிடுதல் மரபு. 'யானைவரும் பின்னே மணி ஓசைவரும் முன்னே' என்ற பழமொழிக்கேற்ப யானை வருவதை மணியோசையால் அறிந்து மக்கள் விலகிப்போவார்கள் என்ற தன்மையை உவமையாகக்கொண்டு, இயல்பாக காலில் ஒலிக்கும் தன்மை வாய்ந்த சிலம்பை அணிகின்றாள் ஒருத்தி மாயைக்கு அதனை மாயையின் வருகையை முனிவர் அறிந்து ஓடற்கென தற்குறிப்பேற்றுகின்றார் ஆசிரியர். எனவே இது தற்குறிப்பேற்றவணி. (17)

[வாசனை பூசுதல்]

கூடை மென்மலர் மணத்தினால் அறிந்ததைக் குறுகப்
பாடும் வண்டினம் சூழ்தல்போல் இளைஞர்கண் பரப்பத்
தேட ரும்பொரு ளனையவட் குறுநறுந் தேய்வை
பீடு றுங்குவி முலைக்கணிந் தனளொரு பேதை.

[இ-ள்.] ஒரு பேதை-ஒரு தோழியானவள், தேட அரும் பொருள்-சம்பாதித்திற்கு அரிய பொருளை, அனையவட்கு-ஒத்த வளாகிய மாயைக்கு, கூடை மென்மலர்-குடலையினுள்ளேயுள்ள மலர்களை, மணத்தினால்-வாசனையால், அறிந்து-தெரிந்து கொண்டு, அதைக்குறுக-அதனை அடைய, பாடும் வண்டு இனம்-கீதங்கள் பாடுகின்ற வண்டுக்கூட்டங்கள், சூழ்தல்போல்-குடலையைச் சூழ்ந்துகொண்டிருப்பதைப்போல, இளைஞர்கண்-காளையர்களது கண்கள் சேர்ந்து நோக்க, உறுநறும் தேய்வை-மிகுந்த மணமுள்ள சந்தனக் குழம்பை, நீடு உறும் குவிமுலைக்கு-பெருமை பொருந்திய குவிந்த கொங்கைகளின்மேல், அணிந்தனள்-பூசினாள். [எ-று.]

[கு-ரை.] பூவை வாசனையாலறிந்து வண்டுகள் சூழ்தல் மரபு. அது போல பெண்களினுடைய கொங்கையில் பூசப்பெற்ற மணத்தினால் காளையர்கள் பெண்கள் வருகிறார்கள் என்று அறிந்து அவர்களை ஒரு சேர நோக்கிடச் சுழல்வார்கள் என்று கூறுகிறார். கூடை மாயையானது கொங்கைக்கும், மலர் சந்தனக் குழம்பிற்கும், மலரினது மணம் சந்தனக் குழம்பினது மணத்திற்கும், வண்டுகள் காளையர்களுடைய கண்களுக்கும் உவமை. மக்களைப் பொருள் என்றார். 'தம் பொருள் என்ப தம்மக்கள்' என்றபடியால். அனையவட்கு, முலைக்கு என இரண்டிடத்தும் நான்கன் உருபு வந்தது உருபு மயக்கம். 'அவ்வித்தழுக்காறுடையானைச் செய்யவள், தவ்வையைக் காட்டி விடும்' என்றாற்போல. பேதை பருவங்குறியாது பெண் என நின்றது. (18)

[ஒரு தோழி மாயை தன் அழகைக் காணுமாறு கண்ணாடி காட்டுதல்]

நின்றன் விம்பமே நினக்கெதி
    ரன்றிவே றில்லை
என்று கண்கொளத் தெளிந்தபே
    ராடியொன் றெடுத்தாள்
குன்றெ னுங்குவி முலையவ
    ளெதிர்கொடுங் குழைமேல்
சென்று சென்றுபா யரிமதர்
    மழைக்கணோர் தெரிவை.

[இ-ள்.] கொடும் குழைமேல்-வளைவாகிய குழையை யுடைய காதுகளின்மேல், சென்று சென்றுபாய்-சென்று சென்று மோதுகின்ற, அரிமதர் மழைக்கண்-ரேகைகளையும் செருக்கினையும் குளிர்ச்சியையும் உடைய கண்களைப் பெற்றிருக்கின்ற, ஓர் தெரிவை-ஒரு தோழியானவள், குன்று எனும்-மலைகளோ என ஐயப்படுதற்குரிய, குவிமுலையவள்-குவிந்த கொங்கைகளை யுடைய மாயையின், எதிர்-முன்னே, நின்றன் விம்பமே-உனது

வடிவமே, நினக்கு எதிர் அன்றி - உனக்கு உவமையாருமே யல்லாமல், வேறு இல்லை-பிறிது ஒரு பொருள் உவமிப்பதற்கு இல்லை, என்று-என்று (காண்பிப்பவள்போல), கண்கொள - கண்களாற் காணும்படி, தெளிந்த-மலினம் அற்று தெளிவாக இருக்கப்பட்ட, பேர் ஆடி-பெரிய கண்ணாடி, ஒன்று-ஒன்றினை, எடுத்தாள்-தாங்கினாள். [எ-று.]

[கு-ரை.] சென்று சென்று அடுக்குதற்கண் வந்தன. (கண்ணாடிகளில்) சில வடிவத்தை விகாரப்படுத்தியும் பல்வேறு விதமாகவும் காட்டும் தன்மையன என்பதுபற்றித் தெளிந்தபேர் ஆடி என்றார். குன்றெனும் குவிமுலை உயர்வுநவிற்சி, காதளவோடிய கண்ணாள் என்பதற்கேற்ப சென்று சென்று பாய் கண் என்றார். (19)

[மாயையின் தோற்றப்பொலிவு]

வீர வேள்வளை யாதசெங் கரும்பவன் வில்லி
னாரி மேலிடா மலர்மறு விலாநகை மதியம்
காரு றாதமின் கடற்பிற வாதவின் னமுதம்
வேரி லாதபூங் கொடியென விளங்கினள் மாயை.

[இ-ள்.] வீரவேள்-வீரத்தையுடைய மன்மதனாலே, வளையாத-வளைக்கப்படாத, செங்கரும்பு-செங்கரும்பும், அவன்வில்-அவன் வில்லினது, நாரிமேல்-நாணின்மேல், இடாமலர்-தொடுக்கப்படாத மலரும், மறு இலா-களங்கம் இல்லாத, நகைமதியம்-ஒளியையுடைய சந்திரனும், கார் உறாத மின்-மேகத்தைச் சேராத மின்னற்கொடியும், கடல் பிறவா இன்அமுதம்-கடலின்கண் தோன்றாத இனிமையாகிய அமுதமும், வேர் இலாத பூங்கொடி-வேர் இல்லாத மலர்க்கொடியும், என-என்று சொல்லும்படி, மாயை-மாயையானவள், விளங்கினள்-விளக்கமுற்றனள். [எ-று.]

[கு-ரை.] கரும்பு மன்மதனால் வளைக்கப்படும் வில்லாகும். மலர் தொடுக்கப்படும் அம்பாகும். திங்கள் களங்கமுடையது. மேகத்தில் பொருந்துவது மின்னல். அமுதம் கடலில் தோன்றுவது. பூங்கொடி வேரையுடையது. மொழியினிமையில் கரும்பும், பொலிவால் மலரும், முகத்தால் திங்களும், விளக்கத்தினால் மின்னலும், நுகர்தவினிமையில் அமுதமும், பல உறுப்புகளைக்கொண்டு மிளிர்வதால் பூங்கொடியுமாக மாயை உருவகிக்கப்படுகிறாள். ''காசறுவிரையே கரும்பே'' எனவும், ''அலைபிடைப் பிறவா அமுதே'' எனவும் இளங்கோவடிகள் கூறுவதும் அறிதற்குரியன. இடா, இலா ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள். வீரவேள் என்று இயற்பெயர் முன்னும் அவன் என்னும் சுட்டுப்பெயர் பின்னும் வந்தது. (20)

[ஒருத்தி மாயையைப் பூசனை செய்தற்கு வருக என வேண்டுதல்]

மாத ரிவ்வகை யணியலும் மதுகைநா யகன்றன்
பாத தாமரை யருச்சனைப் பொருள்கள் பற்பலவும்
நீதி யாலமைந் தனவினி நிகரிலெம் பிராட்டி
போது வாயென வொருமட மாதெதிர் புகன்றாள்.

[இ-ள்.] மாதர்-தோழியர்கள், இவ்வகை-இந்தவிதமாக, அணியலும்-அலங்காரம் செய்தலும், ஒரு மடமாது-ஒரு தோழியானவள், மதுகைநாயகன்தன்-மதுகேஸ்வரனது, பாததாமரை-திருவடிக் கமலங்களுக்கு, அருச்சனைப்பொருள்கள்-பூசை செய்தற்குரிய பொருள்கள், பற்பலவும்-பல பலவும், நீதியால் அமைந்தன-முறையால் அமைந்து சேர்ந்தன, இனி-இனிமேல், நிகர்இல்-ஒப்பு இல்லாத, எம் பிராட்டி-எம்முடைய தலைவியே, போதுவாய் என-(பூசைக்குச்) செல்லுவாயாக என்று, எதிர் புகன்றாள்-எதிரே நின்று சொன்னாள். [எ-று.]

[கு-ரை.] பல பல என்பன, ''பல சில எனும் இவை......அகரம்கெக லகாரம் றகரமாதலும்'' என்ற விதிப்படி பற்பல என்றாயின. பாத தாமரை-உருவக வணி. (21)

[மாயை பூசைக்குப் புறப்படுதல்]

மயிலெ ழுந்தென வெழுந்தனள் கோமகள் வாழ்த்திக்
குயிலெ ழுந்தென வெழுந்தன மடந்தையர் குழாங்கள்
துயிலெ ழுந்தென வெழுந்தன நூபுரத் துழனி
வெயிலெ ழுந்தென வெழுந்தன மணியணி விளக்கம்.

[இ-ள்.] கோமகள்-அரசமகளாகிய மாயை, மயிலெழுந்த என-மயில் எழுந்ததுபோல, எழுந்தனள்-(சிவிகையையூர) எழுந்தனள், மடந்தையர்-தோழிப்பெண்களது, குழாங்கள்-கூட்டங்கள், வாழ்த்தி-(மாயையை) வாழ்த்திக்கொண்டு, குயில் எழுந்தென-குயில்கள் எழுந்ததையொப்ப எழுந்தன, நூபுரம் துழனி-அவர்களது அடிச்சிலம்பினின்றும் தோன்றிய ஓசைகள், துயில் எழுந்த என-தூக்கத்தினின்றும் எழுந்ததைப்போல, எழுந்தன-எழுந்தன, மணி அணி விளக்கம்-மணிகளாலாகிய ஆபரணங்களினது ஒளிகளானவை, வெயில் எழுந்த என-வெய்யில் தோன்றுவதைப்போல, எழுந்தன-தோன்றின.

[எ-று.]

[கு-ரை.] இச்செய்யுள் நிரிபணி. முதலெழுத்து நீங்கலாக ஏனைய பலவெழுத்துக்கள் ஒன்றிவாத்தொடுத்தமையின். எழுந்த என வாவேண்டிய இடங்கள் நான்கும் எழுந்தென நின்றது. அகரம் தொகுத்தல் விகாரம். புகழ் புரிந்தஇல் (புகழ் புரிந்தில்) என்றாற்போல. குழாங்கள் என்றதற்கேற்ப எழுந்தன என அஃறிணையாகக் கூறினர். (22)

[மாயை சிவிகையில் ஏறுதல்]

பொன்னி லங்கிய சிவிகைமுன்
கொணர்ந்தனர் பொறுப்போர்
மன்னி யங்கதை ஏறினள்
மதர்விழி மாயை
சின்னம் வெண்பணி லம்பணை
தண்ணுமை திமிலை
முன்னி ரைந்தன மதியெழக்
கடல்முழங் குதல்போல்.

[இ-ள்.] பொறுப்போர் - (சிவிகையை) சுமப்பவர்கள், பொன் இலங்கிய-பொன்னால் விளக்கமுற்றிருக்கின்ற, சிவிகை-தண்டிகையை, முன்கொணர்ந்தனர்-(மாயைக்கு) முன்னால் கொண்டுவந்து வைத்தார்கள், அங்கு-அப்போது, மதர்விழி-களிப்புப் பொருந்திய விழியினை உடைய, மாயை-மாயையான வள், மன்னி-விருப்பமுற்று, அதை ஏறினள்-அச்சிவிகையின் கண் ஏறினாள், சின்னம்-திருச்சின்னங்களும், வெண்-வெண்மை யான, பணிலம்-சங்கங்களும், பணை-பேரிவாத்தியங்களும், தண்ணுமை-மத்தளமும், திமிலை-பம்பையும், மதிஎழ-திங்கள் உதயம் செய்ய, கடல் முழங்குதல்போல்-கடல் ஒலித்தலைப் போல, முன் இரைந்தன-(மாயை) முன்னே ஒலித்தன. [எ-று.]

[கு-ரை.] அதை என்ற இரண்டாம் உருபினை ஏழாவதாகத் திரிக்க. "யாதன் உருபிற் கூறிற்றாயினும் பொருள் செல் மருங்கின் வேற்றுமை சாரும்" என்ற விதியால். பொன்+இலங்கிய, முன்+இரைந்தன = இவை கள் "தனிக்குறின்முன் ஒற்று உயிர்வரின் இரட்டும்" என்ற விதிப்படி பொன் னிலங்கிய, முன்னிரைந்தன என வந்தன. மதியெழக் கடல் முழங்குதல் போல மாயையெழ பல்லியங்கள் முழங்கின என உவமையணி. மதர்விழி மாயை அடை சினை முதல் மூன்றும் முறையே வந்தன. மதியெழக் கடல் முழங்குதல் என்பது "தண்ணென்கதிர் வரலால் பொங்கும் கடல்" என்பதும் காண்க. (23)

[மாயையினது சிவிகைமுன் சிலர் குழலூதல்]

ஆன்றி ரட்டுறுங் கண்ணன்வாய்க் குழலிஃ தணிபூண்
மான்றி ரட்டுறும் எனக்குழ லூதினர் மலர்விற்
கோன்றி ரட்டிய அமுதனை யாண்முனங் குறுகி
மூன்றி ரட்டிய முகமுடை முருகனும் முருக.

[இ-ள்.] கண்ணன்-கோபாலனது, வாய்க்குழல்-வாயால் ஓதப்பட்ட குழலோசையானது, ஆன் திரட்டுறும்-பலவிடத் திருக்கின்ற பசுக்களை ஒன்று சேர்ப்பதாகும், இஃது இப்புல்லாங் குழலோவெனின், மான் திரட்டுறும் - மான்போல் உள்ள மகளிரை ஒன்று சேர்ப்பதாகும், என-என்று சொலும்படி, மலர் வில்-பூ வில்லையுடைய, கோன்-மன்மதனாலே, திரட்டிய-திரட்டி எடுக்கப்பட்ட, அமுது அனையாள்-அமுதம்போல்பவ ளாகிய மாயைக்கு, முனம் குறுகி-முன்னே சிலர்சென்று, மூன்று இரட்டிய-ஆறாகிய, முகமுடை-முகங்களையுடைய, முருகனும்-முருகப்பெருமானும், உருக-உள்ளம் குழையும்படி, குழல்-புல்லாங்குழலை, ஊதினர்-ஊதினார்கள். [எ-று.]

[கு-ரை.] மான் உவமையாகு பெயர். இஃது ஆய்தத்தொடர்க்குற்றிய லுகரம். மன்மதன் தனது செயலுக்காக திரட்டி எடுக்கப்பட்ட அமுதம் போல்வன மாயை என்றமையால் அவளது பேரழகு விளங்குகிறது. மலர் அம்பேயாயினும் வில்லென்று கூறப்பட்டது ஒற்றுமைபற்றி. கோ னகரச் சாரியைபெற்று கோன் என நின்றது "ஆ. மா. கோ. னவ்வணையவும் பெறுமே" என்ற விதியால். முன்னம் என்பது இடைக்குறைந்து முனம் என நின்றது. இப்பாட்டிலும் திரிபணி அமைந்துளது காண்க. (24)

[மகளிர் மாயையைச் சூழ்தல்]

வயங்கு மாயையங் கரும்பினிற் றாழ்ந்தவர் மாவி
னுயர்ந்த மாதரார் ஊற்றிருந் தொழுகுகண் மலரை
நயந்து சூழ்தரும் அளியினண் ணினர்பிறர் காலால்
இயங்கு மாதிரு புடையினு மிடையற வீண்டி.

[இ-ள்.] வயங்கும்-விளங்காநின்ற, மாயை அம் கரும்பி னில்-மாயையாகிய அழகிய கரும்பினின்றும், தாழ்ந்தவர்-(அழ கில்) தாழ்ந்தவர்களும், மாவின்-திருமகளினும், உயர்ந்த மாதரார்-உயர்ந்தவரும் ஆகிய பெண்கள், ஊற்று-ஊற்றாக, இருந்து ஒழுகு-இருந்து ஒழுகாநின்ற, கள்மலரை-தேனையுடைய மலரை, நயந்து-விரும்பி, சூழ்தரும் அளியின்-சூழ்கின்ற வண்டு கள்போல, பிறர் காலால்-பிறருடைய கால்களாலே, இயங்கும்-

செல்லுகின்ற, மாது-மாயையினுடைய, இருபுடையினும்-இரண்டு பக்கங்களினும், இடையற-இடைவெளி இல்லாமல், ஈண்டி-நெருங்கி, நண்ணினர்-சூழ்ந்தனர். [எ—று.]

[கு-ரை.], மாதரார் மாது இருபுடையினும் இடையற ஈண்டி நண்ணினர் என வினை முடிக்க. தேன் பொருந்திய மலரை வண்டுகள் சூழ்தல் போல மாயையினை மகளிர் சூழ்ந்தனர் என்பது உவமையணி. சிவிகையிற் சென்றாள் மாயை என்பதனைப் பிறர் காலால் இயங்கினள் எனக் கூறும் நயம் காண்க. (25)

[குடை கவித்தல் சாமரம் வீசுதல்]

வேள ளித்தனன் றன்குடை யெனக்குடை விதிர்க்கும்
வாளெ னப்பிறழ் மதர்நெடுங் கண்ணிபான் மருவ
காள மொத்தகண் மடந்தையர் பலரிளங் கமுகின்
பாளை யொத்தவெண் கவரிவீ சினரிரு பாலும்

[இ-ள்.] வேள்-மன்மதனானவன், தன் குடை-தனது திங்களாகிய குடையை, அளித்தனன் என-இவளுக்குக் கொடுத்தானோ என்று சொல்லும்படிக்கு, குடை-வெள்ளைக் கவிகையானது, விதிர்க்கும்-அசைக்கப்பட்ட, வாள் என-வாளைப்போல, பிறழ்-புரளுகின்ற, மதர் நெடும் கண்ணி-களிப்பையும் நெடுமையுமுடைய கண்களையுடைய மாயையின், பால் மருவ-பக்கத்தில் பொருந்த, காளம்-நஞ்சினை, ஒத்த-ஒத்திருக்கின்ற, கண் மடந்தையர்-கண்களையுடைய மகளிர்கள், பலர்-பல பேர்கள், இளங்கமுகின்-இளமையான பாக்கினது, பாளை ஒத்த-பாளையை ஒத்திருக்கின்ற, வெண்கவரி-வெண்மையான சாமரைகளை, இருபாலும்-இரண்டு பக்கத்திலும், வீசினர்-வீசினார்கள். [எ—று.]

[கு-ரை.] மன்மதனுக்குக் குடை திங்கள் என்பது மாயை உற்பத்தி 7-ம் செய்யுளாலும் அறியலாம். மகளிர் கண்களில் நஞ்சம் உண்டு என்பது கடுவும் விழிகள் சிறிதுற்ற என்பதனாலும் அறிக. வெண்கவரி-இனமில் அடை. இயைபின்மை நீக்கிய விசேடம் என்பர் வடநூலார். குடை மருவ கவரி வீசினர் என முடிவு செய்க. திங்களங்கவிகையாள் எனப் பிறரும் கூறுமாற்றால் மாயையின் அண்மையில் மருவிய குடையும் வெண் குடை என்றார். (26)

[சிவிறி அசைதலும் பூமழை சிதறுதலும்)

காம வெந்தழல் மூட்டல்போல் கடிமலர்ச் சிவிறி
தாம சைந்தன பொய்க்கணை சொரிந்துவிற் றடக்கைக்
கோம கன்திருந் திழையுள மறிதல்போல் குறுகிப்
பூம டந்தையை வென்றவர் பூமழை பொழிந்தார்.

[இ—ள்.] காமம் வெம் தழல்-காமமாகிய வெப்ப மிகுந்த நெருப்பை, மூட்டல்போல்-மூட்டுதலைப்போல, கடிமலர்ச் சிவிறி-மணம் பொருந்திய மலர்களால் செய்யப்பட்ட விசிறிகள், அசைந்தன-(சேடியரால்) அசைக்கப்பட்டன, வில் தடம்கை கோமகன்-கரும்பு வில்லேந்திய நெடிய கையினையுடைய மன்மதனவன், பொய்க்கணை-பொய்யம்புகளை, சொரிந்து-சொரிதலைச் செய்து, திருந்திழை-சிறந்த அணிகளையுடைய மாயையினுடைய, உளம்-கருத்தினை, அறிதல்போல்-அறிதலைப்போல, பூமடந்தையை-(அழகினால்) திருமகளை, வென்றவர்-தோல்வியுறச்செய்த மகளிர், குறுகி-நெருங்கி, பூமழை-மலர் மாரியை, பொழிந்தனர்-சொரிந்தனர். [எ—று.]

[கு-ரை.] நெருப்பை வளர்ப்பவர் விசிறிகொண்டு வீசுதல் வழக்கமாதலின் காம நெருப்பை வளர்ப்பதுபோல இருந்தது காற்றுக்காக வீசப்பட்ட விசிறி. மகளிர் மலரைச்சொரிதல் காமன் அம்புகளைச் சொரிகிற மாதிரி இருந்தது ஆயினும் காமன் அம்பு, காட்சி முதல் சாக்காடு ஈறாகச் சொல்லப் பட்ட பத்து நோயை முறையே உண்டுபண்ணவல்லது. இஃது அச்செயலைச் செய்யாமையாலே அவள் மனம் அறிய பொய்க்கணை சொரிந்தனன் என்றார். தாம் அசை. திருந்திழை-அன்மொழித்தொகை. மகளிர் பூச்சொரிதலை மன்மதன் பூச்சொரிதலாகவும் வெப்பம் நீங்கி தண்ணென் காற்றுக்காக வீசப் பட்ட விசிறி காம நெருப்பை வளர்த்தற்கு வீசப்பட்டது போலும் கற்பித்தலால் தற்குறிப்பேற்றவணி. பொய்க்கணை-பண்புத்தொகை. (27)

[மாயையுடன் சென்ற மகளிர் கொண்டுசென்ற பொருள்கள்]

பாகு வெள்ளிலை சந்தனம் குங்குமம் பளிதம்
ஓகை மான்மதம் வண்டிமிர் நறுமலர் ஒலியல்
பேர்கெ ழூம்பணிப் பெட்டிமென் றுகிலுடைப் பேழை
தோகை மார்பலர் மருங்கினிற் சுமந்துபோ யினரால்.

[இ—ள்.] பாகு-பாக்கும், வெள்ளிலை-வெற்றிலையும், சந்தனம்-சந்தனமும், குங்குமம்-செஞ்சாந்தும், பளிதம்-பச்சைக் கருப்பூரமும், ஓகை-மகிழ்ச்சியைத் தருகின்ற, மான்மதம்-கஸ்தூரியும், வண்டு-வண்டுகள், இமிர்-ஒலிக்கின்ற, நறு-நல்ல மணமுள்ள, மலர்-மலராலான, ஒலியல்-மாலைகளும், பேர்-பெருமை, கெழூம்-பொருந்திய, பணி-அணிகள் அடங்கிய, பெட்டி-பெட்டியும், மென்-மென்மையான, துகில் உடை-ஆடைகளையுடைய, பேழை-பெட்டியுமாகிய இவற்றை, தோகைமார் பலர்-பல மகளிர், மருங்கினில்-மாயையின் பக்கத்தில், சுமந்துபோயினர்-தாங்கிக்கொண்டு சென்றனர். [எ—று.]

[கு-ரை.] பாகு முதலிய பெயர்ச்செவ்வெண்ணும் தொகையும் தொக்கு நின்றன. சுமந்துபோயினர் என்றமையின் பொருள்களின் மிகுதியை உணர்த்தியவாறு. தோகை-ஆகுபெயர். ஆல் அசை. (28)

[மாயை செல்லுகின்ற தெரு ஆற்றினை ஒக்கும் என்றல்]

கொங்கை யங்குவி முகிழ்விழிக் கயலிதழ்க் குமுதம்
அங்கை யம்புயம் உந்தியஞ் சுழியிவை யடுத்துப்
பொங்கு றுங்கவி னீர்பெரு காற்றினைப் புரையும்
மங்க லந்திகழ் வுறுமணி மாளிகை மறுகு.

[இ-ள்.] மங்கலம்-சுபம், திகழ்வுறும் - விளங்காநின்ற, மணி மாளிகை-அழகிய வீடுகளையுடைய, மறுகு-வீதிகள், கொங்கை-முலைகளாகிய, குவிமுகிழ்-குவிந்த தாமரை அரும்பு களும், விழிக்கயல்-கண்களாகிய கெண்டை மீன்களும், இதழ் குமுதம்-இதழையுடைய வாயாகிய ஆம்பலும், அங்கை அம் புயம்-அகங்கையாகிய தாமரை மலர்களும், உந்தி அம்சுழி-நாபி யாகிய அழகிய சுழிகளும், இவை-ஆகிய இவைகளை, அடுத்து-அடுத்திருக்கின்ற தன்மையாலே, பொங்குறும்-மேற்படும், கவின்-அழகினையுடைய, நீர் பெருகு-நீரானது பெருகாநின்ற, ஆற்றினை-ஆற்றினை, புரையும்-ஒத்திருக்கும். [எ-று.]

[கு-ரை.] ஆற்றில் இருக்கக்கூடிய பொருள்கள் தெருவில் இருப்பதாகச் சொல்லியதாலே உருவகத்தை அங்கமாகக் கொண்டுவந்த உவமையணி. அங்கை என்பது "அகமுனர்ச்செவிகைவரின் இடையன கெடும்" என்றதால் அகங்கை எனக்கொண்டு உள்ளங்கை என்று பொருள் கூறப்பட்டது. இவ்வாறன்றி அம்கை அழகிய கை யென்று கூறுதல் பொருந்தாது. நீர் இலா ஆற்றில் தாமரை அரும்பு காணமுடியாதாதலின் நீர் பெருகு ஆறு என்றார். (29)

[மகளிர் செல்லும்போது உண்டாகும் ஒலிகள்]

திங்கள் வாணுதல் மடந்தையர் செஞ்சிலம் பொலியும்
சங்கி னோடணி கலன்களின் சிற்றொலி தாமும்
கொங்கு லாமலர்த் தொடையளி யிசைகளும் குழுமிப்
பொங்கு மாழியிற் பல்துளி பெருகுதல் போன்று.

[இ-ள்.] திங்கள்-சந்திரன்போல, வாள் நுதல்-ஒளிபொருந்திய நெற்றியையுடைய, மடந்தையர்-மகளிரது, செஞ்சிலம்பு ஒலியும்-செம்பொற் சிலம்பினது ஓசையும், சங்கினோடு-வளைகளோடு, அணிகலன்களின்-ஆபரணங்களின், சிற்றொலி தாமும்-

சிறிய ஓசையும், கொங்கு உலாம்-பரிமளம் உலாவுகின்ற, மலர்த் தொடை-மலர்மாலைகளிலுள்ள, அளி இசைகளும்-வண்டுகளின் ஓசையும், குழுமி-கூடி, பல்துளி-பலதுளிகள், பெருகுதல்-சேர்ந்து பெருகுதலை, போன்று-ஒத்து, ஆழியின்-கடல்போல, பொங்கும்-மிகுந்து ஒலிக்கும். [எ-று.]

[கு-ரை.] குழுமிபல் துளிபெருகுதல் போன்று பொங்கும். குழுமி ஆழியில் பொங்கும் என்று தனித்தனியாகக்கொண்டு கூட்டுக. ஆழியில். இல் உவம உருபு. ஆழியில் பல்துளி பெருகுதல்போன்று பொங்கும் என்று பொருள் கொள்ளலும் ஒன்று. அப்போது, ஆழியில் என்பதில் இல் ஏழாம் வேற்றுமைஇடப்பொருள் என்று கொள்ளவேண்டும். கடலில் போராறு கலக்குங்கால் இயல்பாக ஒலிக்கும் கடல் மிக்கொலிக்கும் ஆதலின் பின்னுரையும் கொள்ளலாம். (30)

[மாயை அத்தெருவிடை ஆலயம் செல்லும் செயல்]

துன்று பெண்படை சூழ்வர மாயையந் தோகை
வென்றி யங்கனன் மழுவினேன் விழியினல் வேளைக்
கொன்ற தென்னெனக் கேட்பமென் றுளவலி கொண்டு
சென்று றுஞ்செய லென்னவத் தெருவிடைச் சென்றாள்.

[இ-ள்.] துன்று-(இவ்வாறு) நெருங்கிய, பெண்படை-மகளிராகிய சேனை, சூழ்வர-சூழ்ந்து வராநிற்க, அம் தோகை மாயை-அழகிய தோகையையுடைய மயில்போல்பவளான மாயையானவள், வென்றி-வெற்றியைத் தருகிற, அம்கனல்-அழகிய ஒளியோடு பிரகாசிக்கிற, மழுவினேன்-மழுவேந்திய பரமசிவன், விழியினல்-(நெற்றிக்) கண்ணினல், வேளை-மன்மதனை கொன்றது, என்னென-கொன்றதற்குக் காரணம் யாது என்று, கேட்பம் என்று-(அவரைக்) கேட்போம் என்று, உள வலிகொண்டு-மனதைரியம்கொண்டு, சென்று உறும் செயல் என்ன-போகின்ற செயலைப்போல, அத்தெருவிடை-அவ்வீதியினிடத்து, சென்றாள்-போயினள். [எ-று.]

[கு-ரை.] தன்னின் மிக்காரிடத்துச் சென்று அவர் செயலைக் கேட்க விரும்புபவர் தக்க பக்க பலத்தோடு செல்வது வழக்கம். அதுபோல மாயை பெண் படை சூழ்ந்துவர இறைவனிடத்து சென்றாள் என்று கூறப்பட்டது. பூசைக்குச் செல்கின்ற மாயையை இறைவனைக் கேள்விகேட்கச் செல்பவளாகக் கூறப்பட்டது தற்குறிப்பேற்றம். தோகை என்பது சினையாகுபெயராக மயிலை உணர்த்திற்று. பின்னர் மாயையை மயிலாக உருவகிக்கப் பட்டது. (31)

[மாயையைத் தெருவிற்கண்ட ஆடவர் தன்மை]

வேறு

அரிமதர் மழைக்கணல் லரிவை தன்புடை
வருமட வரலியர் வனப்புக் காண்டலும்
எரிபுரை விழியரி யேறு போல்பவர்
கரிநுகர் வெள்ளிலங் கனியை யொத்தனர்.

[இ-ள்.] அரி - இரேகைகளையும், மதர் - களிப்பையும், மழை-குளிர்ச்சியையும் உடைய, கண்-கண்களையுடைய, நல் அரிவைதன்-நல்ல மாயையினது, புடை-பக்கங்களில், வரும்-(சூழ்ந்து) வருகின்ற, மடவரலியர்-மகளிரது, வனப்பு-அழகினை, காண்டலும்-கண்டவளவில், எரிபுரை-நெருப்பை ஒத்த, விழி-கண்களையுடைய, ஏறு அரி-ஆண் சிங்கத்தை, போல்பவர்-ஒத்த ஆடவர்கள், கரிநுகர்-யானையாலுண்ட, வெள்ளில் அம் கனியை-விளாம்பழத்தை, ஒத்தனர்-ஒத்தார்கள். [எ-று.]

[கு-ரை] வெள்ளில்-விளாமரம், கரி-யானைக்குக் காரணக்குறி. யானைத் தீ என்று ஒரு நோயுண்டென்றும், அந்நோய் தாக்கின் விளங்கனி மேல் ஓடிருக்க உள்ளீடு இல்லாமல் போய்விடும் என்றும் சிலர் கூறுவர். (32)

இதுவும் அது

இடையொரு சற்றுவா ணுதல்சற் றேழையர்
படைவிழி சற்றுவாய்ப் பவளஞ் சற்றிணைக்
குடமொரு சற்றிவண் கொள்ளை கொள்ளநம்
புடைபெய ரறிவெலாம் போயிற்றே யென்பார்.

[இ-ள்.] நம்புடை பெயர் - (நமது நல் நடக்கைக்குக் காரணமான) விரிந்து வளருகின்ற, அறிவு எலாம்-அறிவினை எல்லாம், ஏழையர்-மகளிரது, இடை ஒரு சற்று-இடை ஒரு சிறிதும், வாள் நுதல் சற்று-ஒளி பொருந்திய நெற்றி ஒரு சிறிதும், படை-வாள் போன்ற, விழி-கண்கள், சற்று-ஒரு சிறிதும், வாய்பவளம்-வாயாகிய பவளம், சற்று-ஒரு சிறிதும், இணைக் குடம்-இரண்டு குடம்போன்ற முலைகள், ஒருசற்று-ஒரு சிறிதும், இவண்-இவ்விடத்தில், கொள்ளைகொள்ள-கொள்ளை கொள்ளுதலாலே, போயிற்றே-அறிவுமுழுதும் போயிற்றே, என்பார்-(இனி என் செய்வேம்) என்று சொல்லுவார்கள். [எ-று.]

[கு-ரை.] இணைக்குடம் என்றது நகில்கள் என குறிப்பாக பொருளை உணர்த்திற்று. குடம்-உவம ஆகுபெயர். படைவிழி உவமத்தொகை, வாய்ப்பவளம்=பண்புத்தொகை. ஏகாரம் தேற்றம். (33)

### இதுவுமது

இனத்தியல் பாமறி வென்ப துண்மையே
மனத்துயர் செயுமயல் மாற்று நீறுதான்
அனிச்சமெல் லடியினர் நுதல டுத்தலும்
பனித்துடல் வெதும்புமால் படுத்த லாலென்பார்.

[இ—ள்.] அறிவு-(மக்களுடைய) அறிவானது, இனத்து இயல்பாம்-(அவர் சேர்ந்திருக்கின்ற) இனத்தினது இயல்பினை யுடையதாகும், என்பது-என்று சொல்லப்படுவது, உண்மையே-வாய்மையேயாகும், மனத்துயர் செயும்-மனதிற்கு துன்பத்தைச் செய்கின்ற, மயல்-காமமயக்கத்தை, மாற்றும்-நீக்குகின்ற, நீறு-விபூதியானது, அனிச்சம்-அனிச்சமலரினது, மெல் அடியினர்-மென்மைவாய்ந்த அடிகளையுடைய மகளிரது, நுதல் அடுத்தலும்-நெற்றியைச் சார்ந்த அளவில், மால் படுத்தலால்-காம மயக்கத்தைச் செய்தலால், உடல்-எம்முடம்பு, பனித்து-வேர்த்து, வெதும்பும்-வெப்பமடைகின்றது, என்பார்-என்று சொல்லுவார். [எ—று.]

[கு-ரை.] தான்-அசை. "நிலத்தியல்பானீர் திரிந்தற்றாகும் மாந்தர்க்கு இனத்தியல்பதாகும் அறிவு" என்ற பொய்யாமொழியை உட்கொண்டது இச்செய்யுள். நீற்றின் பெருமை சம்பந்தர் கூறிய திருநீற்றுப் பதிகம் முதலிய பலவற்றுள்ளும் காண்க. (34)

### இதுவுமது

தொல்லைநஞ் சடர்துயர் சொல்லக் காத்தவன்
வல்லிபங் குடையருண் மதுகை நாயகன்
செல்லுமங் கையர்விழி நஞ்சு செய்வதும்
சொல்லுதும் அவனொடு தொழுதுநா மென்பார்.

[இ—ள்.] வல்லி-கொடிபோலும் வடிவையுடைய பார்வதி, பங்குஉடை-பாதியுடம்பின் கண்ணேயுடைய, அருள்-அருள் வடிவமான மதுகை நாயகன், தொல்லை-முற்காலத்திலே, நஞ்சு-விஷமானது, அடர்-வருத்தலால் (உண்டான), துயர்-துன்பத்தைச், சொல்ல-சொன்னமாத்திரத்து, காத்தவன்-(அதனை

யுண்டு) துன்பத்தை நீக்கி காவல் செய்தவன், (ஆதலால்) செல்லுமங்கையர்-மாயையோடு செல்லுகின்ற மகளிரது, விழி-கண்ணாகிய, நஞ்சு செய்வதும்-விடம் செய்யும் துன்பத்தையும், நாம்-நாம், தொழுது-வணங்கி, அவனோடு-அந்த இறைவனோடு, சொல்லுதும்-கூறுவோம், என்பார்-என்று சொல்லுவார்.
[எ—று.]

[கு-ரை.] வல்லி, ஆகுபெயர். முன்னால் நஞ்சால் வந்த துன்பத்தைப் போக்கியவன் இப்போதும் நஞ்சால் வருந் துன்பத்தைக் காப்பான் என்றதால் கருத்துடை அணி. அருள் கருத்துப் பொருளாதலின் இறைவனை அருள்வடிவென்றார் பிறரும். மங்கையர் கோயிலுக்குச் செல்பவராதலால் காட்சி இன்பத்தைக் கருதிச்செல்லுகின்ற காளையர்களும் தாங்கள் செல்வதற்கொருவழி சொல்லிக்கொண்டார்கள் என்றும் ஆகும். நீதிபதி யிடத்தில் தாங்கள் சொல்லி அவர் கூப்பிட்டு விசாரிக்கவேண்டிய வேலையின்றி இவர்களே அங்கு செல்கின்றாராதலின் நாமும் அங்கேயே சென்று சொல்வோம் என்று கூறலும் ஆகும். (35)

[காளையர்கள் தங்களுக்குள் உரையாடல்]

இக்குழு மகளிருள் யார்வ னப்பினால்
மிக்கவ ளெனத்தமை வினவி னாரெதிர்
முக்கனி களுட்சுவை முதிர்ச்சி பெற்றுள
தெக்கனி யதனைநீ ரியம்புவீ ரென்பார்.

[இ—ள்.] இக்குழு மகளிருள்-இந்த கூட்டமாகிய மங்கையர்களுக்குள்ளே, வனப்பினால்-அழகினாலே, மிக்கவள்-அதிகமானவள், யார்-எவள், என-என்று, தமை-தங்களை, வினவினார்-கேட்பவர்களுக்கு, எதிர்-மறுமொழியாக, முக்கனிகளுள்-மூவகைப் பழங்களுள், சுவை-மதுரம், முதிர்ச்சிபெற்றுளது-முதிர்ந்துள்ளது, எக்கனி-எந்தப்பழம், அதனை நீர்-அதனை நீங்கள், இயம்புவீர்-சொல்லுங்கள், என்பார்-என்று சொல்லுவார்.
[எ—று.]

[கு-ரை.] முக்கனி வாழை, மா, பலா என்பன. (36)

[இதுவும் காளையர் கூற்று]

கரும்பினு மினியசெங் கயற்க ணாரிளங்
குரும்பையும் பயன்படாக் கோவை தன்னையும்
விரும்பினம் உலகர்முன் வீணி னெஞ்சகம்
வருந்துதல் நகைதரும் மடமையே என்பார்.

[இ-ள்.] கரும்பினும் இனிய-கரும்பினும் இனிமை செய்கின்ற, செம் கயல் கண்ணார்-சிவந்த கயல்மீன்போலும் கண்ணையுடைய மகளிரது, பயன்படா-உபயோகமாகாத, இளம் குரும்பையும்-(முலைகளாகிய) இளமையாகிய குரும்பையையும், கோவை தன்னையும்-இதழாகிய கொவ்வைக் கனியையும், விரும்பினம்-விருப்பமுடையவராய், உலகர்முன்-உலகிலுள்ள மாந்தருக்கு முன்னால், வீணில்-பயனில்லாமல், நெஞ்சகம்-மனம், வருந்துதல்-வருத்தமடைதற்குக் காரணம், நகை தரும்-யாவரும் நகைக்கத்தக்க, மடமையே-நம்முடைய அறியாமையே, என்பார்-என்று சொல்லுவார். [எ-று.]

[கு-ரை.] பொருளைச் சொல்லாமல் உவமையே கூறப்பட்டது. குரும்பையென்றும் கோவை எனறும் கூறிய அதனால் உருவக உயர்வு நவிற்சி அணி. கற்புடை மகளிர் நலன் கொண்டார்க்கல்லது பிறர்க்குப் பயன் தாராதாதலால் பயன்படா என்றார். கிட்டாதாயின் வெட்டென மற என்றபடி மறக்காது நினைந்து வருந்துதல் மடமை யென்றார் என்க. (37)

இதுவுமது

விடங்குலா மதர்விழி விரைத்தண் பூங்குழல்
நுடங்குநூ லிடைப்பிறை நுதற்பொன் கொம்பனார்
குடங்கணா ணுறுமிளங் குவவுக் கொங்கைபோல்
உடம்பெலாம் மூடினால் உய்யலாம் என்பார்.

[இ-ள்.] விடம்-நஞ்சானது, குலாம்-பொருந்தப்பெற்ற, மதர்-செருக்கினை யுடைய, விழி-கண்களையும், விரை-நறுமணம் பொருந்திய, தண்-குளிர்ந்த, பூங்குழல்-மலர் வனைந்த கூந்தலையும், நுடங்கு-துவள்கின்ற, நூல் இடை-நூல்போலுள்ள இடையையும், பிறை நுதல்-பிறைபோலுள்ள நெற்றியையும் உடைய, பொன் கொம்பனார்-அழகிய பூங்கொடிபோல்பவர், குடங்கள்-கும்பங்கள், நாணுறும்-நாணத்தக்க, இளம்-இளமையும், குவவு-திரட்சியும் உடைய, கொங்கைபோல்-முலைகளை மூடிக்கொண்டிருப்பதுபோல, உடம்பெலாம்-வடிவம் எல்லாம், மூடினால்-மூடிக்கொள்வார்களானால், உய்யலாம்-பிழைக்கலாம், என்பார்-என்று சொல்லுவார்கள். [எ-று.]

[கு-ரை.] பொன் கொம்பனார்-பொன்னாலான கொடிபோல்பவர் எனவும் ஆம். குலாவும் என்பது குலாம் என விகாரமாய் நின்றது (38)

[மாயை கோயிலின் அருகு சேறல்]

இவ்வணங் கருத்தழிந் திளைஞர் மாழ்குற
கொவ்வையங் கனியிதழ் கோதை மாரொடு
மௌவலங் குழலெழில் மாயை யென்பவள்
அவ்வரன் கோயிலின் அருகு போயினள்.

[இ—ள்.] இவ்வணம்-இந்த விதமாக, இளைஞர்-காளையர்கள், கருத்து-மனமானது, அழிந்து-சிதறலுற்று, மாழ்குற-மயங்காநிற்ப, கொவ்வை-கோவையினது, அம்கனி-அழகிய பழம்போன்ற, இதழ்-அதரத்தையுடைய, கோதைமாரொடு-மங்கையர்களோடும், மௌவல் அம்குழல்-மல்லிகை மாலை யணிந்த அழகிய கூந்தலையுடைய, எழில்-அழகிய, மாயை என்பவள்-மாயை என்று சொல்லப்பட்ட அரசிளங்குமரியானவள், அவ் அரன்கோயில்-அந்த மதுகேசர் ஆலயத்தின், அருகு-அண்மையின் கண், போயினள்-சென்றாள். [எ—று.]

[கு-ரை.] இவ்வண்ணம் என்பது இவ்வணம் எனக் குறைந்து நின்றது செய்யுளாதலின். இளைஞர் அழிந்து மாழ்குற போயினள் என வினை முடிவு செய்க. மாழ்குற என்னும் செயவென்னெச்சம் போயினள் என்னும் பிற கருத்தா வினைகொண்டு முடிந்தது. (39)

[மாயை ஆலயத்தினுட் புகுதல்]

சிவிகையி னிழிந்துதன் சென்னி தாங்கிய
குவிகையி னொடுபுகாக் கோபு ரத்துள்வெண்
கவிகைய னெனுமம காரன் கன்னிகட்
செவிகையி னணிபர னெதிர்சென் றாளரோ.

[இ—ள்.] வெண் கவிகையன் எனும்-வெண்மையான குடையை உடையவனென்று சொல்லப்படுகிற, மமகாரன்-மமகார மஹா அரசனுடைய, கன்னி-மகளாகிய மாயையானவள், சிவிகையின் இழிந்து-தண்டிகையினின்றும் கீழே இறங்கி, தன் சென்னி தாங்கிய-தனது தலையின்கண் தாங்கப்பட்ட, குவிகையினொடு-குவிந்த கையுடனே (கும்பிட்ட கையுடனே), கோபுரத்து உள்-ஆலயத்தின் கோபுர வாயிற்படியினுள், புகா-புகுந்து, கட்செவி-பாம்பினை, கையின்-கையின் கண், அணி-அணிந்துள்ள, பரன்-இறைவனது, எதிர் சென்றாள்-சந்நிதியிற் சென்றனள். [எ—று.]

[கு-ரை.] வெண்கவிகை-தன்னோடியையின்மை நீக்கிய விசேடம். கட்செவி-கண்ணையே காதாக உடையதெனப் பாம்புக்குக் காரணக்குறி. இறைவன் தலை கை உடல் இடை முதலிய எல்லாவிடத்தும் பாம்பே யணிந் திருத்தல்பற்றி கட்செவி+கையின் என்றார். கோவிலுள் புகும்போதே இரண்டு கைகளையும் தலைக்குமேல் கும்பிட்டுச் செல்லவேண்டும் என்ற செயல் நினைவிலிருத்தற்பாலது. தலையாரக் கும்பிட்டு என்றதுங் காண்க. புகா என்பதும் செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம் உடன்பாட்டை யுணர்த்தி சென்றாள் எனும் வினைகொண்டு முடிந்தது. (40)

[மாயை பூசனை செய்யத் தொடங்குதல்]

வேண்டிய அனைத்தையும் எவல் மெல்லியர்
ஆண்டருகுறவமைத் தளிப்ப மாயைதான்
காண்டகு நுதல்விழிக் கடவுட் கன்புளம்
பூண்டனள் அருச்சனை புரிதல் மேயினாள்.

[இ-ள்.] மாயை-மாயையானவள், வேண்டிய-பூசைக்கு வேண்டிய, அனைத்தையும்-எல்லாவற்றையும், ஏவல்-பணி விடை செய்யும், மெல்லியர்-மென்மைத்தன்மை வாய்ந்த மங்கை யர், ஆண்டு-அவ்விடத்தில், அருகுற-பக்கத்திலே, அமைத்து-நிறைத்து வைத்துக்கொண்டு, அளிப்ப-உதவாநிற்ப, காண்தகு-காணத்தகுந்த, நுதல்விழி-நெற்றியில் கண்ணையுடைய, கட வுட்கு-மதுகேசருக்கு, உளம்-மனத்தின்கண், அன்பு பூண்ட னள்-அன்பு பூண்டவளாகி, அருச்சனை-பூசனை, புரிதல்-விருப்பத் தோடு செய்தல், மேயினாள்-தொடங்கினாள். [எ-று.]

[கு-ரை.] தான் அசை. மனத்தின்கண் அன்பிலாமல் பூசை செய்வ தால் பயனில்லையாதலின் இவளும் அன்புபூண்டனள். "ஆசறுமனத்தெழு அன்பையன்றியே, பூசனை யுவக்கிலென்புராரி சென்னிமேல் வீசுறு திரையி னும் மிக்கதோ சொலாய், ஊசல்செய் மனமுடை ஒருவனுட்டுநீர்" என்றார் பிறிதோரிடத்தும். பூண்டனள் முற்றெச்சம். "வினைமுற்றே வினையெச்சம் ஆகலும் குறிப்புமுற்று ஈரெச்சமாகலும் உளவே" என்ற விதிப்படி முற் றெச்சமாயிற்று. அளிப்ப எனும் செயவென் வாய்பாட்டெச்சம் புரிதல் என்னும் தொழிற்பெயர்கொண்டு முடிந்தது. (41)

[இறைவனுக்கு மாயை திருமுழுக்காட்டுதல்]

ஆதிய வரன்முறை செய்த ருக்கியம்
ஆதிய கொடுபர னணிந்தி ருந்தபூ
ஆதிய களைந்து மந்திர மறைந்துநம்
ஆதியை மஞ்சனம் ஆட்டல் மேயினாள்.

[இ-ள்.] ஆதிய-(பூசைக்கு) முதலிலே செய்யவேண்டியதையெல்லாம், வரன்முறை-விதிப்படி, செய்து-செய்து, அருக்கியம் ஆதியகொடு-அருக்கியம் முதலானவைகளைக்கொண்டு, பரன்-இறைவன், அணிந்து இருந்த-அணிந்துகொண்டிருந்த, பூ ஆதிய களைந்து-மலர் முதலானவைகளைக் கழித்து, மந்திரம் அறைந்து-மந்திரம் சொல்லி, நம் ஆதியை-நமது மதுகைநாதனை, மஞ்சனம் ஆட்டல்-திருமுழுக்காட்டுதல் செய்தலை, மேயினாள்-பொருந்தினாள். [எ-று]

[கு-ரை] முதனாள் செய்தவை நிர்மாலியம் ஆனதால் அவற்றைக் களைந்து என்றார். அருக்கியம் மந்திர நீர் இறைத்தல். மந்திரம் என்பது நிறைமொழிமாந்தர் ஆணையிற்கிளந்த மறைமொழிதானே மந்திரம் என்ப. மந்திரம் சொல்லி நீர் இறைத்தல் பூசைக்குமுன் செய்வது மரபு. (42)

[எண்ணெய் முதலியன முழுக்காட்டுதல்]

வேறு

தயிலமுட னிடத்தைந் தையமுத
நறுநெய்பா றயிர்செ ழுந்தேன்
வயலினெழு கரும்புடைத்துக் கொள்சாறு
பழம்பிழிந்த மதுரச் சாறு
புயலளவு தாழையிள நீர்நறுஞ்சந்
தனக்குழம்பு போற்று நூலின்
இயலினமை தபனமிவை யொன்றன்பி
னொன்றுமுறை யிறைவற் காட்டி.

[இ-ள்.] தைலம்-எண்ணெயும், ஆன்-பசுவினின்றும் உண்டாகிற, ஐந்து-ஐந்தினையும் (பஞ்சகௌவியம்) ஐ யமுதம்-பஞ்சாமிர்தமும், நறுநெய்-நல்ல நெய்யும், பால்-பாலும், தயிர்-தயிரும், செழுந்தேன் - செழித்துள்ள இடத்தினின்றும் கொணர்ந்ததேனும், வயலின்எழு-வயலிலே உண்டாகி எழுந்த, கரும்பு-கரும்பினை, உடைத்துக்கொள்சாறு-பிழிந்து எடுத்த சாறும், பழம்-பலவகைக் கனிகளை, பிழிந்த-பிழிந்து எடுக்கப்பட்ட, மதுரச்சாறு-இனிப்பையுடைய சாறும், புயல் அளவு-மேக மண்டலத்தை அளாவிய, தாழை-தென்னையிலிருந்து உண்டான, இளநீர்-இளநீரும், நறும்-நல்ல மணமுள்ள, சந்தனக்குழம்பு-சந்தனக்குழம்பும், போற்றும்-போற்றுகின்ற, நூலின்-நூலினது, இயலின்-விதியின்படி, அமை-அமைக்கப்பட்ட, தபனம்-கலசநீரும், இவை-இவைகளை எல்லாம், ஒன்றன்பின் ஒன்று-ஒன்றுக்குப்பின்னால் ஒன்றாக, முறை-முறையே, இறைவற்கு-மதுகேசனுக்கு, ஆட்டி-அபிடேகித்து. [எ-று.]

[கு-ரை.] பால், தயிர், நெய், கோநீர், கோச்சாணி ஆகிய ஐந்தும் சேர்ந்தது பஞ்சகௌவியம். வாழைக்கனி, பால், தயிர், நெய், சர்க்கரை ஐந்தும் கூட்டிச்சேர்த்தது பஞ்சாமிர்தம், பஞ்சகௌவியத்தை அபிடேகம் செய்தலும், பின்னர் பால், தயிர் முதலியவற்றைத் தனித்தனியேசெய்தலும் மரபு. "நல்லதிலநெய்யாடி ஆன் இடத்து ஐந்தாடி நவையில் ஐயமுதமாடி நல்கு காரணகாரிய முறையின் அன்றியே நறுநெய் பால் தயிர் ஆடியே மெல்லமலர் மதுவாடி யின்கழைச் சாருடி மென்பழச்சாருடியே விழையும் இளநீராடி ஆரக்குழம்பாடி விதியின் அமைதபனம் ஆடி" என்று இவர் பிறிதோரிடத்துக் கூறுவதும் ஒப்புநோக்கற்பாலது. குடத்தின்கண் நீர் நிறைத்து மாவிலை வைத்து தேங்காயை அதன்மேல்வைத்து தருப்பையிட்டு மறைகூறி வைத்திருக்கும் நீர் கலசநீர். இதனைக் குடநீர் என்றும் கூறப் படும். இதனைக் கடைசியில் அபிடேகித்தல் மரபு. சொன்ன முறையி னின்றும் மாருது வரிசையாக அபிடேகிக்கவேண்டும் என்பதற்காக முறையே என்ருர். (43)

[சந்தனம், அக்ஷதை சாத்தல்]

சங்குலவு மென்கைநெடுஞ் சுடரிலைவேல்
விழிமாயை சாம்பற் பூத்தும்
மங்கலமா கியமேனி முழுவதுஞ்சந்
தனத்திரளை மலியச் சாத்தித்
திங்களெனும் ஒருசிறுகூன் முதுகிப்பி
யீன்றதெனச் சினவெள் ளேற்ருன்
கங்கைமுடி மீதினில்வெண் ணிலவெறிக்கும்
நித்திலவக் கதையும் இட்டாள்.

[இ-ள்.] சங்கு-வளையல்கள், உலாவும்-உலாவுகின்ற, மென் கை-மென்மையான கைகளையும், நெடும்-நீண்ட, சுடர்-ஒளிவிடு கின்ற, இலை-இலைத்தொழில் அமைந்த, வேல்-வேலாயுதம் போன்ற, விழி-கண்களையுடைய, மாயை-மாயையானவள், சாம் பல் பூத்தும்-நீறு மேலே பூத்திருந்தும், மங்கலமாகிய மேனி முழுவதும்-மங்களகரமாக உள்ள உடம்பு முழுவதிலும், சந்த னத்திரளை-சந்தன உருண்டைகளை, மலிய-நிறைய, சாத்தி- அப்பி, திங்கள் எனும்-சந்திரன் என்கின்ற, சிறுகூன் முதுகு- சிறிய வளைந்த முதுகையுடையதுமான, ஒரு இப்பி-ஒரு சிப்பியி ஞலே, ஈன்றது என-பெறப்பட்டது என்று சொல்ல, சினம்- முனிவையுடைய, வெள்-வெண்மையான, ஏற்ருன்-எருது வாகனம் உடைய இறைவனது, கங்கை-கங்கையைத் தரித் துள்ள, முடிமீதினில்-தலையினிடத்து, வெண் நிலவு எறிக்கும்- வெள்ளிய ஒளியைப் பரப்புகின்ற, நித்திலம்-முத்தாலான, அக் கதையும்-அக்ஷதையினையும், இட்டாள்-இட்டனள். [எ-று.]

[கு-ரை.] இறைவனது மேனி இறுதியைக் காட்டுகின்ற சாம்பல் பூத்திருந்தும்கூட மங்களகரமானது என்று கூறினர்; நஞ்சுண்டும் இறைவன் சாவாதிருக்க அமுதுண்டும் தேவர் இறந்தார் என்பதுபற்றி. முத்துக்களை தலையில் அணிதல் மரபு. அஃதிலாதார் இப்போது அரிசியை மஞ்சள் கலந்து இடுவர் அதனை அக்ஷதை என்று சொல்வர். முன் செய்யுளில் உள்ள ஆட்டி இப்பாட்டிலுள்ள சாத்தி இட்டாள் என வினைமுடிவு செய்க. இவ்விரண்டு செய்யுளும் குளகம். (44)

[பூமாலை ஆடை அணிகலன் அணிதல்]

பிறைதவழு நெடுஞ்சடையெம் பெருமானைச்
சார்ந்துசர்ப்ப பிராந்தி மேவ
நறுமலர்மென் றொடைமாலை பலவணைந்து
கூர்ங்கோட்டு நால்வாய்ச் சீற்றக்
கறையடியீ ருரிசுமந்த திருமேனி
அழகுறநுண் கலைபு னைந்திட்
டிறைவனெனும் பணிநாண வவிர்மணிப்பூண்
பற்பலவும் எடுத்த ணிந்தாள்.

[இ—ள்.] பிறை - இளந்திங்கள், தவழும் - தவழுகின்ற, நெடும்-நீண்ட, சடை-சடையையுடைய, எம்பெருமானை-எமது தலைவனுகிய இறைவனை, சார்ந்து-அடுத்து, சர்ப்ப பிராந்தி மேவ-சர்ப்பம் என்னும் மயக்கம் உண்டாக, நறுமலர்-நல்ல மணமுற்ற மலர்களாலான, மென்தொடைமாலை-மென்மையாக தொடுக்கப்பட்ட மாலைகள், பலவணைந்து-பலவற்றைச்சூடி, கூர்ங்கோட்டு-கூரிய தந்தங்களையும், நால்வாய்-தொங்குகின்ற வாயினையும், சீற்றம்-கோபத்தையும், கறைஅடி-உரல்போன்ற அடிகளையுமஉடைய யானையினது, ஈர்உரி-இழுத்து உரிக்கப்பட்ட போர்வையை, சுமந்த-தாங்கிய, திருமேனி-சிறந்த உடம்பு, அழகுற-அழகு விளங்கும்படி, நுண்கலை-நுட்பமும் மென்மையும் உடைய இழையாலாகிய ஆடை, புனைந்திட்டு-தரித்து, இறைவன்-கடவுளது, எலும்பு அணி-எலும்பாகிய ஆபரணங்கள், நாண-வெட்கமுறும்படி, அவிர்-விளங்காநின்ற, மணிப்பூண்-மணிகளாலான ஆபரணங்கள், பற்பலவும்-பலவற்றையும், எடுத்து அணிந்தாள்-எடுத்துச் சார்த்தினுள். [எ—று.]

[கு-ரை.] மலரின் மணத்தினுலும் மயக்கம் உண்டாகும் என்பதுபற்றி சர்ப்பத்தினுல் உண்டாகும் மயக்கம் மலர்மாலைக்கும் கூறப்பட்டது பாம்பிற்குப் பதில் மலர்மாலையும், யானைத்தோலுக்குப்பதில் நுட்பமான

ஆடையையும், எலும்பு அணிக்குப்பதில் மணி அணிகளையும் சார்த்தினுள் மாயை. இறைவனுக்கு, "மேலெலாம் எலும்பும் தோலுமாய்க் கிடத்தல்" என்றதாலும் ஆடை தோலென்பதும் அணி எலும்பென்பதும் பெறப்படும். சுமந்த எனும் பெயரெச்சம் மேனி என்ற பெயர்கொண்டது. புனைந்திட்டு, ஒரு சொல் எழுந்து என்பது எழுந்திருந்து என்றாற்போல. நாலுதல்-தொங்குதல். (45)

[மாயை இறைவனுக்கு கத்தூரி அணிதல் நிவேதனம் செய்தல் வெள்ளிலை ஈதல்]

நற்றூமங் கமழ்நித்திய கல்லியாணி
மணாளர்க்கு நானஞ் சாத்திப்
பெற்றூனங் கடிதலிலாக் கறிமருவு
போனகங்கள் பிச்சை யல்லா
மற்றூணொன் றில்லாத பெருந்தகைக்கு
நிவேதித்து வண்டு கிண்டி
யுற்றூதுங் கடிமலர்மென் குழன்மடவாள்
வெள்ளிலையும் உவந்த ளித்தாள்.

[இ-ள்.] நல்தூமம்கமழ்-நல்லபுகை கமழ்கின்ற, நித்திய கல்லியாணி-நித்திய கல்யாணி என்னும் பெயரையுடைய உமா தேவியினது, மணாளர்க்கு-கணவனுக்கு, நானம் சாத்தி-கத்தூரி யணிந்து, ஊனம்பெற்று-குற்றம்பொருந்தியதால், கடிதல்-நீக்கப்படுதல், இலா-இல்லாத, கறிமருவு-கறிகள் பொருந்திய, போனகங்கள்-சிறந்த உண்டிகளை, பிச்சை அல்லால்-பிச்சை யுண்டியல்லாத, மற்றுஊண்-வேறு உணவானது, ஒன்று இல்லாத-ஒன்றுகூட இல்லாத, பெருந்தகைக்கு-கடவுளுக்கு, நிவேதித்து-நிவேதனம்செய்து, வண்டு கிண்டி-வண்டுகள் குடைந்து, உற்று-அடைந்து, ஊதும்-ஒலிக்கின்ற, கடிமலர் மென்குழல், வாசனையான மலரையுடைய கூந்தலையுடைய, மடவாள்-மாயை யானவள், வெள்ளிலையும்-வெற்றிலையையும், உவந்து-மகிழ்ச்சி யோடு, அளித்தாள்-கொடுத்தாள். [எ-று.]

[கு-ரை.] நல்+தூமம்=நற்றூமம் என்றாகியது "லளவேற்றுமையிற் றடவும் அல்வழி அவற்றோடுறழ்வும" என்பதும், "னலமுன்றனவும் ணளமுன்டணவும் ஆகும் தநக்கள் ஆயுங்காலே" என்பதும் விதி. இலாக்கறி ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். இவ்வூர் சுவாமிபெயர் மதுகைநாயகன் என்றாற்போல அம்மன்பெயர். நித்திய கல்லியாணி அம்பாள் என்பது. பிச்சையெடுத்துண்ணினும் இறைவன் பெருமைக்கு இழுக்காகாது என்பதற்கு பெருந்தகை என்றார். (46)

[ஆடி முதலியன காட்டல்]

நறியபுகை செழுஞ்சுடர்மென் சிவிறியொடு
வெண்கவரி நாடும் ஆடி
செறிமுறையி னெடுங்கடல்போ லியமுழங்க
நின்றுதவி நிமலன் றன்னைப்
பிறைநுதலில் வகைபூசைப் புரிந்துதுதி
பலசெய்து பெருகும் அன்பால்
மறைபுகலும் அஞ்செழுத்தும் அறைந்துவளம்
வந்துமுனம் வணங்கிப் பின்னர்.

[இ—ள்.] நறியபுகை-நறுமணமுள்ள தூபமும், செழுஞ்சுடர்-செழித்த விளக்கும் (தீபமும்), மென் சிவிறி-மெல்லிய விசிறியும், வெண்கவரி-வெண்மையான சாமரமும், நாடும்-நிழலைப் பார்த்தற்குரிய, ஆடி-கண்ணுடியும், நெறி முறையின்-விதிப்படி, நெடுங் கடல்போல்-நெடிய கடலைப்போல, இயம் முழங்க-வாத்தியங்கள் ஒலிக்க, நின்று உதவி-முன்னின்று சமர்ப்பித்து, நிமலன் தன்னை-கடவுளை, பிறை நுதல்-பிறைபோன்ற நெற்றியையுடைய மாயையானவள், இவ்வகை-இந்தவிதமாக, பூசனை புரிந்து-பூசையை விருப்பமாகச்செய்து, துதி பலசெய்து-தோத்திரம் பலவற்றைச் சொல்லி, பெருகும் அன்பால்-மிகுகின்ற அன்பினுல், மறை புகலும்-வேதத்தாற் சொல்லப்படுகின்ற, அஞ்சு எழுத்தும்- பஞ்சாட்சரத்தையும், அறைந்து-சொல்லி, வலம்வந்து-வலமாகச் சுற்றிவந்து, முனம் வணங்கி-எதிரே நின்று வணக்கம்செய்து, பின்னர்-மேலும். [எ—று.]

[கு-ரை.] பிறைநுதல்-உவமைத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. "வேதநான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் நமசிவாயவே" என்றுர் ஆதலின் மறைபுகலும் ஐந்தெழுத்தென்றுர். நறிய புகை. இனமுள்ள அடை. பிறிதின் இயைபு நீக்கிய விசேடம் என்பர் வடநூலார். அஞ்செழுத்தை அன்பால் ஓதவேண்டும் என்றுர்; காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதுவார் தமை என்றுர் பிள்ளையார் ஆதலின். (47)

[மாயை நடிக்கும் அரங்கில் செல்லுதல்]

அன்பினுள முருகிவிழி சொரிநீரா
லெழுதியமை அழிந்தி ருப்பப்
பொன்புரையும் வடிவமயிர் பொடிப்பவெயர்
வானுதலின் பொட்ட ழிந்து

மின்புரையு நெடிஞ்சடிலப் பொன்மலையி
னனந்த வெள்ளமூழ்கி
இன்பினடிப் பவளென்ன வந்துநட
நவிலரங்கி லெய்தி னாள்.

[இ—ள்.] அன்பின்-அன்பினால், உளம் உருகி-மனம் நெகிழ்ந்து, விழிசொரி நீரால்-கண்களால் சொரியப்பட்ட நீரினாலே, எழுதியமை-எழுதி இருக்கின்றமையானது, அழிந்திருப்ப-கரைந்திருக்க, பொன்புரையும்-பொன்னை ஒத்துள்ள, வடிவம்-திருமேனியின், மயிர் பொடிப்ப-கேசங்கள் சிலிர்க்க, வெயர்வால்-வேர்வையினாலே, பொட்டழிந்து-நெற்றியிலுள்ள பொட்டானது அழிந்து, மின்புரையும்-மின்னலை ஒத்திருக்கும், நெடும்-நீண்ட, சடிலம்-சடையையுடைய, பொன்மலையின்-பொன் மலைபோலுள்ள இறைவனது, ஆனந்த வெள்ளம்-சிவானந்தமாகிய நீர்ப்பெருக்கில் மூழ்கி, இன்பில் நடிப்பவள் என்ன-முழுகின இன்பத்தால் நடிப்பவளைப்போல, நடம் நவில்-நடனம் செய்கின்ற, அரங்கில்-அவையில், வந்து-வந்தனளாகி, எய்தினள்-அடைந்தாள். [எ—று.]

[கு-ரை.] அன்பு வெளிப்படுவது விழிநீரால் அறியப்படும் என்பதற்கேற்ப அன்பினுள முருகிவிழி சொரிநீர் என்றார். அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர் புன்கணீர் பூசல்தரும் என்பதும் அறியத்தக்கது. நெடுஞ்சடிலம் பொன்மலை என்றமையால் இறைவன் எனப்பட்டது. மூழ்கி என்றதற்சேற்ப வெள்ளம் என்றும், மலையினின்றே வெள்ளம் பெருகுதல் பெருவழக்காதலின் மலையின் ஆனந்தவெள்ளம் என்றார். மலையின் ஐந்தாம் உருபு நீக்கப்படுபொருள். ஆனந்தவெள்ளத்தழுந்துவார் இன்பமிகுவராதலின் இன்பில் நடிப்பவள் என்றார். (48)

[மாயை நடித்தற்கேற்ற உடை முதலியவையணிதல்]

அரங்கினிடை நடநவிலும் செயற்கேற்ப
உடையணிந்திட் டரும்பை வென்ற
குரும்பைமுலை யினைவம்பு கொண்டணிந்து
தவங்களெலாம் கொள்ளை கொள்ளும்
கருந்தடங்கண் மலர்க்கோதை சிற்றடியிற்
கைபுனையக் கற்ற மாதர்
சுரும்புமுரல் மல்லிகைமென் போதனைய
சிறுசதங்கை துளங்க ஆர்த்தார்.

[இ-ள்.] கை-கைகளால், புனைய-அலங்கரிக்க, கற்றமாதர்-வல்லமகளிர், அரங்கின் இடை-நாடக மண்டபத்தின் நடுவில், நடம்-நடனம், நவிலும்-செய்யும், செயற்கு-தொழிலுக்கு, ஏற்பதக, உடையணிந்திட்டு-ஆடையை உடுத்திட்டு, அரும்பை வென்ற-தாமரை முதலிய அரும்புகளைப் பிறகிடச்செய்த, குரும்பை முலையினை-தென்னங்குரும்பைபோன்ற முலைகளை, வம்புகொண்டு-கச்சினால், அணிந்து-இருக்கி, தவங்கள் எல்லாம்-துறவிகளின் தவங்களை யெல்லாம், கொள்ளைகொள்ளும்-கவர்ந்துகொள்ளுகின்ற, கரும்தடம்கண்-கரிய பெரிய கண்களையும், மலர்க்கோதை-மலரையும் உடைய மாயையினது, சிற்றடியில்-சிறிய அடிகளிலே, சுரும்பு-வண்டுகள், முரல்-ஒலிக்கின்ற, மல்லிகை-மல்லிகையினது, மென்போது அனைய-மெல்லிய மலர்கள்போல் உள்ள, சிறு சதங்கை-சிறிய சதங்கைக் கோவைகளை, துளங்க-ஒலி செய்யும்படி, ஆர்த்தார்-கட்டினார்கள். [எ-று.]

[கு-ரை.] குரும்பை முலை உருவகம். கருந்தடங்கண், சினையொடு குணமிரண்டடுக்கல் செய்யுளாறு. கோதை அன்மொழித்தொகை. மாதர் அணிந்திட்டு, அணிந்து, துளங்க ஆர்த்தார் என வினை முடிபு செய்க. நவிலல்-பலகால் செய்தல். கொள்ளைகொள்ளும் கருந்தடங்கண் என்றார் தவத்தைக்கொள்ளுதல் கண்களேயாதல்பற்றி. (49)

[மாயை நடனம் ஆடல்]

மாயைமுலைக் கிணையெனவென் முன்றானும்
வந்ததென வலக்கைத் தாளம்
போயிடக்கைத் தாளமதைப் பொறாமையினால்
தாக்குதல்போல் புடைத்தொலிப்ப
வாயுரைக்கு மொழிபோலத் தண்ணுமைசெங்
கைகளால் வார்த்தை சொல்ல
மேயகலைப் பெண்விளர்ப்ப எழில்மாதர்
இசைபாட வீணை கொண்டு.

[இ-ள்.] மாயை முலைக்கு இணையென-மாயையினுடைய முலைகளுக்கு ஒப்பாவேனென்று, என்முன்-எனக்குமுன், தானும் வந்தது என-தானும் வந்தது என்று நினைத்து, பொறாமையினால்-அழுக்காற்றினாலே, வலக்கைதாளம்போய்-வலதுகையிலே உள்ள தாளமானது சென்று, இடக்கைத் தாளமதை-இடதுகையிலே உள்ள தாளத்தை, தாக்குதல்போல்-தாக்குதலைப் போல, புடைத்து-அடித்து, ஒலிப்ப-ஒலிசெய்யா நிற்கவும், வாய்

உரைக்கும் மொழிபோல-வாயால் சொல்லப்படுகின்ற சொற்களைப்போல, தண்ணுமை-மத்தளமானது, செங்கைகளால்-சிவந்த கைகளால், வார்த்தை சொல்ல-சொற்களைச் சொல்லாநிற்கவும், மேயகலைப்பெண்-பலராலும் விரும்பப்பட்ட கலைமகளானவள், விளர்ப்ப-நாணும்படி, எழில்மாதர்-அழகினையுடைய மகளிர், வீணைகொண்டு-வீணையையேந்தி, இசைபாட-பண்பாடா நிற்கவும். [எ-று.]

[கு-ரை.] தாளத்தை முலைகளுக்கு உவமையாகக் கூறுதல் மரபு. "தாளத்தனம்" என்றார் பிறரும். இரண்டு கையாலும் போடப்படும் தாளத்தை மாயையின் முலைக்கு இணையாக வந்ததென்று கருதி மாயையினது கைகள் பொறாமைகொண்டு தாக்குதலைப்போல என்று கூறியதனால் தற்குறிப்பேற்றம். ஒலிப்ப, சொல்ல, பாட என்னும் செயவென்னெச்சங்கள் அடுத்த செய்யுளிலுள்ள நடம்புரியலுற்றாள் என்ற வினைகொண்டுமுடிந்தன. மத்தளத்தில்வல்லோர் வாயினாற் சொல்லப்படுவனவற்றை அதே முறையில் அடித்துக்காட்டல் மரபாகலின் "செங்கைகளால் வார்த்தை சொல்ல" எனப்பட்டது. (50)

### இதுவுமது

என்னொருகை யொடுமற்போர் புரிகவென
நிற்பவள்போல் இடையின் ஓர்கை
மன்னியுற வைத்தொருகை நீட்டியரன்
எதிர்நின்று மாயை வல்லி
கன்னன்மதன் தனைவருக வெனவிளித்தல்
போல்தழங்கக் கால்ச தங்கை
பொன்னினியல் ஒருபாவை நடிக்கின்ற
தென்னநடம் புரிய லுற்றாள்.

[இ-ள்.] மாயைவல்லி-கொடிபோன்ற மாயையானவள், என்ஒருகையோடு-எனது ஒரு கையினோடு, மற்போர் புரிகஎன-நீவிர் கைச்சண்டை செய்ய வருவீராக என்று, நிற்பவள்போல்-நிற்கின்றவளைப்போல, இடையின்-இடையின்கண், ஓர்கை-ஒரு கையினை, மன்னியுறவைத்து-பொருந்தும்படி வைத்து, ஒரு கை நீட்டி-ஒரு கையை நீட்டி, அரன் எதிர் நின்று-மதுகேசன் சந்நிதிக்கு முன்னாலே நின்று, கன்னல் மதன்தனை-கருப்புவில்லையுடைய மன்மதனை, வருக என-அஞ்சாமல் இங்கே வாவென்று, விளித்தல்போல்-அழைத்தலைப்போல, கால் சதங்கை-காலிற்

கட்டப்பட்டுள்ள சதங்கையானது, தழங்க-ஒலிசெய்ய, பொன்னின்-பொன்னினால், இயல்-செய்யப்பட்ட, ஒருபாவை-ஒரு பொம்மையானது, நடிக்கின்றது என்ன-நடனம் செய்கின்றதோ என்று (கண்டோர்) மயங்கும்படி, நடம் புரியலுற்றாள்-நாட்டியம்செய்யத் தொடங்கினாள். [எ—று.]

[கு-ரை.] இறைவன் விழியால் மன்மதன் எரிக்கப்பட்டனன் ஆதலாலே அவர் சந்நிதிக்குவர அஞ்சுவான் என்று கருதி அஞ்சாது வருவாயாக என்று கூப்பிடுகின்றதைப்போல சதங்கை ஒலித்தது என்பது நற்குறிப்பேற்றம். புரிக வியங்கோள். (51)

இதுவுமது

வேறு

தண்ணுமை விளங்கலுறு தாளமிசை யெல்லாம்
வண்ணமலர் மெல்லடி வழிச்சதியி னிற்ப
கண்ணிணைகொள் பல்வளைய கைவழி நடப்ப
பெண்ணமுதம் அன்னவள் பெயர்ந்தனள் நடித்தாள்.

[இ—ள்.] தண்ணுமை-மத்தள ஓசையும், விளங்கல் உறு தாளம்-விளங்குதல் பொருந்திய தாள ஓசையும், இசை-ஏனைய ஓசைகளும், எல்லாம்-ஆகிய இவையெல்லாம், வண்ணமலர்-அழகிய மலர்போன்ற, மெல் அடி-மென்மையான அடிகளின், வழிசதியின்-வழித்தாகிய அடைவினுக்கு ஒத்து, நிற்ப-நிற்கவும், கண் இணைகொள்-இரண்டு கண்களின் பார்வைகளும், பல் வளைய-பல வளையல்களையுடைய, கைவழி-கைகளின்வழியே நடப்ப-நடக்கவும், பெண் அமுதம் அன்னவள்-பெண்களுள் அமுதம்போல்பவளாகிய மாயையானவள், பெயர்ந்தனள்-புடைபெயர்ந்தனளாகி, நடித்தாள்-நடனம் செய்தாள். [எ-று.]

[கு-ரை.] அடிபெயர்த்தாடுதலுக்கேற்ப மத்தளம் முதலிய ஓசைகள் சென்றன என்பதை "அடிவழிச்சதியின் நிற்ப" என்றார். தண்ணுமை, தாளம் என்பன ஆகுபெயர்கள். பெயர்ந்தனள் முற்றெச்சம். (52)

இதுவுமது

வாயுரைசெய் சொற்பொருள் மலர்க்கரம் உரைப்ப
மீயுயர் விசும்பின் எழு மென்புள்ஒலி எல்லாம்
பாயொளிய பஞ்சுறு பதத்துற மிதித்து
பேயொடு நடித்த இறை பித்துற நடித்தாள்.

[இ—ள்.] வாய் உரை செய்-வாயினால் சொல்லப்பட்ட, சொல்பொருள்-சொற்களின் பொருள்களை, மலர்க்கரம்-மலர் போல் உள்ள கைகளானவை, உரைப்ப-சொல்லாநிற்க, மீ உயர் விசும்பின்-மேலாக உயர்ந்த ஆகாயத்தின்கண், எழும்-செல்லு கின்ற, மென்புள் ஒலி எல்லாம்-மென்மையாகிய பறவைகளின் ஓசையெல்லாம், பாய் ஒளிய-பரவுகின்ற ஒளியையுடைய, பஞ்சு உறு-செம்பஞ்சு பொருந்திய, பதத்து-அடிகளிலிருந்து, உற-உண்டாக, மிதித்து-மிதித்தலைச் செய்து, பேயொடு-பேய்க ளோடு, நடித்த இறை-ஆடிய கடவுள், பித்துற-மயங்கும்படி, நடித்தாள்-நடம் செய்தாள். [எ—று.]

[கு-ரை.] இறைவன் சுடுகாட்டில் பேய்களோடு நடனம் செய்தவ னென்று கூறும் புராண வழக்குப்படி பேயொடு நடித்த இறை என்றார். மலர்க்கரம் உருவகவணி. வல்லூறு முதலிய சில பறவைகளின் ஒலி கேட்பதற்கு அருவருப்பாகவும் இருக்கும் ஆதலின் அதனை விலக்குதற்கு மென்புள்ஒலி என்றார். நடித்த என்னும் பெயரெச்சம் இறை என்னும் கருத்தாப் பெயர் கொண்டது (53)

[மாயை நடனத்தைக் கண்டவரின் செயல்]

அந்தணன் இருங்கலை அணங்கினை உமிழ்ந்தான்
செந்திருவை நேமியிறை சீயென வெறுத்தான்
இந்திரன் அருஞ்சசியை எண்ணிலன் மறந்தான்
பைந்தொடி நடிப்பநரர் பட்டதென் உரைப்பாம்.

[இ—ள்.] பைந்தொடி-பசிய வளையல்களையணிந்த மாயை யானவள், நடிப்ப-இன்னணம் நடனம் செயாநிற்ப, (அதனைக் கண்டு) அந்தணன்-பிரமன், இரும்கலை அணங்கினை-பெருமை பொருந்திய கலைகளின் தெய்வமாகிய நாமகளை, உமிழ்ந்தான்-உமிழ்ந்தனன், நேமி இறை-சக்கரம் ஏந்திய திருமால், செந் திருவை-திருமகளை, சீயென-யாவரும் சீயென்று சொல்லும்படி, வெறுத்தான்-வெறுத்தனன், இந்திரன்-தேவர்கோன், அரும்-சசியை-அரிய இந்திராணியை, எண்ணிலன்-நினையாதவனாகி, மறந்தான்-மறந்தனன், (கடவுளர் தன்மையே இவ்வாறாயது எனின்) நரர் பட்டது-மானிடர் பட்ட பாடுகளை, என்னுரைப் பாம்-என்னவென்று சொல்லுவாம். [எ—று.]

[கு-ரை.] பைந்தொடி-அன்மொழித்தொகை. எண்ணிலன் முற் றெச்சம் (54)

[மாயையின் நடனத்தைக் காண்பவரின் நிலை]

பொன்னெயிலி னொன்றிய புழைக்குள்முகம் வைத்தும்
துன்னிமுனர் நின்றவவர் தோளிடை யிவர்ந்தும்
மின்னென நடம்புரியும் மெல்லியல் மருங்குல்
என்னும்வெளி காணிய இடர்ப்படுவர் மைந்தர்.

[இ—ள்.] மைந்தர்-வலியமைந்த காளையர்கள், பொன் எயி லின்-பொன்னினால் ஆகிய மதிலின்கண், ஒன்றிய-பொருந்திய, புழைக்குள்-துவாரங்களுள், முகம் வைத்தும்-முகத்தை வைத் தும், துன்னி-நெருங்கி, முனர்-முன்னே, நின்றவவர்-நின்றவ ரது, தோளிடை-தோளின்மேலே, இவர்ந்தும்-ஏறியும், மின் என நடம்புரியும்-மின்னல் கொடிபோல ஆடல் செய்கின்ற, மெல்லியல்-மென்மையியல்பினையுடைய மாயையினது, மருங் குல் என்னும்-இடையென்று சொல்லுகின்ற, வெளி-ஆகா யத்தை, காணிய-காணுதற்பொருட்டு, இடர்ப்படுவர்-துன்பப் படுவார்கள். [எ—று.]

[கு-ரை.] மைத்தர் வைத்தும் இவர்ந்தும் காணிய இடர்ப்படுவர் என வினை முடிவு செய்க. முனர்-இடைக்குறை. மெல்லியல்-அன்மொழி. மின்னல் தோன்றி அசைந்து மறைகின்ற தன்மையுடையது என்பது உவமை. மைந்து-வலிமை என்னும் பொருள்பற்றி மைந்தர் என வந்தது. ஆதலின் மைந்தர் என்றதற்கு வலியமைந்த காளையர் என்று பொருள் கூறப் பட்டது. பொன் எயில்-அழகிய மதில் என்றலும் ஆம். (55)

[இளைஞர் செயல்]

பற்றுமன மோடியிரு பார்வையினும் எய்தி
மற்றைய புலன்களை மறந்துநட மாடும்
பொற்றொடியை நண்ணவுயர் பொன்மதி லுறுப்பின்
உற்றபொறி போலசை வொழிந்திளைஞர் நின்றார்.

[இ—ள்.] பற்று மனம்-ஒரு விஷயத்தைப்பற்றியே நிற் கின்ற மனமானது, ஓடி-சென்று, இரு பார்வையினும் எய்தி- இரண்டு பார்வையிலும் அடைந்து, மற்றைய புலன்களை மறந்து-மற்ற செவி முதலாற் காணும் விடயங்களை மறந்து, நடமாடும் - நடிக்கின்ற, பொற்றொடியைநண்ண - மாயையை அடைவான்வேண்டி, உயர்-உயர்வாகிய, பொன்மதில் உறுப் பின்-பொன்னலாகிய மதிலினது உறுப்பின்கண்ணே, உற்ற-

தங்கிய, பொறிபோல்-பாவைகளைப்போல, அசைவு ஒழிந்து-அசைவற்று, இளைஞர்-காளையர்கள், நின்றார்-நின்றார்கள். [எ—று.]

[கு-ரை.] பொற்றொடி. அன்மொழி. மனதில் எண்ணுவதைக் கண்கள் அறிவிக்கின்றன என்பதை முன்னடியில் கூறுகின்றார். அசைவு+ஒழிந்து "உயிர்வரின்-முற்றுமற்றோரோவழி" என்பதன்படி உகரம்கெட்டு வருமுயிர் ஏறி முடிந்தது. மனதின் இயல்பு கூறுவார் பற்றுமனம் என்றார். (56)

[மாயைக்கு அருச்சகன் மாலை அளித்தல்]

இளங்கொடி மருங்குலவள் இன்னணம் நடிப்பக்
களங்கனியை வென்றமணி கண்டனை அருச்சித்
துளங்குளி ரருந்தவ னுவந்திறை யணிந்த
வளங்கெழு சந்தமலர் மாலையொ டளித்தான்.

[இ—ள்.] இளங்கொடி-இளமையான கொடி போலும், மருங்குலவள்-இடையை உடையவளாகிய மாயை, இன்னணம்-இத்தன்மையாக, நடிப்ப-நடனஞ்செய்கையில், களம் கனியை-களாவின்பழத்தை, வென்ற-பிற்கிடச்செய்த, மணி கண்டனை-கரிய கழுத்தினையுடைய இறைவனை, அருச்சித்து-பூசித்து, உளம் குளிர்-மனம் குளிர்ந்திருப்பவனான, அருந்தவன்-அரிய தவத்தையுடைய அருச்சகன், உவந்து-மகிழ்ந்து, இறையணிந்த-கடவுள் அணிந்துள்ள, வளம் கெழு-வளப்பம் பொருந்திய, சந்தம்-சந்தனத்தை, மலர் மாலையோடு-பூமாலையோடு, அளித்தான்-கொடுத்தான். [எ—று.]

[கு-ரை.] விஷம் உண்டு கறுத்த கண்டத்தையுடையன் இறைவன் ஆனதினால் களம் கனியைவென்ற மணிகண்டன் என்றார். கருமைக்கு எடுத்துக் காட்டாகப் பலரும் கூறுவது களங்கனி. முப்போதும் திருமேனி தீண்டுவார்க்கடியேன் என்று சுந்தரர் கூறினமையின் அருந்தவன் என்றார். இறைவனை அருச்சித்தலன்றி வேறு எச்செயல் செயினும் மனம் குளிர்ந்து மகிழாது என்பதை அருச்சித்து உளங்குளிர் அருந்தவன் என்றதால் உணர்த்துகின்றார். (57)

[மாயை நடனம் ஆடி இருத்தல்]

வணங்கிமது கேசனிரு மாலியம தேற்றக்
கணங்குமட வாருட னரங்கிடை யிருந்தாள்
நுணங்கிழை மருங்குன்மிக நோமென விரைந்து
பிணங்குறு சதங்கையடு பிள்ளையி னடங்க.

[இ—ள்.] அணங்கு-மாயையானவள், வணங்கி-தொழுது, மதுகேசன் - மதுகைநாதனது, நிருமாலியமது - பிரசாதத்தை, ஏற்று-மகிழ்வோடுபெற்று, மடவாருடன்-மகளிருடனே, அரங்கிடை-நாட்டிய மண்டபத்திலே, நுணங்கு-நுட்பமான, இழை-நூல்போன்ற, மருங்குல்-இடையானது, மிகநோம் என-மிகவும் வருந்தும் என்று, இரைந்து-கூவி, பிணங்குறு-பிணக்குற்ற, சதங்கை-சதங்கையினோசை, அழுபிள்ளையின்-அழுதபிள்ளை அடங்குதலைப்போல, அடங்க-ஒலி அடங்க, இருந்தாள்-வீற்றிருந்தாள். [எ—று.]

[கு-ரை.] கோவிலில் பிரசாதத்தை வணங்கி வாங்குதல் மரபென்பது வணங்கி ஏற்று என்றதால் அறியப்படும். நிர்மாலியம் இறைவன் நைவேத்யம் அணிந்த பூ சந்தனம் முதலியன என்பது முன்னும் உரைக்கப்பட்டது. அங்கு அசை. பிள்ளையின் இன் ஒப்புப்பொருளில் வந்தது. (58)

[அல்லமன் இதனை அறிதல்]

மைத்தட நெடுங்கணிள வல்லிநிகர் மாயை
பத்தியொ டருச்சனை பயின்றதை யறிந்தான்
நித்தனுல கெங்கணு நிறைந்தவ னனாதி
முத்தனரு ளல்லம முதற்பெயரி னானே.

[இ—ள்.] மை-மையிடப்பட்ட, தடம்-பெரிய, நெடும்-நீண்ட, கண்-கண்களையுடைய, இளவல்லி-இளங்கொடியை, நிகர்-ஒத்த, மாயை-மாயையானவள், பத்தியொடு-அன்போடு, அருச்சனை-பூசை, பயின்றதை-செய்துவருவதை, நித்தன்-அழிவில்லாதவனும், உலகு எங்கணும் நிறைந்தவன்-உலக மனைத்திலும் நிறைந்தனும், அனாதி-தோற்றம் இல்லாதவனும், முத்தன்-இயல்பாகவே பாசங்களில் நீங்கினவனும் ஆகிய, அருள்-அருளே வடிவாக உடைய, அல்லம முதற்பெயரினான்-அல்லமனென்னும் முதன்மையான பெயரையுடையவன், அறிந்தான்-உணர்ந்தான். [எ—று.]

[கு-ரை.] நெடுங்கண் மாயை வல்லிநிகர் மாயை என்று கூட்டுக. அன்பொடு கூடிய பூசைக்கன்றி அஃதின்றிச்செயும் பூசை பலகால் செய்யினும் இறைவன் வெளிப்படான் என்பதை இச்செய்யுளால் அறிக. இறைவனது இறைமைக்குணங்கள் பல இதனுள் கூறப்படுதல் காண்க. (59)

மாயை பூசை கதி முற்றிற்று.

ஐந்தாவது

## பிரபுதேவர் வந்த கதி

[மாயை பத்தியோடு பதியை மேவுறுங்கருத்தாற் செய்த பூசனைக்கு மகிழ்ந்து அல்லாமாப்பிரபுதேவர் மனித வடிவமாகி மாயையின் விருப்பத்திற்கு இணங்குபவன்போல வந்தருளிய தன்மையைக் கூறும் பிரிவு என்பது பொருளாகும்.]

நிரந்தரம் அடியார் வேண்டும்
நினைவெலாம் நிரப்பா நின்ற
பெருந்தகை அல்ல மையன்
பெயர்ந்தொரு மனித னாகி
வருந்துறு மயன்ம னத்தால்
வந்தனை புரிந்தா டன்பால்
பொருந்துறு பவன்போற் செய்த
புணர்ப்பினைப் புகன் றுரைப்பாம்.

[இ—ள்.] நிரந்தரம்-எப்போதும், அடியார்-அடியவர்கள், வேண்டும்-விரும்பும், நினைவு எல்லாம்-எண்ணமனைத்தையும், நிரப்பா நின்ற-நிறைவேற்றுகின்ற, பெருந்தகை-பேரருளையுடைய, அல்லமையன்-அல்லமன் என்னும் பெயரையுடைய தலைவன், பெயர்ந்து-தன்னியல்பினின்றும் வேறுபட்டு, ஒரு மனிதன் ஆகி-ஒப்பற்ற மனித வடிவமுடையவனாகி, வருந்துறும்-வருத்தத்தை அடைவிக்கின்ற, மயல்-மயக்கத்தையுடைய, மனத்தால்-மனத்தோடு, வந்தனை-பூசனை, புரிந்தாள் தன்பால்-புரிந்தவளிடத்து, பொருந்துறுபவன்போல் - உடன்படுபவனைப்போல, செய்த-திருவிளையாடல்புரிந்த, புணர்ப்பினை-செய்கையை, புகன்று உரைப்பாம்-விரித்துச் சொல்லுவாம்.
[எ—று.]

[கு-ரை.] வருந்துறு என்பது மெலித்தல் விகாரம். புரிந்தாள் தன் பால் தன்னென்பதுசாரியை. வேண்டுவார் வேண்டுவதை ஈவான் கண்டாய் என்பது வேண்டும் நினைவெலாம் நிரப்பாநின்ற என்பதனோடு ஒப்பு நோக்கத் தக்கது. அல்லம ஐயன் என்பதில் அகரம் தொகுத்தல் விகாரம். ஆகுதல் தன்வினையாதலின் அல்லமன் தானே மனிதவடிவங்கொண்டனன் என்பதை மனிதனாகி என்றார். வருந்துறும் மயல். இயல்புநவிற்சி. (1)

[அல்லமன் மாயைக்கு அருள்செய்வான் எண்ணுதல்]

தாமுறு நுகர்வும் வீடும் தந்திட வல்லன் தானே
யாமென வியம்ப லாலே யல்லம தேவன் உண்மை
நாமமு மறைய வேறோர் நாமமுற் றம்மா யைக்குக்
காமிய வினைப்ப யன்றூன் கடைப்பிடித் தருளவெண்ணி.

[இ-ள்.] தாம் உறும் நுகர்வும்-(உயிர்கள்) தம்மால் அனுபவிக்கப்படுகின்ற போகத்தையும், வீடும்-முத்தியையும், தந்திட வல்லன்-கொடுக்கவல்லவன், தானேயாம் என இயம்பலாலே-தானேயாம் என்று எவரும் சொல்லுதலாலே, அல்லமதேவன்-அல்லமாப்பிரபுதேவன், உண்மை நாமமும் மறைய-அல்லமன் என்னும் உண்மையான பெயரும் மறையும்படி, வேறு ஓர் நாமம் உற்று-மத்தளிகன் என்னும் வேறொரு பெயரையும் அடைந்து, அம்மாயைக்கு-அந்த மாயை என்னும் அரசமகளுக்கு, காமிய வினைப்பயன்-காமிய பூசனைக்குத்தக்க பயனை, தான்-அல்லமன், கடைப்பிடித்து அருள எண்ணி-உறுதியாக அருளிச்செய்ய நினைத்து. [எ-று.]

[கு-ரை] வீட்டின்பத்தையும் தாத்தக்க இறைவனை, நல்ல கணவனை அடைய வேண்டும் என்று காமிய பூசை செய்ததனால் இறைவன் அதற்குத் தக்க வடிவங்கொண்டார். ("காமியாகி நீ அருச்சனை கடைப்பிடித்தமையால் நாமவேல் நெடுங்கண்ணினாய் காமிபோல் நடித்தேன்" என்பர் பிறிதோரிடத்தும்) தானேயாம் - ஒரு சொல் நீர்மைத்து. அ+மாயை=என்பது "எகர வினா முச்சுட்டின் முன்னர், உயிரும் யகரமும் எய்தின் வவ்வும், பிறவரின் அவையும்," என்றபடி அம்மாயை என ஆயிற்று. (2)

[அல்லமன் மத்தளிகன் வடிவம் கோடல்]

கதந்தரு திருநு தற்றீக்
 கண்ணினால் நீறு பட்ட
மதன்செயல் செய்ய வன்னோன்
 வடிவுதான் கொண்ட தென்ன
முதிர்ந்தழ கொழுகு மாறு
 முகங்களுட் சிறந்த வொன்றோ
டெதிர்ந்துள முருக னென்ன
 இளமையோ டழகு வாய்ப்ப.

[இ-ள்.] திருநுதல்-(இறைவன் தனது) அழகிய நெற்றியின் கண்ணுள்ள, கதம்-வெப்பத்தினை, தரு-தோற்றுவிக்கின்ற, தீக்கண்ணினால்-நெருப்பு விழியினால், நீறுபட்ட-நீறாகிப்போன, மதன்-மன்மதனது, செயல்-தொழிலை, செய்ய-செய்வான் வேண்டி, அன்னோன்வடிவு-அந்த மன்மதனது வடிவத்தை, தான் கொண்டது என்ன-தான் கொண்டதைப்போலவும், அழகு முதிர்ந்து ஒழுகும்-அழகு மிகுந்து வழிதற்கிடமாகிய, ஆறுமுகங்களுள் - ஆறுமுகங்களுள்ளும், சிறந்த ஒன்றோடு-

சிறப்பமைந்த ஒரு முகத்தோடு, இளமையோடு அழகுவாய்ப்ப-இளமையும் அழகும் தன்னிடத்தே பொருந்த, எதிர்ந்து உள முருகன் என்ன-தோற்றியுள்ள முருகனைப்போலவும். [எ–று.]

[கு-ரை.] மன்மதன் வடிவம் பெற்றதைப்போலவும் முருகனைப்போலவும் அல்லமன் வடிவங்கொண்டார் என்பதாம். முருகன் என்ற சொல்லிற்கே அழகு இளமை என்பது பொருள் என்பதை மணம் கமழ் தெய்வத்து இள நலம் காட்டி என்பதனாலும் அறிக. இளமை அழகு ஆகிய இரண்டனுள்ளும் இளமை சிறந்ததாதல்பற்றி ஒடு உருபை இளமையில் சேர்த்தார். "ஒருவினை ஒடுச்சொல் உயர்பின் வழித்தே," என்பது விதியாதலின்; இவ்வாறே இளமையும் வனப்பும் எனப் பிறரும் கூறுவர். (3)

அவிர்சடை முனிவர் மாதர்
அழுங்குறக் கொண்ட கோலம்
கவினுமிவ் வடிவங் கொள்ளக்
கற்றுமுன் விட்ட தென்னக்
குவிமுலை மகளிர் ஆவி
கூட்டுணுங் கோலம் என்னப்
புவியுறும் இரவி என்னப்
பொங்கொளி யுருவொன் றுற்றான்.

[இ–ள்.] அவிர் சடை-விளங்குகின்ற சடையையுடைய, முனிவர்-தாருகாவனத்து முனிவர்களது, மாதர்-மகளிர்கள், அழுங்குற-மயங்கி வருந்துதற்பொருட்டு, கொண்டகோலம்-எடுத்த பிக்ஷாடன வடிவம், கவினும்-அழகு செய்கின்ற, இவ் வடிவம் கொள்ள-இவ்வடிவத்தைக் கொள்ளுதற்கு, முன் கற்று விட்டது என்ன-முன் பழகிவிட்டதுபோலவும், குவிமுலைமகளிர்-குவிந்த முலைகளையுடைய மங்கையரது, ஆவி-உயிரை, கூட்டுணும்-கொள்ளைகொள்ளும், கோலம் என்ன-அழகிய வடிவம்போலவும், புவியுறும் இரவி என்னப்-பூமியின்கண் அடைந்த ஞாயிறுபோலவும், பொங்கு ஒளி-மிக்க ஒளியை உடைய, உரு ஒன்று உற்றான்-வடிவம் ஒன்றினைக் கொண்டான். [எ–று.]

[கு-ரை.] தாருகவனத்து ரிஷிகளின் மனைவியரிடத்து பிக்ஷாடன மூர்த்தமாக இறைவன் சென்று அவர்களை மயக்கினான் என்னும் புராண கதையை உட்கொண்டது முன்னிரண்டடிகள். அவ்வழகிய வடிவமே பிரபுதேவனாகிய மத்தளிக வடிவத்திற்கு கற்றுக்கொண்ட வடிவம் என்றால் இவ்வடிவத்தின் அழகினைக் கூறும் தரமின்று என்பதாம். புவியுறும இரவி இல்பொருள் உவமையணி. (4)

[அல்லமனது முகம், மார்பு இவற்றின் அழகினைக் கூறல்]

விளிம்புற நடுக்க ளங்கம்
வீழ்ந்துசூழ் மதியொன் றுண்டேல்
வளங்கெழு மயிரொ ழுங்கு
வள்ளல்வாண் முகநி கர்க்கும்
துளங்குறு முந்தி மேற்போய்
மார்பிடைத் தோன்று ரோமம்
இளங்கரு நளினம் உண்டேல்
ஏய்க்குமென் றியம்ப நின்றான்.

[இ—ள்.] நடுக்களங்கம்-நடுவிலுள்ள கறையானது, விளிம்புற- ஓரத்திற்பொருந்த, வீழ்ந்து சூழ்-விழுந்து சூழ்ந்த, மதி ஒன்று உண்டேல்-திங்கள் ஒன்று இருக்குமானால், (அது) வளம்கெழு-வளம் பொருந்திய, மயிர் ஒழுங்கு-மயிர் ஒழுங்கினை யுடைய, வள்ளல்-அல்லமனது, வாண்முகம்-ஒளியையுடைய முகத்தை, நிகர்க்கும்-ஒக்கும், இளம் கரு நளினம் உண்டேல்-இளமை பொருந்திய கருந்தாமரை மலர் ஒன்று இருக்குமாயின், (அது) துளங்குறும்-ஒளி செய்கின்ற, உந்திமேல் போய்-நாபி யின் மேற்சென்று, மார்பிடைத்தோன்றும் உரோமம்-மார் பிடத்தே தோன்றுகின்ற மயிர்ச்செறிவை, ஏய்க்கும்-ஒக்கும், என்று இயம்ப-என்று சொல்லும்படி, நின்றான்-நின்றருளினான். [எ—று]

[கு-ரை.] விளிம்புற நடுக்களங்கம் வீழ்ந்து சூழ்மதி, இளங்கரு நளினம் ஆகிய இரண்டும் இல் பொருள் உவமைகள். இளம்கரு நளினம முதலொடு குணம் இரண்டு அடுத்து வந்தது. (5)

[இதுமுதல் ஆறு பாட்டுகள் அல்லமனது அணிதற் சிறப்பு]

விலைவரம் பறியா வாடை
விரித்துடுத் தரையி லங்க
மலைவரும் புதிய சாந்தம்
மான்மதம் காதம் நாறக்
கலைவரம் பறிந்து ளோர்தங்
கருத்தினுக் கரிதா யென்புன்
றலைவரும் கமலப் பொற்றா
டம்பிரான் மலியச் சாத்தி.

[இ—ள்.] கலைவரம்பு - அறுபத்துநான்கு கலைகளின் எல்லையை, அறிந்துளோர்தம்-அறிந்துள்ளவரது, கருத்திறுக்கு அரிதாய்-மனதிற்கு எட்டாததாக இருந்தும், என் புன் தலை-எனது புன்மையான தலையின் கண்ணே, வரும்-வரத்தக்க, கமலப் பொற்றாள்-தாமரைபோலும் அழகிய திருவடிகளையுடைய, தம்பிரான்-தனக்குத்தானே தலைவனாகிய அல்லமன், விலைவரம்பு அறியா ஆடை-விலையினது அளவு அறியப்படமாட்டாத பீதாம்பரத்தை, அரையிலங்க-அரையில் விளங்கும்படி, விரித்து உடுத்து-விரித்து உடுத்திக்கொண்டும், மலைவரும் புதிய சாந்தம்-பொதிய மலையின்கண் உண்டாகிய புதிய சந்தனத்தையும், மான்மதம்-கத்தூரியையும், காதம் நாற-காததூரம் வரை வாசனை வீசும்படிக்கு, மலியச்சாத்தி-திருமேனி முழுவதும் நிறையப் பூசியும். [எ—று.]

[கு-ரை.] தம்பிரான் உடுத்து சாத்தி என வினை முடிவு செய்க. அறியா ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். அரை ஆகுபெயர். காந்தம், மான் மதம் என்னும் செவ்வெண்ணின் தொகையொடு உம்மையும் தொக்கு நின்றன. அன்பினுக்கெளிவருவானன்றி ஆகமங்கள் பல பயின்றார்க்கும் இறைவன் அருளான் என்பதுபற்றி "கலை .....அரிதாய் என்றும் என்புன் தலை வரும்" என்றும் கூறினர். தாள் + தம்பிரான் "ணல முன்றனவும் ணள முன் டணவும் ஆகும் தநக்கள்" என்ற விதிப்படி தம்பிரான் டம்பிரான் என ஆகி "குறில் செறியா லள அவ்வழி வந்த தகரம் திரிந்தபின் கேடும்" என்றபடி ளகர மெய் கெட்டு தாடம்பிரான் என ஆயிற்று. இது முதல் ஆறு பாடல்களும் உலக வழக்கு **நவிற்சியணி. சாதித்தன்மை நவிற்சியணியுமாம்.** (6)

தளிர்த்ததண் பொழிலிற் றேமாந்
    தடஞ்சினைக் குயின்மு கம்போற்
துளித்தலை முகில்க வற்றுஞ்
    சுரிகுழற் சிகழி யார்த்திட்
டளித்தொடர் மாலை வேய்ந்தவ்
    வலங்கனேக் குறுவோர்க் கெல்லாம்
வெளிற்றுரைப் பொருள்போற் றோன்ற
    மென்தலைச் சாத்த ணிந்து.

[இ—ள்.] தளிர்த்த-துளிர்த்திருக்கின்ற, தண்பொழிலில்-குளிர்ந்த சோலையில், தேமா-தேமாவினது, தடஞ்சினை-பெரிய கிளைகளில் வாசம் செய்கின்ற, குயில் முகம்போல்-குயிலினது முகத்தைப்போல, துளிதலை முகில்-மழை பெய்யத் தலைப்படுகின்ற மேகத்தை, கவற்றும்-வருத்துகின்ற, சுரிகுழல்-சுருண்ட

தலை மயிரை, சிகழி-முடியாக, ஆர்த்திட்டு-கட்டி, அளிதொடர்-வண்டுகள் தொடராநின்ற, மாலேவேய்ந்து-மாலையைச்சூடி, அவ் அலங்கல்-அந்த மாலையானது, நோக்குறுவார்க்கு எல்லாம்-பார்க்கின்றவர்களுக்கெல்லாம், வெளிற்று உரைப்பொருள் போல் தோன்ற-வெளிப்படையான சொல்லில் உள்ள பொருள் தோன்றுமாறுபோலத்தோன்ற மென்தலைச்சாத்து அணிந்து-மெல்லிய தலைப்பாகையினைத் தரித்து. [எ-று.]

[கு-ரை.] குயில் முகம்போல் தலைமயிரை முடித்து அதில் பூ சுற்றி தலைப்பாகை யணிந்துகொண்டார் அல்லமர் மத்தளங்கொட்டுதற்குரிய தொழிலுக்கேற்ப என்றார். இது உலக வழக்கு நவிற்சியணி. வெளிப்படைச்சொல் குறிப்புச்சொல் என இரண்டின் குறிப்புச்சொல் முன்மொழி பின்மொழி பன்மொழி முதலிய ஆற்றலால் பொருளுணர்த்தும் ஒன்மொழி பொதுச் சொல் முதலியனவாம். வெளிப்படைச்சொல் மரம் நிலம் நீர் என்பனபோல வெளிப்படையாகப் பொருளுணர்த்துவனவாகும். வெண்ணிற மேகமும் உளவாதல்பற்றி துளித்தலை முகில் என்றார். (7)

களத்திடை யிருப்பி னுண்மை
காண்குவ ரென்ன வாலங்
குளத்திடை வாங்கி வைத்த
கொள்கைபோற் றிலதந் தீட்டி
யொளித்தனி மதிதன் பாங்க
ருரோணியோ டொருபெண் கூட்டி
யளித்துற வைத்த தென்ன
வணிமணி செவிக்க ணிந்து.

[இ-ள்.] களத்திடை-கழுத்தினிடத்து, இருப்பின்-இருந்தால், உண்மை காண்குவர்-தனது இறைமைத் தன்மையான வடிவத்தை(ப் பிறர்) காண்பார்கள், என்ன-என்றெண்ணி, ஆலம்-நஞ்சத்தை, வாங்கி-எடுத்து, குளத்திடை-நெற்றியினிடத்து, வைத்த கொள்கைபோல்-வைத்த செயலைப்போல, திலதம் தீட்டி-பொட்டு இட்டு, ஒளி தனி மதி-ஒளியையுடைய ஒப்பற்ற சந்திரனைவன், தன்பாங்கர்-தனது இருபுறத்திலும், உரோணியோடு-உரோகிணி என்னும் விண்மீனாகிய பெண்ணோடு, ஒரு பெண்-அவளுக்கு நிகராகிய மற்றொரு விண் மீனாகிய பெண்ணை, உறவைத்தது என்ன-பொருந்தவைத்திருத்தல் போல, அணிமணி-அழகிய குண்டல மணியை, செவிக்கு அணிந்து-காதுகளிலே தரித்து. [எ-று.]

[கு-ரை.] முன்னிரண்டடி நற்குறிப்பு. இரண்டடி இல்பொருள் உவமை. முகம் மதி போலவும் இருபுறங்களிலும் காதுகளில் அணிந்துள்ள அணி உரோகணியாகவும் அதனை ஒத்த மற்றொரு விண்மீனாகவும் கூறப் பட்டது. 'வானூர் மதியம் சகடணைய' எனப் பிறரும் கூறுமாற்றால் அறிக. மதி உரோகணியுடன் கூடுதல் சிறப்பென்பதை முழுமதி உரோகணியுடன் சேருதல்தான் சிறப்பென்பது அறிவித்தற்பொருட்டு 'ஒளித்தனிமதி' என்றார். (8)

விலையில்வெண் தரளக் கோவை
வீரசங் கிலிகே யூரம்
இலகுசெம் மணிப்பொன் னாழி
யிவைமுத லாய வெல்லாக்
கலனுமொண் கவினெ னுஞ்செங்
கனலிற்பெய் நறுநெய் யென்ன
மலைவினங் குருகு கேசன்
வயங்குறுப் பெலாம ணிந்து.

[இ-ள்.] விலையில்-விலை இல்லாத, வெண் தரளக்கோவை-வெள்ளிய முத்து மாலையும், வீரசங்கிலி-வீரசங்கிலியும், கேயூரம்-தோளணியும், இலகு செம்மணிப் பொன்ஆழி-விளங்காநின்ற சிவந்த மணி இழைக்கப்பட்ட பொன்னாலான மோதிரமும், இவை முதலாய-இவற்றை முதலாக உடைய, எல்லாக் கலனும்-எல்லா அணிகளும், ஒண்கவின் எனும்-ஒள்ளிய அழகு என் கின்ற, செங்கனலிற்பெய்-சிவந்த நெருப்பிற் பெய்கின்ற, நறு நெய் என்ன-நல்லநெய் போல, மலைவு இல்-(யாதொரு பொருளை யும் கண்டு) மலைத்தல் இல்லாத, நம் குரு குகேசன்-நமது குரு வாகிய அல்லமதேவன், வயங்கு-விளங்காநின்ற, உறுப்பு எலாம் அணிந்து - உடம்பு உறுப்புக்கள் எல்லாவற்றிலும் தரித்து........... [எ-று.]

[கு-ரை.] மலைவில் நம் குரு குகேசன் எனப் பிரித்து மலையை வில்லாகக்கொண்ட நமது குருவாகிய அல்லமன் என்றும் பொருள் கொள்ளலாம். அன்பர்கள் இதயமாகிய குகையின் கண் தங்கி இருத்தல்பற்றி குகேசன் என்றார். இயற்கையழகோடு கூடிய அல்லமனுக்கு செயற்கையழகு உண்டாக அணிந்த அணிக்கு செவ்வழலிற்பெய் நறுநெய் உவமையாயிற்று. வெண் தாளம் இசைச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர். எலாம் தொகுத்தல் விகாரம். (9)

இந்திர திருவிற் கேற்ற
விலக்கணம் முழுதும் வாய்த்த
சுந்தர குமரற் காவா
விதனைத்தான் சுமப்ப தாக
வந்துள தெதுகொ லோவென்
றெண்ணிமா னுடர்ம யங்க
நிந்தையின் முதுகின் பாற்றண்
ணுமையொன் று நிகழத் தாங்கி.

[இ-ள்.] இந்திரன்-தேவேந்திரனுடைய, திருவிற்கு-செல்வத்தை அனுபவித்தற்கு, ஏற்ற-தகுதிவாய்ந்த, இலக்கணம்-இயல், முழுதும் வாய்த்த-எல்லாம் அமையப்பெற்ற, சுந்திர குமரற்கு-அழகிய இளைய வாலிபனுக்கு, ஆ ஆ-, இதனைத் தான் சுமப்பதாக-இந்த மத்தளத்தைச் சுமப்பதற்கு ஏதுவாக, வந்துளது-வந்திருக்கின்ற ஊழ், எதுகொலோ என்று-யாதோவென்று, எண்ணி-நினைத்து, மானிடர் மயங்க-மனிதர் திகைக்கும்படி, நிந்தை இல்-பழிப்பு இல்லாத, முதுகின்பால்-முதுகினிடத்து, தண்ணுமை ஒன்று-மத்தளம் ஒன்றினை, நிகழத் தாங்கி-தோன்றும்படி சுமந்து. [எ-று.]

[கு-ரை.] கொல் ஐயப்பொருளில் வந்துளது. ஆ ஆ என்பது ஆச்சரியக் குறிப்பு. மயங்க என்னும் செய வென்னெச்சம் காரியப்பொருளில் வந்து பிறகருத்தா வினையாகிய தாங்கி என்னும் செய்து என்னும் வாய்பாட்டெச்சத்தைக்கொண்டு முடிந்தது. (10)

[அல்லமன் மத்தளம் முழக்குதல்]

சென்றருள் மதுகை நாதன்
றிருமுன்வான் சுடர்வ லஞ்சூழ்
குன்றுறழ் கொடிநெ டும்பொற்
கோபுரத் தெதிர்போய் நின்று
மன்றிடை நவில்கூத் தாடி
மத்தளத் தொழில்கைக் கொண்டா
னென்றுள மருள வெங்கோ
னெறிந்துதண் ணுமைய திர்த்தான்.

[இ-ள்.] சென்று-அல்லமன்போய், அருள் மதுகைநாதன் திருமுன்-அருளையுடைய மதுகேசனுடைய சந்நிதியில், வான் சுடர்-ஆகாயத்தில் இயங்கும் இரவியும் திங்களும், வலம்சூழ்-வலமாக சுற்றிவரப்பட்ட, குன்று உறழ்-மேருபோலுள்ள,

கொடிநெடும் பொன்கோபுரத்து-கொடிகள் கட்டியிருக்கப் பட்ட நீண்ட அழகிய கோபுரவாயிலுக்கு, எதிர்போய் நின்று-எதிராகச்சென்று நின்று, மன்றிடை நவில்கூத்தாடி-பொன்னம் பலத்தின் கண்ணே பலகால் செய்யப்பட்ட கூத்தாட்டத்தை யுடையவன், மத்தளத்தொழில்-மத்தளம் முழக்கலாகிய தொழிலை, கைக்கொண்டான் என்று-மேற்கொண்டானென்று, உளம்மருள-யாவரும் மனம் மயங்க, எங்கோன்-எமது தலைவனாகிய அல்லமன், தண்ணுமை-மத்தளத்தை, எறிந்து-கையினாற் புடைத்து, அதிர்த்தான்-முழக்கினான். [எ—று.]

[கு-ரை.] உடுத்து, சாத்தி ஆர்த்திட்டு, அணிந்து தீட்டி, அணிந்து, அணிந்து, தாங்கி என்னும் செய்தெனச்சம் பல அடுக்கி சென்று என்னும் எச்சத்தோடு முடிய அவ்வெச்சம் அதிர்த்தான் என்னும் முற்றுவினை கொண்டு முடிந்தது. இப்பாட்டுள் சென்று நின்று எறிந்து அதிர்த்தான் என முடிக்க. வான்சுடர் வலஞ்சூழ் குன்று என்றதால் மகாமேரு மலை என்று கூறப்பட்டது. (11)

[அல்லமன் மத்தள முழக்கின சிறப்பு]

உரலசைந் திடாத டுக்கி
யுறியினெய் யெடுத்த யின்றோன்
குரலசைந் தூது மோர்வேய்ங்
குழன்மொழி மாதர் மாழ்கச்
சிரலசைந் தாடா நின்ற
சிறகர்போன் மத்த ளத்தை
விரலசைந் தறைத லன்றி
மெய்யசை யாம னின்றான்.

[இ—ள்.] உரல் அசைந்திடாது அடுக்கி-உரல்களை ஒன்றன் மேல் ஒன்று அசையாது அடுக்கி, உறியில் நெய் எடுத்து-உறியின் பானையிலுள்ள நெய்யை எடுத்து, அயின்றோன்-உண்டவனாகிய கண்ணனது, குரல் அசைந்து ஊதும்-கண்டம் அசைந்து ஊதப்பட்ட, ஓர் வேய்ங்குழல்-ஒப்பற்ற புல்லாங்குழல் இசை போன்ற, மொழி-சொற்களையுடைய மகளிர், மாழ்க-மயங்கும் படி, சிரல் அசைந்து ஆடாநின்ற-மீன்குத்திப்பறவையினிடத்து அசைந்து ஆடுகின்ற, சிறகர்போல்-சிறகைப்போல, மத்தளத்தை-மத்தளத்தினை, விரல் அசைந்து அறைதல் அன்றி-கைவிரல் அசைந்து தாக்குதல் அல்லாமல், மெய் அசையாது நின்றான்-உடம்பு அசையாமல் நின்றனன். [எ—று.]

[கு-ரை.] மூங்கிற் கொம்பில் புல்லாங்குழல் செய்கின்ற காரணம்பற்றி வேய்ங்குழல் என்பர். "குழல் இனிது என்பர் மழலைச்சொல் கேளாதவர்" என்ற பொய்யாமொழியாலும் மொழிகளின் இனிமைக்கு இது உவமையாதல் அறிக. அயின்றோன் வினையாலணையும் பெயர். உறி ஆகுபெயர். சிறகு என்பது சிறகர் என இறுதிப்போலி "மகர இறுதி அஃறிணைப்பெயரின் னகரமோடுறழா நடப்பனவுளவே" என இறுதிப்போலியை முற்கூறியதனால் வண்டு வண்டர் சிறகு சிறகர் என வருவனவும் கொள்க என்பர் நன்னூலுரைகாரர். (12)

[மத்தளவோசையை மாயை கேட்டல்]

சுத்தமெய்ஞ் ஞான னந்தச் சூரியன் கரத்தா லார்க்கும்
மத்தள முகின்மு ழக்க நடித்துறு மயில்கேட் டம்மா
வித்தரை மனிதர் கையா லெஞ்செவிப் படாதி ருந்த
புத்தொலி யிதுவென் றுள்ளம் வியந்திது புகலு மன்றே.

[இ-ள்.] சுத்தம்-சத்து, மெய்-சித்து, ஞானம்-அறிவு, ஆனந்தம்-இன்பமயமான, சூரியன்-ஞாயிறாகிய அல்லமதேவன், கரத்தால்-கைகளால், ஆர்க்கும்-முழக்காநின்ற, மத்தளமுகில்-மத்தளமாகிய மேகத்தினது, முழக்கம்-ஓசையை, நடித்துஉறும் மயில்கேட்டு-நடனம் செய்து இருக்கின்ற மயில்போன்றவளாகிய மாயையானவள் கேட்டு, இத்தரை மனிதர் கையால்-இந்த பூமியிலுள்ள மக்களின் கைகளினாலே, என் செவிப்படாது இருந்த-எனது காதுகளில் கேட்கப்படாதிருந்த, புத்து ஒலி இது-புதிதாகிய ஓசை இதுவென்று, உள்ளம் வியந்து-மனதில் ஆச்சரியம் அடைந்து, இது புகலும்-கீழ்க்கண்டவற்றைச் சொல்லுவாளானாள். [எ-று.]

[கு-ரை.] மயில் ஆகுபெயர். மத்தளமுகில் உருவகம். அன்று ஏ அசைகள். சச்சிதாநந்தவடிவம் இறைவனது என்பதை சுத்த மெய்ஞ்ஞானனந்தச் சூரியன் என்பதாலறிவித்தார். அம்மா வியப்பிடைச்சொல். (13)

[மாயை தோழியிடத்துக் கூறுதல்]

மோட்டிள முலையி ரின்ன
தண்ணுமை முழக்கங் காதாற்
கேட்டில மிவ்வா றுண்டென்
றுரைப்பவும் கேட்டி லேமால்
வேட்டுல கனைத்து நின்று
வியக்குமிவ் விஞ்சை கற்றுக்
காட்டிய வவன்யார் கொல்லோ
காண்கவென் றணங்கு ரைத்தாள்.

[இ—ள்.] மோட்டு-உயர்வும், இள-இளமையும் (உடைய), முலையீர்-நகிலையுடைய மாதர்களே, இன்ன-இப்படிப்பட்ட, தண்ணுமை-மத்தளத்தினது, முழக்கம்-ஓசையை, காதால் கேட்டிலம்-காதுகளால் கேட்டோம் இல்லை (அன்றியும்), இவ்வாறு உண்டு என்று-இப்படி ஒரு மத்தள ஓசை உண்டு என்று, உரைப்பவும் கேட்டிலேம்-சொல்லவும் கேட்டேம் இல்லை, உலகு அனைத்தும் - உலகத்துள்ளார் அனைவரும், வேட்டுநின்று-விரும்பி இருந்து, வியக்கும்-ஆச்சரியப்படத்தக்க, இவ்விஞ்சை கற்று-இந்த வித்தையைக் கற்றறிந்து, காட்டிய அவன் யார்-நமக்குக் காட்டிய அந்த மத்தள முழக்குபவன் யார், காண்க-போய்ப் பார்ப்பீர்களாக, என்று-என்று கூறி, அணங்கு-மாயையானவள், உரைத்தாள்-சொல்லினுள். [எ—று.]

[கு-ரை.] ஆல் கொல் ஓ அசைகள். உலகு ஆகுபெயர். கேட்டிலம், அம்முன்னிலை தோழியரை உளப்படுத்திவந்த தன்மைப் பன்மை விகுதி. முலையீர் ஈர் முன்னிலைப்பன்மை விகுதி. பிறரை அழகால் வருத்தும் தன்மையுடையாள் என்னுங் கருத்தால் அணங்கு என்றும் அவளே ஆச்சரியம் உற்முள் என மத்தள முழக்கினவனது பெருமையும் கூறினுர் காது பெற்ற பயன் இறைவனுல் கூட்டப்படும் நாதங்களுள் பாதச்சிலம்போசை முதல் மத்தள ஓசை ஈருக உள்ள பல ஓசைகளையுமே கேட்டல் ஆதலின் இதுவரையில் காத்திருந்தும் பயனில்லை இன்றே பயன்பெறறதென குறிப்பான் உணர்த்துவார் கேட்டிலம் என வாளா கூருது காதால் என வேண்டாது கூறினுர் வேண்டியது முடித்தற்பொருட்டென்க காட்டிய பெயரெச்சம் அவன் என்னும் கருத்தாப் பெயர்கொண்டது. (14)

[தோழியர் அல்லமனைக்கண்டு மீண்டு வருதல்]

மாதர்வல் விரைந்து சென்று
 மத்தள முழக்கி நின்ற
சோதியை விழியாற் றுஞ்செய்
 தொல்லைமா தவத்தாற் கண்டு
காதொடு பொருது மீளுங்
 கயனெடுங் கருங்கட் செவ்வாய்க்
கோதைதன் மருங்கின் மீண்டு
 வந்திது கூற லுற்றுர்.

[இ—ள்.] மாதர்-தோழியர், வல்விரைந்துசென்று-அதிக வேகமாக ஓடிப்போய், மத்தளம் முழக்கிநின்ற-மத்தளம் அடித்துக்கொண்டுநின்ற, சோதியை - ஒளிவடிவமான அல்லமனை, தாம்செய் தொல்லைமா தவத்தால்-தாங்கள் முன் பிறப்பிலே

செய்த பெரிய தவத்தினால், விழியால் கண்டு-கண்களால் பார்த்து, காதொடு பொருதுமீளும்-காதுகளோடு மோதித் திரும்புகின்றதும், கயல்-கயல்போலப் பிறழ்கின்றதும், நெடும் கரும்-நீண்டதும் கரிய தன்மை வாய்ந்ததும் ஆன, கண்-கண்களையும், செவ்வாய்-சிவந்த வாயையும் உடைய, கோதை தன் மருங்கில்-மாலை போன்ற மாயையின் பக்கத்தில், மீண்டுவந்து-திரும்பிவந்து, இது கூறல் உற்றார்-கீழ்க்கண்டவற்றைச் சொல்லலானார்கள். [எ—று.]

[கு-ரை.] கண்டு என்றலே போதுமானதாக இருக்கும், விழியால் எனவும் கூறினார் கண்பெற்ற பயன் இறைவனைக் காணலே என்பது அறிவித்தற்பொருட்டு. கண்ணால் பயன் கோடல் இறைவனைக் கண்டால் என்பதே பல பெரியார்களின் கருத்து. பெருந்தவம் செய்தார்க்கன்றி இறைவன் சேயனாதலின் தாம்செய் தொல்லை மாதவத்தாற்கண்டு என்றார். கருங்கண் செவ்வாய் முரண்தொடை. ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் சோதியே இறைவன் வடிவமாதலின் சோதியை என்றார் அல்லமதேவனை, கோதை ஆகுபெயர். (15)

[தோழியர் அல்லமதேவனை மாயைமுன் அழைத்துவருதல்]

கற்றதன் விஞ்சை போலக்
கவினுநாங் கண்ட தில்லை
விற்றொழி லனங்க வேளே
மேனிகொண் டடைந்தா னென்ன
வுற்றன னொருவ னென்ன
வொண்டொடி விளிமி னென்றாண்
மற்றவர் விளித்து வந்து
மாயைமா தெதிர்வி டுத்தார்.

[இ—ள்.] கற்றதன் விஞ்சைபோல-கற்கப்பட்ட தனது மத்தள முழக்கும் வித்தைபோலவே, கவினும்-அவனது அழகையும், நாம் கண்டதில்லை-யாங்கள் பார்த்தோம் இல்லை, வில் தொழில்-வில் போரில் வல்ல தொழிலைச் செய்கின்ற, அனங்க வேளே-வடிவம் இல்லாத மன்மதனே, மேனிகொண்டு அடைந்தான் என்ன-வடிவம்கொண்டு வந்தான் என்று எண்ணும்படி, ஒருவன் உற்றனன்-ஒருவன் வந்திருக்கிறான், என்ன-என்று (தோழியர்) கூற, ஒண்தொடி-ஒள்ளியவளையல் அணிந்த மாயையானவள், விளிமின்-மத்தளிகனை இவ்விடம் அழையுங்கள், என்றாள்-என்று சொன்னாள், அவர்-அந்த தோழியர், விளித்து வந்து-அழைத்துவந்து, மாயை மாது-மாயையாகிய மாதினது, எதிர்விடுத்தார்-எதிராகவிட்டார்கள் [எ—று.]

[கு-ரை.] ஒண்தொடி அன்மொழித்தொகை. மற்று அசை. அவனைக் கண்டதும் மன்மதன் அம்பால் நீ வருத்தமுறுதல் திண்ணம் என்பதை அறிவிப்பாள் போன்று விற்றெழில் அனங்கவேள் என்றமையின் கருத்துடை அடைகொளியணி. (16)

[அல்லமனைக்கண்ட மாயையின் தன்மை]

அந்நிலை யலம ணமத் தண்ணலைக் கண்ட போதே
செந்நில முகுநீர் போலச் செல்விமான் மயமே யாகிப்
பொன்னவி ரொருபூம் பாவை போன்றசை வறவி [ருந்தாள்
கன்னல்வின் மதவே ளெய்து கையிளைத் தருகு நின்றான்

[இ-ள்.] அந்நிலை-அந்த வடிவம்கொண்ட நிலைமையினையுடைய, அலமன் நாமத்து அண்ணலை-அல்லமன் என்னும் பெயரையுடைய தலைவனை, கண்டபோதே-பார்த்தபோதே, செல்வி-மாயையானவள், செந்நிலம் உகும்நீர் போல-செம்மண்ணிலத்திலே விழுந்த நீர் செந்நிறம் அடைதலேபோல, மால்மயமே ஆகி-(அலரினின்றும் உண்டான) காம விருப்பமாகிய மயக்கம் உடைய தன்மையாளாகி, பொன்-பொன்னாற் செய்யப்பட்டதும், அவிர்-விளக்கமுற்றதும், ஒரு-ஒப்பற்றதும் ஆகிய, பூம் பாவை-அழகிய பாவையை, போன்று-போல்பவளாகி, அசைவு அற இருந்தாள்-அசைவின்றி இருந்தாள் (சமயம் உணர்ந்து), கன்னல்வில்-கரும்பு வில்லையுடைய, மதவேள்-மன்மதன், எய்து-பூ வம்புகளை மாயை மேற் சொரிந்து, கைஇளைத்து-கை தளர்ந்து, அருகுநின்றான்-பக்கத்தில் நின்றனன். [எ-று.]

[கு-ரை] செம்புலப் பெயல்நீர்போல அன்புடை நெஞ்சந்தான் கலந்ததுவே என்னும் சொற்றொடர் இரண்டு நினைவு கூரத்தக்கது மதவேள் மீமிசைச்சொல். மால் ஈண்டு காம மயக்கத்தை உணர்த்திற்று. (17)

[தோழியர் அல்லமனை வினுதல்]

மயக்குமென் பதுபோய் மாயை
மயங்குமென் றிடவி ருப்ப
வியக்குநின் றேயம் யாது
வீரவே ளனையா யின்பம்
பயக்குநின் பெயர்யா தெங்குப்
பயின்றுறை குவைசொல் லென்று
நயக்குமென் மொழியார் கேட்ப
ஞானவா ரிதியு ரைக்கும்.

[இ-ள்.] மாயை - மாயையானவள், மயக்கும் என்பது போய்-யாவரையும் மயக்கும் என்று சொல்லப்படுவதுபோய், மயங்கும் என்றிட இருப்ப-தானே மயங்கும் என்று சொல்லும் படி இருக்க, நயக்கும்-விரும்பப்படுகின்ற, மென்மொழியார்-மெல்லிய சொற்களையுடைய தோழியர், வியக்கும்-(யாவராலும்) மெச்சப்படுகின்ற, நின் தேயம் யாது-நின்னுடைய நாடு எது, வீரவேள் அனையாய்-வீரத்தையுடைய மன்மதன்போலும் அழகையுடையவனே, இன்பம் பயக்கும்-இன்பத்தைத் தருகின்ற, நின் பெயர் யாது-நின்னுடைய பெயர் எது, எங்கு பயின்று உறை குவை-எவ்விடத்தே பலகாலும் தங்கி இருப்பாய், சொல் என்னு-சொல்லுவாயாக என்று, கேட்ப-வினவ, ஞானவாரிதி-அறிவுக் கடலாகிய அல்லமன், உரைக்கும்-சொல்லுவான். [எ-று.]

[கு-ரை.] மாயை என்ற சொல்லுக்கே மயக்கும் தன்மையுடையது என்பது பொருளாக இருக்கவும் பெயர் மாத்திரையாக நின்றதோடன்றி தானே மயங்கினுள் என்று கூறும் தன்மை கவனிக்கத்தக்கது. அறிவே வடிவமாதலின் ஞானக்கடல் என்றார். (18)

[அல்லமன் விடை யிறுத்தல்]

செல்லுறழ் குழலீர் தேய மோபர தேயஞ் சூளால்
வல்லவ ரென்ன வந்தோர் வலிநிலை யல்ல வென்னும்
அல்லமன் என்பே ரென்று மன்புசெய் பவரி டத்திற்
புல்லுவன் றொடர்பி லாம லென்றனன் பொய்மை
[யில்லான்.

[இ-ள்.] பொய்மை இல்லான்-உண்மையுடையவனாகிய அல்லமதேவன், செல் உறழ் குழலீர்-மேகம்போலும் கூந்தலையுடைய மங்கையர்களே, தேயமோ பரதேயம்-தேசமோ அன்னிய தேசம், (பரம்-மேலானது, அதாவது வீட்டுவசம் என்றபடி) சூளால்-நெடுமொழியால், வல்லவர் என்ன வந்தோர்-வல்லவர் என்று வந்தவருடைய, வலி-வல்லமைகளை, நிலை அல்ல என்னும்-நிலைக்கும் தன்மையுடையன அல்லவென்று சொல்லுகின்ற, அல்லமன் என்பேர்-அல்லமன் என்பது எனது பேராகும், அன்பு செய்பவர் இடத்தில்-அன்புகொண்டிருப்பவர்களிடத்தில், என்றும் புல்லுவன்-எப்போதும் சேர்ந்திருப்பன், தொடர்பு இல்லாமல்-வேறோர் குடும்பத்திலும் தொடர்ச்சி இல்லாமல், என்றான்-என்று சொன்னான். [எ-று.]

[கு-ரை.] மாயை அல்லமனைக் காண்பேனென்று வஞ்சினங் கூறி வந்தனளாதலின் அதனை உள்ளுறுத்தி சூளால் வல்லவர் என்ன வந்தோர் வலி நிலையல்ல என்னும் அல்லமன் என் பேர் என்றார் என்க. சேடியர் வினவிய மூன்றற்கும் அல்லமர் முறையாக மூன்று விடையிறுத்தனர். அன்பெனும் வலையுள் அகப்படு மணியே போன்ற பகுதிகளால் அன்பிற்கு எளியவன் இறைவன என்பதற்கேற்ப அன்பு செய்பவரிடத்திற் புல்லுவன் என்றார். தனக்கென ஒரு தொடர்ச்சியில்லாதவன் எனக் கூறுவது மாயையானவள் தனக்குத் தொடர்ச்சியாக இருத்தற்குரியவன் என்று எண்ணுதறகாக. பரதேயம் முதலிய சிலேடைச் சொற்றொடர்களிலும் உண்மைப் பொருளே கூறுதல்பற்றி பொய்மை இல்லான் என்றார் என்க. (19)

[சேடியர் வேண்டுகோள்]

உலகுள விஞ்சை யெல்லா முணர்ந்தவெம் பிராட்டி [தன்பான்
மலைவற விஞ்சை கற்றோர் தம்மொடு மருவி யப்பாற்
செலவினை யொழிந்தி ருத்தி செல்வமோ டைய வென்று
விலவித ழமுத மன்னா ரியம்பின ரிணங்கும் வண்ணம்.

[இ-ள்.] இலவு இதழ்-இலவ மலர்போல அதரத்தை யுடையவரும், அமுதம் அன்னார்-அமுதம் போல்பவரும் ஆகிய சேடியர், உலகு உள விஞ்சை எல்லாம்-உலகத்திலுள்ள கல்விகளை எல்லாம், உணர்ந்த-அறிந்துள்ள, எம் பிராட்டி தன்பால்-எங்கள் தலைவியிடத்து, மலைவு அற-ஐயம் திரிபு இல்லையாக, விஞ்சை கற்றோர் தம்மொடு-வித்தைகளைக் கற்றவரோடு, மருவி-பொருந்தி, அப்பால்-வேறிடத்தில், செலவினை-செல்லுதலை, ஒழிந்து-விட்டு, ஐய-பெருமானே, செல்வமோடு-பொருளின்பங்களோடு, இருத்தி-இருப்பாயாக, என்று-என்று, இணங்கும் வண்ணம்-(அல்லமன்) உடன் படும்படியாக, இயம்பினர்-சொல்லினர். [எ-று.]

[கு-ரை.] ஐய. அண்மைவிளி. இருத்தி இகர ஈற்று முன்னிலை வினைமுற்று. (20)

[அப்போது மாயையின் செயல்]

தன்கனி வாய்தி றந்து சாற்றவேண் டியசொல் லெல்லாம்
மின்குழு வனைய மாதர் விளம்பலு மகிழ்வுற் றீது
புன்சடை மதுகை நாதன் பூசனைப் பயனென் றெண்ணி
மின்குழல் மொழிம டந்தை யிருந்தன ளுரையா டாமல்

[இ—ள்.] இன்குழல் மொழிமடந்தை-இனிய புல்லாங் குழல் போலும் சொற்களையுடைய மாயை, தன் கனிவாய் திறந்து-தனது கொவ்வைக் கனிபோன்ற வாயைத் திறந்து, சாற்றவேண்டிய சொல்லெல்லாம்-சொல்லவேண்டிய சொற்களை எல்லாம், மின்குழுவு அனைய மாதர்-மின்னற்கொடியின் கூட்டம் போன்ற மகளிர்கள், விளம்பலும்-(அல்லமனிடத்து) சொல்லலும், மகிழ்வுற்று-இன்பமுற்று, ஈது-சேடியர் இவ்வாறு பேசுந்தன்மை, புன் சடை மதுகை நாதன்-புல்லிய சடையை யுடைய மதுகேசுரனின், பூசனைப் பயன் என்று எண்ணி-பூசனை செய்ததின் பயனாகும் என்று நினைத்து, உரையாடாமல்-(தான் ஒன்றும்) பேசாமல், இருந்தனள்-(வறிதே) இருந்தனள்.

[எ—று.]

[கு-ரை.] பதியை மேவுறுங்காதல் நெஞ்சகத்தினுள் பதித்து பூசை செய்தவளாதலின் தோழியர் அல்லமனைத் தங்கும்படி வேண்டிக்கொண்டதைப் பூசனைப்பயன் என்று எண்ணுகிறாள் என்றார். (21)

[மாயை அல்லமனுக்கு வெற்றிலை அளித்தல்]

மோகினி தவஞ்செய் தீன்ற முகிழ்முலை மாயை தன்கைப்
பாகுவெள் ளிலைய ளித்துப் பரிந்தரு குறும டைப்பைப்
போகிஎன் பவள்சி றந்த போகிபோ னடித்து நின்ற
யோகிதன் கரத்தளிப்பித் துரியன பலவுஞ் செய்தாள்.

[இ—ள்.] அருகுறும்-பக்கத்தில் நிற்கும், அடைப்பைப் போகி என்பவள்-வெற்றிலைப்பை பிடித்திருக்கின்ற போகி என்று சொல்லப்படுபவள், தவம் செய்து-மிக்க தவத்தைச் செய்து, மோகினி ஈன்ற-மோகினியாலே பெறப்பட்ட, முகிழ் முலை மாயைதன்-தாமரை அரும்புபோலும் முலைகளையுடைய மாயையினது, கை-கையின்கண், பரிந்து-விரைந்து, பாகு வெள்ளிலை-பாக்கு வெற்றிலைகளை, அளித்து-கொடுத்து, சிறந்த போகிபோல்-சிறப்புடைய போகியைப்போல, நடித்துநின்ற-வேடம் காட்டி நிற்கின்ற, யோகி தன்-அல்லமனது, கரத்து-கைகளின்கண், அளிப்பித்து-கொடுப்பித்து, உரியன பலவும்-இன்னும் செய்தற்குரிய வரிசைகள் பலவும், செய்தாள்-செய்தனள்.

[எ—று.]

[கு-ரை.] வாத்தியக்காரர்களுக்கு முடிவில் செய்கிற மரியாதை தாம்பூலம் முதலியன அளித்தல் இதனைத் தோழியாகிய போகி என்பவள் தங்கள் தலைவியாகிய மாயை மூலமாகவே அளிப்பித்தாள் என்று கூறப்பட்டுளது. உலக வழக்கு நவிற்சியணி. மாயைக்கு இணங்குகின்ற காமிபோல் அல்லமன் நடிக்கின்றானாதலின் போகிபோல் நடித்து என்றார். சந்தனம் புஷ்பம் முதலியவற்றை உரியன பலவென்றார். (22)

[அல்லமன் அவற்றை ஏற்றமை]

அடிக்க மலங்கள் போற்றும்
அடியவர் வேண்டிற் றெல்லாம்
கொடுத்தருள் கருணை வள்ளல்
கொண்டகோ லத்திற் கேற்ப
நடிப்பவ னாத லாலே
நாமவேற் றடங்கண் மாயை
யெடுத்துத வுறுவ தங்கை
யேற்றன னிழிந்து ளோன்போல்.

[இ-ள்.] அடிக்கமலங்கள் போற்றும் அடியவர்-தனது திருவடித் தாமரைகளைப் போற்றுகின்ற அடியவர்களாலே, வேண்டிற்று - விரும்பப்பட்டது, எல்லாம் - எல்லாவற்றையும், கொடுத்து அருள்-தந்து அருள் செய்கின்ற, கருணை வள்ளல்-அருட் கொடையினனாகிய அல்லமன், கொண்ட கோலத்துக்கு ஏற்ப-தான் எந்த வடிவம் கொண்டானோ அந்த வடிவத்திற்குத் தக்கபடி, நடிப்பவன் ஆதலாலே-ஆடுவோன் ஆகையினாலே, நாமவேல் தடம்கண் மாயை-அச்சத்தைத் தரும் வேல்போன்ற பெரிய கண்களையுடைய மாயையானவள், எடுத்து உதவுறுவது-எடுத்துக் கொடுக்கப்பட்ட தாம்பூலத்தை, இழிந்துளோன் போல்-தாழ்ந்தவர்களைப்போல, அங்கை ஏற்றனன்-உள்ளங் கைகளால் வாங்கிக்கொண்டனன். [எ-று.]

[கு-ரை.] அடிக்கமலம்-உருவகம். கருணைவள்ளல் பண்புத்தொகை வேற்றுமைத்தொகையும் ஆம். வேண்டுவார் வேண்டுவதை ஈயும் கருணை வள்ளலும் மாயையை மயக்கும்பொருட்டு கொண்ட கோலம் இழிசனரால் செய்யப்படும் மத்தள முழக்கும் தொழிலுக்குரிய கோலமாதலின் அதற்கேற்ப நடித்தார் என்று கூறப்பட்டது. அகம்+கை அங்கை என ஆகியது; அகமுனர்ச்செவிகைவரின் இடையன கெடும் என்பது விதியாதலின். (23)

[மாயை ஆலயத்தினின்றும் மீளுதல்]

விடைக்கொடி யமலன் றன்னை
விடைகொடு புறம்போந் தங்கண்
மடக்கொடி மதவேள் வாளி
மருமமபாய்ந் துருவ னைந்து
நடக்கரி தாகி யம்பொ
னகைமணிச் சிவிகை யூர்ந்து
தொடிக்கைநுண் ணிடைம ருங்குற்
றோழியர் சூழச் சென்றாள்.

[இ—ள்.] மடக்கொடி-இளமையான பூங்கொடிபோல்பவள், விடைக்கொடி அமலன்தன்னை-இடபக்கொடியையுடைய தூயவடிவுடைய மதுகேசனிடத்து, விடைகொடு-உத்திரவு பெற்றுக்கொண்டு, புறம்போந்து-ஆலயத்தின் வெளிப்புறம் வந்து, அங்கண்-அவ்விடத்து, மதவேள்வாளி-மன்மதனுடைய பூ அம்புகள், மருமம் பாய்ந்து உருவ-மார்பிலே பட்டு உருவ, நைந்து-(அதனால்) வாட்டமுற்று, நடக்க அரிதாகி-நடத்தற்கு வலி இலாதவளாகி, அம்பொன்-அழகிய பொன்னாலும், நகை மணி-ஒளிபொருந்திய மணியாலும் செய்யப்பட்ட, சிவிகை ஊர்ந்து-தண்டிகையில் ஏறி, தொடிக்கை-வளையல் அணிந்த கைகளையும், நுண் இழை மருங்குல்-நுண்ணிய நூல்போன்ற இடையினையும் உடைய, தோழியர்-தோழியர்கள், சூழ-சுற்றி வர, சென்றாள்-போயினாள். [எ—று.]

[கு-ரை.] மடக்கொடி அடையடுத்த உவமை ஆகுபெயர். உருவுதல். உள்ளே ஆழ்ந்துபோதல். மதவேள் மீமிசைப்பதம். (24)

[அல்லமனோடு மாயை தன் அகத்துட் புகுதல்]

நண்ணிவெண் குடைவேந் தன்பா
    னடம்புரி தொழிற்கி சைந்த
தண்ணுமை யல்ல மன்றன்
    சதுருரைத் துடனி ருப்ப
கண்ணகன் ஞாலங் காக்குங்
    காவல னிசைவு கொண்டு
பெண்ணமு தனைய மாயை
    பிறங்குதன் மாடம் புக்காள்.

[இ—ள்.] வெண்குடை வேந்தன்பால் நண்ணி-வெண் கொற்றக்குடையையுடைய அரசனிடத்துச் சென்று, நடம்புரி தொழிற்கு இசைந்த-நடனம் செய்கின்ற தொழிலுக்கு உதவியாக இருக்கின்ற, தண்ணுமை-மத்தளத்(தொழிலையுடைய) அல்லமன்தன்-அல்லமதேவனது, சதுர் உரைத்து-திறமையைச் சொல்லி, உடன் இருப்ப-அவன் தன்னுடன் இருக்கும்படி, கண்ணகன்-இடம் அகன்ற, ஞாலம் காக்கும் காவலன்-உலகத்தைப் பாதுகாக்கின்ற அரசனின், இசைவு கொண்டு-சம்மதம் பெற்று, பெண் அமுதம் அனைய மாயை-பெண் வடிவமாகச் செய்யப்பட்ட அமுதம்போல்பவளாகிய மாயையானவள், பிறங்கு-விளங்காநின்ற, தன்மாடம் புக்காள்-தனது மாளிகைக்குள் சென்றாள். [எ—று.]

[கு-ரை.] வெண்குடை—தன்னோடியையின்மை நீக்கிய விசேடணம் என்பார் சேனாவரையர். சில பகுதி விகுதியோடு புணரும்போது பகுதியின் ஒற்று இரட்டித்து இறந்த காலம் காட்டும் என்றபடி புகு + ஆள் = புக்காள் என வந்தது. பால் ஏழாம் வேற்றுமை உருபு. அல்லது உருபின் பொருள்பட வந்த சொல்லென்றலும் ஆம். கண்கள் என்ற இடத்து கண் இடப்பெயராக வந்துளது. மாயை நண்ணி உரைத்து இருப்ப இசைவு கொண்டு புக்காள் என வினை முடிவு செய்க. (25)

[மாயை தவிசின்கண் இருத்தல்]

வலம்புரி வளைய னந்த மருங்குசூழ்ந் துறச்சி றந்த
சலஞ்சல மிருப்ப தென்னத் தமனிய மணிமா டத்திற்
பொலங்குழை மகளிர் சூழப் பூந்தவி சிருந்து விஞ்சை
நலந்தெரி பவள்போ லெங்க ணம்பனோ டுரைவி
[ழைந்தாள்.

[இ—ள்.] வலம்புரிவளை அனந்தம்-வலம்புரிச்சங்குகள் பல, மருங்கு சூழ்ந்துஉற-பக்கத்தில் சூழ்ந்துகொண்டிருக்க, சிறந்த சலஞ்சலம் இருப்பது என்ன-சிறந்ததாகிய சலஞ்சலமாகிய சங்கு நடுவில் வீற்றிருந்தாலொப்ப, தமனியம் மணி-பொன்னாலும் மணியாலும் செய்யப்பட்ட, மாடத்தில்-மேன்மாடியில், பொலம்குழை மகளிர்-பொன்னாலான குழையையணிந்த தோழியர்கள், சூழ-தன்னைச்சூழ்ந்திருக்க, பூ தவிசு இருந்து-மலர் அணைமேல் வீற்றிருந்து, எங்கள் நம்பனோடு-எங்கள் தலைவனாகிய அல்லமாப்பிரபு தேவனோடு, விஞ்சை நலம் தெரிபவள் போல-அவனது மத்தள வித்தையின் குணத்தினை ஆராய்பவள்போல, உரைவிழைந்தாள்-பேசுதற்கு விரும்பினாள்.
[எ-று.]

[கு-ரை.] இடம்புரிச்சங்குகளிலும் வலம்புரிச்சங்கு சிறந்தது அதனினும் சிறந்தது சலஞ்சலச்சங்கு ஆதலின் இவ்வாறு கூறினர். சலஞ்சலம் மாயைக்கும் வலம்புரிச்சங்குகள் பல தோழியர்களுக்கும் உவமிக்கப்பட்டமையின் உவமையணி. மாயைக்கு அல்லமனோடு பேசவேண்டும் என்ற விருப்பமே தவிர மத்தளத்தொழிலின் நுட்பத்தை அறியவேண்டும் என்ற விருப்பம் இல்லை என்பதை நலந்தெரிபவள்போல் உரைவிழைந்தாள் என்றதால் அறிவிக்கின்றார் ஆசிரியர். பூ-தவிசு என்பது "மரப்பெயர் முன்னர் இனமெல்லெழுத்து வரப்பெறுனவும் உள வேற்றுமை வழியே" என்பது விதியாதலின் பூந்தவிசு என ஆயிற்று. (26)

[மாயை பேசும் நிலை]

நினைவவன் புணர்ச்சி மேற்று
நெடுங்கணோக் கனங்க னன்ன
னனிமிகு மழகின் மேற்று
நாவெறுங் கூற்றின் மேற்று
புனைமலர் வணர்வார் கூந்தற்
பொற்றொடிக் கிதனா லன்றோ
மனமொழி மெய்யொ ருங்கு
மங்கைய ரரிய ரென்பார்.

[இ—ள்.] புனைமலர்-அலங்கரிக்கப்பட்ட மலரையுடைய, வணர்வார் கூந்தல்-வளைந்த நெடிய கூந்தலையும், பொற்றொடிக்கு-பொன்னாலான வளையல்களையும் உடைய மாயைக்கு, நினைவு-மனதில் உள்ள எண்ணம், அவன் புணர்ச்சிமேற்று-முன்னுள்ள அல்லமதேவனது புணர்ச்சியின் மேலதாயிற்று, நெடும் கண்நோக்கு-நெடிய கண்களினது பார்வை, அனங்கன் அன்னான்-மன்மதனை ஒத்த அவ்வல்லமனது, நனிமிகும் அழகில் மேற்று-மிகவும் சிறந்த அழகின்மேலதாயிற்று, நா-வாயானது, வெறும் கூற்றின்மேற்று - பயனில்லாத சொல்லின்மேலதாயிற்று, இதனால் அன்றோ-இத்தகைய செயலினாலல்லவோ, மனம் மொழிமெய்-மனமும் மொழியும் மெய்யும், ஒருங்கு-ஒருமைப்பட்ட, மங்கையர்-மகளிர்கள், அரியர்-அருமையானவர்கள், என்பர்-என்று (உலகோர்) சொல்லுவார். [எ—று.]

[கு-ரை.] வேற்றுப்பொருள் வைப்பணி. பொற்றொடி அன்மொழி. என்பார் என்பதற்கேற்ப உலகோர் என எழுவாய் வருவித்து உரைக்கப்பட்டது. (27)

[அல்லமனிடத்து மாயை போகம் விரும்பிய தன்மை]

தீதறு கழைக்க ரும்பிற்
றீஞ்சுவை யிரத நீத்துக்
கோதினை விரும்பிக் கொள்ளுங்
கொள்கைபோ னுவி யின்கட்
போதறு மதம்வி டுத்துப்
புன்மலங் கொள்ளு மாபோற்
பேதையெம் பிரானுன் முத்தி
பெறு துபுன் போகம் வேட்டாள்.

[இ-ள்.] பேதை-மாயையானவள், தீது அறு கழைக் கரும்பின்-குற்றமற்ற கழையாகிய கரும்பினின்றும், தீஞ்சுவை இரதம்-இனிய சுவையுடைய சாற்றை, நீத்து-தள்ளிவிட்டு, கோதினை-சக்கையை, விரும்பி - ஆசைகொண்டு, கொள்ளும் கொள்கை போல்-கொள்ளுகின்ற செயலைப்போலவும், நாவியின் கண்-கத்தூரி மிருகத்தினிடத்து, போதுறு-வெளிப்படாநின்ற, மதம் விடுத்து-கஸ்தூரியை விட்டு, புன் மலம்-புல்லிய மலத்தை, கொள்ளும் ஆ போல்-கொள்ளுகின்ற வகையைப் போலவும், எம்பிரானால்-எமது பெருமானாகிய அல்லமதேவனால், முத்தி பெறுது-எய்துதற்கரிய வீடடைய விரும்பாது, புன்போகம்-இழிந்த சிற்றின்பத்தை, வேட்டாள்-விரும்பினள், [எ-று.]

[கு-ரை.] கழைக்கரும்பு இருபெயரொட்டுப் பண்புத்தொகை. முத்தி விரும்பாது போகம் வேட்டாள் என்பதற் கேற்ப பேதை என்றார். ஒரு பொருளுக்கு இரண்டு உவமை வந்தன. (28)

[மாயையின் காம மயக்கம்]

ஒன்றிரண் டொழிய வாளி
யுளவெலாம் மாரன் றூர்த்தான்
குன்றிரண் டனைய கொங்கைக்
கோமக ளாற்று ளாகி
மின்றிரண் டனைய மேனி
விமலன்மேற் சாய்ந்து வீழ்வாள்
பொன்றிரண் டனைய மாதர்
பொருந்தலா ணாணி நின்றாள்.

[இ-ள்.] ஒன்று இரண்டு ஒழிய-ஒன்று இரண்டு தவிர, வாளி உள எலாம்-அம்பு உள்ளன வெல்லாம், மாரன்-மன்மதன், தூர்த்தான்-வீசி மறைத்தான், இரண்டு குன்று அனைய கொங்கைக் கோமகள்-இரண்டு மலைபோலும் நகில்களையுடைய அரச மகளாகிய மாயையானவள், ஆற்றாளாகி-(அவ்வம்பின் கொடுமையைத்) தாங்கப்பொறுதவளாகி, மின் திரண்ட அனையமேனி-மின்னலானது திரண்டு உருக்கொண்டது போல் விளங்குகின்ற திருமேனியையுடைய, விமலன்மேல்-அல்லமதேவன்மீது, சாய்ந்து வீழ்வாள்-சாய்ந்து விழ எழுங் கருத்தினள், பொன் திரண்ட அனைய மாதர்-திருமகள் பலர் கூடி நிற்பதுபோல் தோன்றுகின்ற மகளிர், பொருந்தலால்-அவ்விடத்து இருத்தலால், நாணி நின்றாள்-(அல்லமன் மீது விழாது) நாணத்தோடு நின்றாள். [எ-று.]

[கு-ரை.] மன்மதன் கணை ஐந்து. தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம். சொல்லும் நினைவும் தாமரையின் செயல். வெய்துயிர்த்து இரங்கல் மாவின் செயல். வெதுப்பும் தய்ப்பன தெவிட்டலும் அசோகின் செயல். அழுங்கலும் மொழிபல பிதற்றலும் முல்லையின் செயல். அயிர்ப்பும் மரணமும் நீலத்தின்செயல். இவற்றுள் முல்லை நீலம் ஆகிய இரண்டு பாணங்கள் நீங்கலாக ஏனைய மூன்று அம்புகளையும் எய்தான் மன்மதன் என்றுவது ஒன்றும் இரண்டும் மூன்று ஆதலின் கடைசி மூன்று நீங்கலாக தாமரை மா ஆகிய இரண்டு பூக்களைமட்டும் எய்தான் என்றுவது கொள்க. திரண்ட அனைய திரண்டனைய என்றவிடத்து அகரம் தொகுத்தல் விகாரம். வீழ்வாள் முற்றெச்சம். செம்மேனியம்மான் ஆதலின் மின்றிரண்டனைய மேனி என்றார். (29)

[மாயை காம மயக்க மிகுதியால் அமளியுள்ளே சேர்தல்]

தளிரியல் காமத் தீயிற் சருகுபட் டாற்று ளாகி
யுளநிகர் மகளிர் சில்லோ ருடன்வர வெழுந்துட் போகி
யளிமல ரளகஞ் சோர வணிமுலைத் துகில்வி லங்க
வளமலி யணையின் மீது வாயுயிர்ப் பெறிந்து வீழ்ந்தாள்.

[இ-ள்.] தளிர்இயல்-தளிர்போன்ற நிறமுடைய மாயையானவள், காமத்தீயில்-காமமாகிய நெருப்பினில், சருகுபட்டு-சருகாகப்பட்டு, ஆற்றுளாகி-பொறுதவளாகி, உளம் நிகர் மகளிர் சில்லோர்-தன் மனம்போன்ற மகளிர் சிலர், உடன்வர-தன்னுடன்வர, எழுந்து உட்போகி-எழுந்து உள்ளே சென்று, அளிமலர் அளகம் சோர-வண்டுகள் மொய்க்கப்பட்ட மலரையணிந்த கூந்தல் சோரவும், அணி-அழகிய, முலைதுகில் விலங்க-முலைமேலுள்ள ஆடை விலகவும், வளம் மலி அணையின்மீது-வளத்தால் நிறைந்த மலர்ப்படுக்கையின்மேல், வாய் உயிர்ப்பு எறிந்து-வாயால் மூச்சு விட்டு, வீழ்ந்தாள்-விழுந்தனள். [எ-று.]

[கு-ரை.] தளிர்இயல் அன்மொழி. உயிர்த்தோழியரை உளநிகர் மகளிர் என்றார். சகலை, விலாசி என்ற இரு தோழியர் உள நிகர் தோழிகளாதலின் சிலர் என்றார். சில என்பதற்கு இரண்டு என்ற பொருள் தமிழில் பெரும்பாலான வழக்கு. (30)

[மாயை தோழியரை வினாதல்]

**வேறு**

அள்ளிக் கொளும்பே ரழகனரு
ணமம் புகலு மவாவாலு
முள்ளக் கருத்தை யுயிர்போலு
மகளிர்க் குணர்த்து முகத்தாலு

மெள்ளப் பவள வாய்திறந்து
வீடே தலமன் மேவுதற்குப்
பிள்ளைப் பிறைவா ணுதன்மடவீ
ரென்ருள் பிறரை வென்ருளே.

[இ-ள்.] பிறரை வென்ருள்-அல்லமனல்லாத பிற ஆடவர்களை எல்லாம் வென்றவளாகிய மாயை, அள்ளிக்கொள்ளும் பேர் அழகன்-கைகளால் மொண்டுகொள்ளத்தகும் பெரிய அழகையுடைய அல்லமதேவனது, அருள் நாமம்-அருளாநின்ற பெயரை, புகலும்-சொல்லவேண்டும் என்கின்ற, அவாவாலும்-ஆசையினுலும், உள்ளக்கருத்தை-மனதில் எண்ணிய எண்ணத்தை, உயிர்போலும்-உயிர்போன்ற, மகளிர்க்கு-தோழியர்களுக்கு, உணர்த்தும்-அறிவிக்கவேண்டும் என்கிற, உளத்தாலும்-நினைப்பினுலும், மெள்ள-மெதுவாக, பவளவாய்-பவளம் போன்ற வாயினை, திறந்து-திறந்து, அல்லமன்-அல்லமாப்பிரபுதேவன், மேவுதற்கு-தங்கி இருத்தற்கு, வீடு ஏது-வீடு எதுவாகும், பிள்ளைப்பிறை-இளம் பிறைமதிபோலும், வாள்-ஒளி பொருந்திய, நுதல் மடவீர்-நெற்றியையுடைய தோழியர்களே, என்ருள்-என்று கேட்டாள். [எ-று.]

[கு-ரை.] பவளவாய், உவமைத்தொகை. பிள்ளைப்பிறை, பண்புத்தொகை. நாமம் புகலும் அவாவால் அலமன் என்றும் உள்ளக்கருத்தை உணர்த்தும் முகத்தால் வீடு ஏது என்றும் வினவினுள் என்க. (31)

[தோழியர் விடையிறுத்தல்]

இறங்கு துறையி னீத்தாயிற்
றென்ன மாயை யிடத்துமயல்
பிறந்த பொழுதே யுயிரளவாய்
நின்ற தென்னும் பெற்றிமையை
யறிந்து மகளிர் நின்கருத்தை
யறிய வுணர்த்தி னல்லமற்குச்
சிறந்த மனையொன் றளிக்குதுமென்
றுரைத்துப் பின்னும் செப்புவார்.

[இ-ள்.] இறங்கு துறையில்-இறங்கிய நீர்த்துறையில் தானே, நீத்தாயிற்று-நீந்துதல் உண்டானுல், என்ன-போல, மாயையிடத்து-மாயையிடத்து, மயல்-காமவேட்கையானது-பிறந்தபொழுதே-தோன்றியகாலத்தே, உயிரளவாய்நின்றனு, உயிரின் அளவு எவ்வளவோ அவ்வளவாய் நின்றது, என்றும்

பெற்றிமையை-என்கின்ற தன்மையை, அறிந்து-தெரிந்து, மகளிர்-அத்தோழியர், நின்கருத்தை-நினது மனவிருப்பினை, அறிய-யாங்கள் தெரிந்துகொள்ள, உணர்த்தின்-அறிவிப்பாயானால், அல்லமற்கு-அல்லமதேவனுக்கு, சிறந்த மனை ஒன்று-சிறந்துள்ள வீடு ஒன்றினை, அளிக்குதும்-கொடுப்போம், என்று உரைத்து-என்று சொல்லி, பின்னும்-மேலும், செப்புவார்-சொல்லுவார். [எ—று.]

[கு-ரை.] நீர் நிலைகளில் அடிவைத்த வுடனேயே நிலைக்காமல் நீங்கக் கூடிய அளவு நீர் இருந்தால் எவ்வாறு துன்பம் மிகுமோ அதுபோல் மாயைக்குக் காமம் தோன்றிய அப்போதே உயிர் போகக்கூடிய அளவில் வந்து துன்புறுத்தியது என்று உவமை காண்க. உவமையணி. (32)

[மேலும் தோழியர் மாயையை வினவுதல்]

காம முளைதோன் றிற்றுனக்கென்
றெங்கள் கருத்திற் றோன் றிற்று
வாம மணிமே கலைமருங்குல்
வடிவேல் மருட்டு மதர்விழியா
யாமு நினது நெஞ்சகமும்
வேற லேநின் னிதயத்திற்
சேம மதனை நாணமற்
செப்பு கென்றார் திருந்திழையார்.

[இ—ள்.] திருந்திழையார் - திருத்தமுற்ற அணிகலன்களையுடைய தோழியர்கள் (மாயையை நோக்கி), வாமம்-அழகிய, மணிமேகலை-மணிமேகலை என்னும், ஆபரணத்தால்-மேலாடையால் சூழப்பட்ட, மருங்குல்-இடையினையும், வடிவேல்-வடிக்கப்பட்ட கூர்மையான வேலாயுதமோ என, மருட்டும்-பார்த்தவரை மருளச்செய்கின்ற, மதர்விழியாய்-களிப்புப்பொருந்திய கண்களையும் உடைய எங்கள் தலைவியே, உனக்கு-உன்றனக்கு, காமமுளை-காமத்தின் அங்குரமானது, தோன்றிற்று என்று-தோன்றி இருக்கின்றதென்று, எங்கள் கருத்தில் தோன்றிற்று-எங்களுடைய மனதில் தோன்றுகிறது, யாமும்-யாங்களும், நினது நெஞ்சகமும்- உனது மனமும், வேறு அலேம்-ஒருபொருளே யாவம், (ஆதலின்) நின் இதயத்தில்-நினது கருத்தினுள், சேமம் அதனை-பாதுகாவலாக வைத்திருக்கப்பட்ட (இரகசியத்தை) மறையினை, நாணமல்-வெட்கம் உறாமல், செப்புக என்றார்-சொல்லுவாயாக என்று கூறினார்கள். [எ—று.]

[கு-ரை.] செப்புக, கவவீற்று வியங்கோள் வினைமுற்று முன்னிலைக் கண்வந்தது. வேறலேம், எம் விகுதி படர்க்கையாரை உளப்படுத்தி தன்மைப் பன்மையாக நின்றது. (33)

[மாயை பேசாதிருந்தமை]

கன்னித் தன்மை யழியுமெனு
நாணு முலகங் காக்குமொரு
மன்னற் குரிய மகளென் னும்
பெருமை தானு மத்தளிகன்
றன்னைப் புணர்ந்தா ளென்றுவருந்
தகாத மொழியுந் தன்னுளத்தி
லுன்னிக் கருங்கண் மடமாயை
யொன்று முரையா திருந்தன ளால்.

[இ-ள்.] கருங்கண்-கரிய கண்களையும், மடம்-மடப்பத்தையும் உடைய, மாயை-மாயையானவள், கன்னித்தன்மை-தான் கன்னியாக இருக்கும்நிலை, அழியும் எனும் நாணும்-கெட்டுவிடும் என்ற நாணத்தையும், உலகம் காக்கும்-உலகத்தை பாதுகாக்கின்ற, ஒரு மன்னர்க்கு-ஒப்பற்ற அரசனுக்கு, மகள் என்னும்-புதல்வி என்று சொல்லப்படுகின்ற, பெருமைதானும்-பெருமையையும், மத்தளிகன் தன்னை-மத்தளமுழக்குபவனை, புணர்ந்தாள் என்னும்-கூடினுள் என்று பின்வரக்கடவதாகிய, ஒரு தகாத மொழியும்-ஒரு பழிச்சொல்லினையும், தன் உளத்தில் உன்னி-தன் மனதுள் யோசித்து, ஒன்றும் உரையாது இருந்தனள்-எதிர்மொழி ஒன்றும் சொல்லாதிருந்தாள். [எ-று.]

[கு-ரை.] ஆல் அசை. பெருமைதானும் தான் சாரியை. மணமாகாத பெண்களைக் கன்னி என்றல் மரபு. "கட்டழல் காமத்தீயிற் கன்னியைக் கலக்கினுனும்." என்று மணமாகாதவள் என்ற பொருளில் பிறரும் கூறுதல் காண்க. (34)

[சகளை மாயையின் நிலையை விலாசியிடத்து வினவல்]

இறைவி யொன்று முரையாமல்
வாளா விருப்ப வேவல்புரிந்
துறவி னின்ற சகளையெனு
மாது பிராட்டி யுரையொடுதான்
பிறவு மின்று வேறுபட்டா
ளென்னே பெண்ணே யறியேனென்
றறிவு கலங்கி யொருவகலா
விலாசி யணங்கை வினவினள்.

[இ—ள்.] இறைவி-மாயையானவள், ஒன்றும்-ஒரு சொல்லும், உரையாமல்-சொல்லாமல், வாளா இருப்ப-சும்மா இருக்கவும், ஏவல்புரிந்து-கட்டளையிட்டதைச் செய்து, உறவின் நின்ற-உறவினைக்கொண்டுநின்ற, சகளை எனும் மாது-சகளை என்று சொல்லப்படுகின்ற மாதாகிய தோழி, பிராட்டி-நமது தலைவி, உரையொடு-வாய்ச்சொல்லோடு, பிறவும்-மனமும் செயலும், இன்று-தன்னிடத்தில் சொல்லுதல் இல்லையாக, வேறுபட்டாள்-வேற்றுமையடைந்தாள், பெண்ணே-விலாசி என்னும் மாதே, என்-இதற்குக் காரணம் யாது, அறியேன் என்று-தெரிந்திலேனே என்று சொல்லி, அறிவு கலங்கி-உணர்வுமயங்கி, ஒருவகலா-விட்டு நீங்காத, விலாசி அணங்கை-விலாசி என்னும் அணங்குபோன்ற தோழியை, வினவினள்-கேட்டாள். [எ—று]

[கு-ரை.] உரை என்றதால் பிறவும் என்பதற்கு மனமும் செயலும் என்று கூறப்பட்டது. என்னே என்பதில் ஏ அசைநிலை. விலாசி அணங்கு பண்புத்தொகை. (35)

[விலாசி விடை யிறுத்தல்]

இனியான் மறைப்ப தென்கொ னுமக்
கின்று வந்த வல்லமனுர்
தனிநா யகன்பே ரழகென் னு
நறவை யுண்டு தரியாமற்
கனிவாய் மடந்தை யுளமழிந்தா
ளென்று விலாசி கட்டுரைக்க
முனியா ளியைந்து புன்னகைகொண்
டிருந்தாள் மாயை முகங்கவிழ்ந்து.

[இ—ள்.] நுமக்கு-உங்களுக்கு, இனியான் மறைப்பது என்-இனிமேல் யான் மறைக்கவேண்டியவை யாது, இன்று வந்த-இன்று மத்தளிகனுகவந்த, அல்லமனும் தனி நாயகன்-அல்லமனுகிய ஒப்பற்ற தலைவனது, பேர் அழகு என்னும்-பெரிய அழகு என்று சொல்லுகின்ற, நறவை உண்டு-தேனைக்குடித்து, தரியாமல்-பொறுக்கமாட்டாமல், கனிவாய் மடந்தை-கொவ்வைக்கனி போலும் வாயையுடைய மாயையானவள், உளம் அழிந்தாள்-கருத்து அழிந்தாள், என்று விலாசி கட்டுரைக்க என்று விலாசி என்னும் தோழியானவள் கூற, மாயை-மாயையானவள், இயைந்து-(அதற்கு) சம்மதித்து, முனியாள்-கோபிக்காதவளாகி, முகம் கவிழ்ந்து-தலை குனிந்து, புன்னகைகொண்டு இருந்தாள்-குறுநகை கொண்டிருந்தாள். [எ—று.

[கு-ரை.] சொல்-அசைநிலை. மதுவானது அறிவைக் கொல்லும் தன்மையது என்று நூலோர் கூறுதற்கேற்ப, அழகாகிய நறவையுண்டு கருத்தழிந்தாள் மாயை என்று கூறப்பட்டது. முனியாள் முற்றெச்சம். (36)

[தோழியர் மாயையின் மனதை யறிதல்]

மாயை யிடையை யுளண்முலையான்
மற்றை மாதர் போலென்று
தூய மதிஞ ரனுமிதித்துச்
சொல்லு மருங்குற் றோகைதான்
வாயி னிளவெண் ணகைதோன்ற
வாளா விருப்பக் கண்டுமய
லாயி னுடைய ளெனமாத
ரறிந்தா ரருத்தா பத்தியினால்.

[இ-ள்.] மாயை-மாயையானவள், இடையை உளள்-மருங்குலை உடையாள், மற்றை மாதர்போல்-ஏனைய மகளிரைப் போல, என்று-என்று, தூய மதிஞர்-தூய்மையான அறிவை யுடைய தருக்க நூல் வல்லவர், அனுமிதித்து-அனுமானத்தால் அறிந்து, சொல்லும்-சொல்லப்படுகின்ற, மருங்குல்-இடையை யுடைய, தோகை-மயில்போல்பவளாகிய மாயையினது, வாயின்-வாயினிடத்து, இள வெண் நகை தோன்ற-இளமையான வெள்ளிய சிரிப்பு தோன்றுதலோடு, வாளா இருப்ப-சும்மா இருக்க, கண்டு-(அதனை)ப்பார்த்து, மயல் உடையள் என-காமவேட்கை யுடையவள் என்று, அருத்தாபத்தியினால் - அருத்தாபத்தி அளவையால், மாதர் - தோழியர்கள், அறிந்தார் - தெரிந்து கொண்டார்கள். [எ-று.]

[கு-ரை.] உண்மையை அறிதற்குக் கருவியான அளவைகள் எட்டு. பிரத்தியட்சம், அனுமானம், உபமானம், ஆகமம், அருத்தாபத்தி, அபாவம், ஐதிகம், சம்பவம் என்பன. அவற்றுள்: காணல், பிரத்தியட்சம். புகையைக்கண்டு நெருப்பு உண்டெனல் அனுமானம். மரைபசுப்போல் எனல் உபமானம். பெரியோர் வாய்ச்சொல் ஆகமம். பகலுண்ணான் பருத்திருப்பான் என்றவிடத்து இரவில் ஒளித்து உண்பான் என உணர்தல் அருத்தாபத்தி. முன்னும் இல்லை பின்னும் இல்லை ஒன்றின்ஒன்று இல்லை ஒருகாலத்தும் இல்லை எனல் அபாவம். இம்மரத்திற்பேயுளதென்பது ஐதிகம். ஆயிரத்தில் நூறு உண்டெனல் சம்பவம். இவை எட்டையும் காட்சி அனுமானம் ஆகமம் என்னும் மூன்றில் அடக்குவர்; உபமானம் பிரத்தியட்சத்திலும் அருத்தாபத்தியும் சம்பவமும் அனுமானத்திலும் ஐதிகம் ஆகமத்திலும் அபாவம் மூன்றிலும் அடக்கப்படும். அவற்றுள் அனுமானமும் அருத்தாபத்தியும் இதில் கூறப்படுகின்றன. மாயை இடையை உளள் என்பது பிர

திக்ஞை. மூலையால் என்பது ஏது. மற்றை மாதர்போல் என்பது திருட்டாந்தம் எனவே நெருப்புண்டு; புகையுண்மையால், அடுக்களைபோல் என்றாற் போல இவை கூறப்படுதலின் அனுமானப் பிரமாணமாயிற்று. விலாசி கட்டுரைத்ததைக் கேட்ட மாயை முனியாளாகி இளவெண் நகை தோன்ற வாளா இருந்தமையில் மாதர் அறிந்த செயல் அருத்தாபத்திப்பிரமாணம் என்றார் என்க. (37)

[மதமானி அல்லமனிடத்துச் செல்லல்]

வல்லி யுள்ள மறிந்தனமிம்
மாயை தனையு மயக்கவல்ல
வல்ல மன்றன் கருத்தையினி
அறிய வேண்டு மென்றவர்தாஞ்
சொல்ல வொல்லை மதமானி
யென்பாள் யானத் தோன்றல்தனை
மெல்ல வுள்ள மறிவலெனச்
சென்றாள் விநோத விமலன்பால்.

[இ-ள்.] வல்லி-கொடிபோன்ற மாயையினது, உள்ளம்-மனதை, அறிந்தனம்-தெரிந்துகொண்டோம், இம்மாயை தனையும்-இந்த சிறந்த மாயையினையும், மயக்கவல்ல-மயக்கும் வல்லமையையுடைய, அல்லமன் தன்-அல்லமனது, கருத்தை-உளத்தினை, இனி அறியவேண்டும்-இனிமேல் தெரிந்துகொள்ள வேண்டும், என்று-என்று, அவர் சொல்ல-அந்தத் தோழியர் சொல்ல, ஒல்லை-விரைவினில், மதமானி என்பாள்-மதமானி என்கின்ற தோழியானவள், யான் அத் தோன்றல்தனை-யானே அந்த அல்லமதேவனை (அணுகி), மெல்ல உள்ளம் அறிவல் என-மெதுவாகக் கருத்தை அறிந்து வருவேனென்று, விநோத விமலன்பால்-திருவிளையாட்டையுடைய மலமற்ற அல்லம தேவனிடத்து, சென்றாள்-போயினாள். [எ-று.]

[கு-ரை.] அறிந்தனம் தன்மைப்பன்மை. அறிவல் தன்மை ஒருமை. தோன்றல்+தனை "னலமுன் றனவும் ணளமுன் டணவும் ஆகும் தநக்களா யுங்காலே" என்ற நூற்பாப்படி 'றனை' என ஆக, "குறில்செறியாலள அல்வழி வந்த தகரந் திரிந்தபின் கேடும்" என்ற விதிப்படி லகரம் கெட, 'தோன்றறனை' என ஆயிற்று. (38)

[அல்லமன் கூறல்]

மங்கை வருமவ் வரவையறிந்
தவளோர் மாற்றம் வகுத்திடுமுன்
தங்கு மனையிற் சென்றிருப்ப
னுங்க டலைவி யெனைத்தேடிற்

றிங்க ணுதல்வெண் ணகைக்கருங்கட்
செவ்வாய்த் திருவே செப்புகவென்
றெங்க டலைவ னியம்பமத
மானி யியம்பன் மேயினுள்.

[இ-ள்.] எங்கள் தலைவன்-எங்கள் தலைவனுகிய அல்லமதேவன், மங்கை-மதமானியானவள், வரும்-தன்னிடத்திற்கு வருகின்ற, வரவை அறிந்து-வருகின்ற காரணத்தைத் தெரிந்து, அவள் ஓர் மாற்றம்-அவள் ஒரு சொல், வருத்திடுமுன்-சொல்லுவதற்கு முன்னுல், தங்கு மனையில் - நான் தங்கியிருக்கும் இடத்தில், சென்று இருப்பன்-போயிருப்பேன், நுங்கள் தலைவி-உங்கள் தலைவியாகிய மாயையானவள், எனைத்தேடில்-என்னைத் தேடுவாளேயானுல், திங்கள் நுதல் - பிறைபோல் உள்ள நெற்றியையும், வெள்நகை - வெண்மையான பற்களையும், கருங்கண்-கரிய கண்களையும், செவ்வாய்-சிவப்பான வாயையும் உடைய, திருவே-திருமகள்போல் பவளே, செப்புக என்று-சொல்வாயாக என்று, இயம்ப-சொல்ல, மதமானி-மதமானியாகிய தோழி, இயம்பல் மேயினுள்-சொல்லத் தொடங்கினுள். [எ-று.]

[கு-ரை.] திங்கள்நுதல் உவமைத்தொகை. வெள்நகை, கருங்கண், செவ்வாய் பண்புத்தொகைகள். வெண்ணகை, கருங்கண், செவ்வாய் முரண்தொடை. "ஓவும் உவ்வும் ஏயொடு சிவணும்" என்ற விதிப்படி திரு திருவே என விளியேற்றது. செப்புக. கவ்வீற்று வியங்கோள் வினைமுற்று முன்னிலைக்கண் வந்தது. இருப்பன் அன்விகுதி தன்மைக்கண் வந்தது மனையில் ஏழாம் வேற்றுமை இடப்பொருளில் வந்தது. (39)

[மதமானி கூறுதல்]

வீடு புறநீ வேண்டற்க வைய வெமது விளங்குமணி
மாட நினதே இவணுறைக வரசர் கோமான் மகளிதய
பீட மதனி லுனைவிடா திருத்தி இருந்தாள் பிரிவறநீ
கூட உறையும் விருப்புடைய ளென்றுள் குறிப்பு
[வெளிப்படவே.

[இ-ள்.] ஐய-தலைவனே, நீ-நீவிர், வீடு-மனையினை, புறம்-வெளியிடத்திலே, வேண்டற்க-விரும்பாதொழிக, எமது-எங்களுடைய, விளங்கும்-விளங்காநின்ற, அணிமாடம்-அழகிய மாளிகையானது, நினதே-உன்னுடையதே, இவண்உறைக-(ஆதலின்) இவ்விடத்து இருப்பாயாக, அரசர்கோமான்-

மன்னர்களுக்கு மன்னனது, மகள்-புதல்வியானவள், இதய பீட மதனில் தனது நெஞ்சமாகிய பீடத்தின் கண்ணே, உனை விடாது-உன்னை நீக்காது, இருத்தியிருந்தாள்-தங்கவைத்திருந் தாள், பிரிவுஅற-பிரிதல் இல்லாமல், நீ-நீவிர், கூட-தன்னோடு ஒன்றுபட, உறையும்-இருக்கவேண்டும் என்னும், விருப்பு உடையள்-ஆசையுடையவள் ஆனாள், என்றாள்-என்று மத மானி சொன்னாள், குறிப்பு-மாயையினது குறிப்பு, வெளிப்பட- வெளிப்படும்படியாக. [எ—று.]

[கு-ரை.] ஐய. அண்மைவிளி. ஐய என்ற சொல் "அண்மையில் இயல்பும் ஈறு அழிவும்" என்றபடி ஈறு அழிந்து ஐய என நின்றது. இதய பீடம் உருவகம். நின்னை மாயை கூடும் கருத்தினள் என்னும் குறிப்பினை வெளிப்படுத்துகிற நிலையில் சொன்னாள் என்பதனைக் குறிப்பு வெளிப்படவே என்றார்.

[அல்லமதேவன் புன்னகைகொண்டு மொழிதல்]

ஒன்று மில்லே னனீவிர்
மிகவு முடையீ ரும்மிறைவி
வென்றி யரசர் குலமடந்தை
சாதி யறியா விகிர்தன்யா
னன்றி மகளிர் நீயிர்நான்
மைந்த னென்றா லடாதம்மா
வென்று முங்க ளுடனுறைவென்
றெந்தை நகைகொண் டியம்பினான்

[இ—ள்.] நான் ஒன்றும் இல்லேன்-நான் ஒரு பொருளும் உடையேன் அல்லன், நீவிர் மிகவும் உடையீர்-நீர் எல்லாப் பொருளும் மிகவும் உடையீர், உம் இறைவி-உங்கள் தலைவி, வென்றி அரசர் குல மடந்தை-வெற்றியையுடைய மன்னர் குலத்தில் பிறந்த பெண், யான் சாதி அறியா விகிர்தன்-யான் இன்ன குலம் என்று அறியப்படாத வேறுபாட்டை யுடைய வன், அன்றி நீயிர் மகளிர்-அல்லாமலும் நீங்களோ பெண்கள், நான் மைந்தன்-யானோ ஆடவன், என்றால்-என்று சொல்லக் கூடிய நிலைமையில் இருக்குமானால், என்றும் உங்களுடன் உறைவு-என்றைக்கும் உங்களுடனே இருத்தல், அடாது என்று-தகுதியாகாது என்று, எந்தை-எமது தலைவனாகிய அல்லமதேவன், நகைகொண்டு - புன் சிரிப்புக்கொண்டு, இயம்பினான்-சொன்னான். [எ—று.]

[கு-ரை.] எல்லாமாய் அல்லவுமாய் நிற்றல்பற்றி ஒன்றும் இல்லேன் என்றும், சங்கமன் தனக்கு ஒரு சாதி யுன்னினல் அங்கையின் அமர் தரும் அரற்கும் முன்னினன் என்றும் சாதியும் குறியும் நீத்து என்றும் கூறுவதற் கேற்ப சாதியறியா விகிர்தன் என்றும், ஆடவர்களில் ஆண் பலமில்லாத வரும் கிழத்தன்மையுடையவரும் பெண்கள் இருக்குமிடத்தில் இருந்தாலும் இருக்கலாம் சிறந்த ஆண் தன்மையுடைய காளையர்கள் இருத்தல் தகாது என்பதற்காக தன்னை மைந்தன் என்றும் சாமர்த்தியமாக அல்லமன் கூறு கிறார். தன்னைப்பற்றுவதாக வந்த மாயை இவ்வாறு மயங்குகிறாள் என்பதை அவர்களுக்குக் குறிப்பாகக் காட்டுவான்வேண்டி புன்சிரிப்புக் கொள்ளுகின்றார் ஆகலின் "எள்ளல் இளமை பேதமை மடம் என்று உள்ளப்பட்ட நகை நான்கென்ப" என்றதனுள் எள்ளல் பற்றிவந்த புன்னகை இது. அம்மா வியப்பிடைச் சொல். (41)

[மதமானி இன்மொழி புகறல்]

நள்ளா தொழியி னன்றியவ
ணட்டா ளாயிற் பின்னைப்பேதங்
கொள்ளா ளொருவர் மாட்டுமெனி
லுயிர்போற் சிறப்பிற் கொண்டவுன்னை
யெள்ளா ளென்ன வேண்டுமோ
வென்சொ லெல்லா மிருந்தறிதி
வள்ளா லெனவின் மொழிபுகன்றாள்
மாற்றம் அறிந்த மதமானி.

[இ—ள்.] மாற்றம்-பேச்சில், அறிந்த-தெரிந்துவல்ல, மதமானி-மதமானி என்னும் தோழியானவள், வள்ளால்-அல்லமதேவனே, அவள்-அந்த மாயையானவள், நள்ளாது ஒழியின் அன்றி-நட்பு செய்யாவிட்டால் அல்லது, நட்டாள் ஆயின்-நட்பு கொண்டனள் ஆயின், ஒருவர்மாட்டும்-யாரிடத்தும், பின்னை-பின்பு, பேதம் கொள்ளாள்-வேறுபாடு கொள்ளமாட்டாள், எனில்-என்றால், உயிர்போல்-தனது உயிரைப்போல், சிறப்பில்-சிறந்த பொருளாக, கொண்டவுன்னை-கொள்ளப்பட்டவுன்னை, எள்ளாள்-இகழ்ச்சி செய்யமாட்டாள், என்னவேண்டுமோ-என்று சொல்லவேண்டுமோ, என் சொல் எல்லாம்-எனது சொற்களை எல்லாம், இருந்து அறிதி-சிலகாலம் தங்கி அறிவாயாக, என-என்று, இன்மொழி-இனிய சொல்லினை, புகன்றாள்-சொல்லினாள். [எ—று.]

[கு-ரை.] தான் பேசுதலில் வல்லவளே ஒழிய பிறர் கருத்தையறியும் வல்லமை இலள் என்பது தோன்ற மாற்றம் அறிந்த மதமானி என்றார். எல்லாவுயிருக்கும் உயிராகக் கலந்து நிற்கின்ற இறைவனாகிய அல்லமனை தனது உயிர் என்று ஒற்றுமைப் பொருளில் ஒன்றுபடுத்திக் கூறவேண்டி

யிருக்க உயிர்போல என்று தன் உயிர்வேறு அல்லமன் வேறு என்று வேறு படுத்திக் கூறுகின்ருள் மாற்றம் அறிந்தவளாக இருந்தும் என்று அடைமொழி எள்ளல்பற்றி வந்தது என்று கோடலும் ஒன்று. வள்ளல் என்ற விளிப்பெயர் ஈற்றயல் நீண்டு வள்ளால் என நின்றது. "லகார வீற்றுயர் பெயர்க்கு அளபு அயல் நீட்சியும் .....உருபே" என்ற விதிப்படி. பின்னை என்பது பினே என இடைக்குறைந்து நின்றது. (42)

[அல்லமன் விடை]

காரிற் சிறந்த மலர்க்குழலாய்
நின்சொ லெல்லாங் கவர்பொருளேப்
பாரித் திருந்த தேறுகிலேன்
பணியொன் ரெருவர் பாற்புரிவோர்
தூரத் திருந்து வருங்காலந்
துணிந்து வருத றுணிவென்ரு
ஞரிக் கிணங்கு பவன்போல
நடித்து விடுத்து நழுவுவோன்.

[இ—ள்.] நாரிக்கு-மாயைக்கு, இணங்குபவன் போல-உடன்படுபவனைப்போல, நடித்து-ஆடி, விடுத்து-விட்டு, நழுவுவோன்-மெதுவாகச் சென்றுவிடுகின்ற அல்லமதேவன், காரில்-மேகத்தைப்போல, சிறந்த-சிறந்திருக்கின்ற, மலர்க்குழலாய்-மலரை முடித்துள்ள கூந்தலையுடையவளே, நின் சொல் எல்லாம்-நினது சொற்கள் எல்லாம், கவர்பொருளை-இரண்டு பொருளை, பாரித்து இருந்த-பரப்பி இருந்தன, தேறுகிலேன்-அவற்றின் உண்மையைத் தெளிகிலேன், ஒருவர்பால்-ஒருவரிடத்து, பணி ஒன்று புரிவோர்-ஒரு தொழிலைச் செய்பவர், தூரத்து இருந்து-தூரமான இடத்திலே குடியிருந்து, வரும் காலம் துணிந்து-தாம் தொழில்செய்ய வரும் காலத்தை நன்கு தெளிந்து, வருதல்-வருவது, துணிவு என்ருன்-உறுதியான தன்மை என்று சொன்ஞன். [எ-று.]

[கு-ரை.] காரில் இல் ஐந்தனுருபு ஒப்புப்பொருளில் வந்துளது. மலர்க்குழல் இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை. எல்லாம் கவர் பொருளை என்பதற்கேற்ப பாரித்திருந்த எனப் பன்மையாற் கூறினர். பால் ஏழாம் வேற்றுமை உருபின் பொருள்பட வந்தது. (43)

[மதமானி மீளவும் கூறலும் அதற்கு அல்லமன் மறுமொழி பகர்தலும்]

மன்னர் மன்னன் மகடிருவோ
லக்கங் காணு மைந்தரோ
டுன்னை யுன்னு மவளல்லள்
தலைவ ஞக வுன்னினளா

லென்ன வன்ன மனையாய்நுந்
தலைவிக் கியற்கை யுயர்த்திடுதன்
முன்ன மென்ன வடங்கியொழு
குறுத லெனக்கு முறையென்றான்.

[இ-ள்.] மன்னர் மன்னன் மகள்-அரசர்க்கு அரசனின் மகளான மாயை என்பவளது, திருவோலக்கம் காணும் மைந்தரொடு-திருச்சபையைக் காணும் ஆடவரோடு, உன்னை உன்னு மவள் அல்லள்-உன்றனை ஒருவனாக நினைப்பவள் அல்லள், தலைவனாக உன்னினள்-தலைவனாகவே எண்ணினாள், என்று-என்று தோழி சொல்ல, (அல்லமதேவன்) அன்னம் அனையாய்-அன்னம்போலும் நடையையுடையவளே, நும் தலைவிக்கு இயற்கை-உங்களுடைய தலைவிக்கு இயல்பான குணம், உயர்த்திடுதல்-பிறரை உயர்த்திச்சொல்லுதல், முன்னம் என்ன-முன்போலவே, அடங்கி-அடக்கமுற்று, ஒழுகுறுதல்-நடத்தல், எனக்கு முறை-எனக்கு இயல்பாகும், என்றான்-என்று சொன்னான். [எ-று.]

(44)

[கு-ரை.] அன்னம் ஆகுபெயர்.

[மதமானி வெளிப்படக் கூறல்]

சொற்போர் செய்து மறைப்பதினி
யென்னும் யாங்கள் தொழுமிறையாய்
நிற்போய் நின்னை யெதிர்ந்தளவே
கரியுண் விளவி னிறையழிந்தாள்
கற்போ னின்ற வருந்தவருங்
காணு முன்ன முனைக்கண்ட
தற்போ னின்று தடுமாற
நினைப்போ லிருந்த தலைவியே.

[இ-ள்.] நாம்-இருவரும், சொற்போர் செய்து-சொற்களாலே ஒருவரை ஒருவர் வெல்லும்படி பேசி, மறைப்பது-மறைக்கத்தக்கது, இனி என்-இனிமேல் யாது, யாங்கள்-நாங்கள், தொழும்-வணங்க, இறையாய் நிற்போய்-தலைவனாக நிற்பவனே, கல்போல் நின்ற-மலைபோல சலியாது நின்ற, அருந்தவரும்-அரிய தவத்தினர்களும், காணுமுன்னம் (மாயையாகிய எங்கள் தலைவியை)-காண்பதற்கு முன்பே, உனைக்கண்டதன்போல் நின்று-உன்னைக்கண்ட தன்னை (மாயையை)ப் போல நின்று, தடுமாற-மயங்க, நினைப்போல்-உன்னைப்போல

கலங்காது, இருந்த-நின்ற, தலைவி-மாயை, நின்னை எதிர்ந்த அளவே-உன்னை எதிர்ப்பட்ட மாத்திரத்திலே, கரி உண் விளவின்-யானையால் உண்ணப்பட்ட விளாவினைப்போல, நிறை அழிந்தாள்-உள்வீடு அற்ருள். [எ—று.]

[கு-ரை.] அல்லமன் தற்போதுள்ள கலங்காநிலை மாயையின் முன்னிருந்த நிலைக்கும், மாயை தற்போதுள்ள கலங்கியநிலை தவசிகள் மாயையைக்கண்ட நிலைக்கும் உவமையாகக் கூறப்பட்டுள்ள நயம் அறிந்து இன்புறற்பாலது. யானையுண்ட விளங்கனி என்பது யானையால் உண்ணப்பட்ட விளங்கனி உள்ளீடு அற்றுவிடும் என்றும், யானைத்தீ என்னும் நோயால் பீடிக்கப்பட்ட விளங்கனி உள்ளீடு அற்றுவிடும் என்றும் இருவகையாகக் கூறுவர் ஆன்ரோர். மாயை உன்னைக் காதலித்து மயங்கிக் கிடக்கிருள் இதனை வேறு வகையாக மறைத்துப் பேசி ஆவது ஒன்றும் இல்லை என்று வெளிப்படையாகக் கூறுகிருள் தோழி. சொற்போர்-வாக்குவாதம். 'கங்கைக்கரையிலும் முழையிடத்தும் புண்ணிய வனத்தும் எய்தி புற்றுமாய் மரமாயுற்றும் தண்ணியபுனலில் தீயில் சார்ந்தும் ஊண் துயில் துறந்தும் புண்ணிய தவத்தோர் நெஞ்சம் மயலின் மூழ்கி பதைத்தன.'' என்று முன்னர்க் கூறியதையும் நோக்கி நின்றது கற்போல் நின்ற அருந்தவர் என்றது. தலைவி நிறையழிந்தாள் என்று முடித்துக்கொள்க. தன்போல் கற்போல் என இரண்டாம் வேற்றுமையில் திரிந்தது. ''தன் என் என்பவற்று ஈற்றுன வன்மையோடுறழும்'' என்ற நூற்பாவின்படி. (45)

[அல்லமன் உடன்பட்டமை]

என்று மங்கை கூறுதலுந்
தலைவி யிதய நீயறிவை
யன்றி யின்று புதியன்யா
னறிவனேவிங் காப்தமாய்
நின்ற வுன்றன் மொழிகேட்கு
மதுவே யெனக்கு நெறியென்ருன்
குன்றை வென்ற குவிமுலையாள்
களிப்ப வெமையாட் கொள்ளுவோன்.

[இ—ள்.] குன்றை-மலையினை, வென்ற-வெற்றிகொண்ட, குவி-குவிந்த, முலையாள்-நகிலையுடைய மாயையானவள், களிப்ப-மகிழும்படி, எமை-எங்களை, ஆட்கொள்ளுவோன்-ஆண்டுகொண்டருள்பவனுகிய அல்லமன், என்று மங்கை கூறுதலும்-மேற்கண்டவிதமாக மதமானி சொல்லுதலும், தலைவி இதயம்-மாயையினது கருத்தினை, நீ அறிவை-நீ அறிவாய், அன்றி-அல்லாமல், இன்று புதியன் யான்-இன்றைக்குப் புதியவனுக வந்த யான், அறிவனே-அறியமாட்டுவனே, இங்கு-

இவ்விடத்து, ஆப்தமாய்-உண்மை கூறுபவளாக, நின்ற உன்றன்-இருந்த உனது, மொழி-சொல்லினை, கேட்கும் அதுவே-உறுதியாகக் கேட்டு நடத்தலே, எனக்கு-என்றனக்கு, நெறி-வழியாகும், என்ருன்-என்று சொன்ஞன். [எ-று.]

[கு-ரை.] மாயை மனமகிழும்படி சொன்ஞனேயன்றி அதனுல் அல்ல மனுக்கு மகிழ்ச்சி இல்லை என்பார் மாயை களிப்ப அல்லமன் நெறி என்ருன் என்று கூறுகிருர். 46

[மதமானி அல்லமனின்றும் மீளுதல்]

நல்ல சகுன மென்னவெதிர்
கண்டு வந்தாய் நம்பிநீ
வல்ல வசுரர் சுரர்முனிவ
ரெல்லா மயங்கு மாயையையோர்
புல்வி னெளிய ளெனப்புல்ல
நின்ரு யெனப்புன் முறுவலொடு
சொல்லி மகிழ்வு கொண்டிறைவி
பான்மீண் டனளச் சுடர்த்தொடியே.

[இ-ள்.] (அதனைக்கேட்ட) சுடர்த்தொடி-ஒளி நிறைந்த வளையல்களை அணிந்த மதமானியானவள், நம்பி-ஆடவர்களிற் சிறந்தவனே, நீ-நீதான், நல்ல சகுனம்-நல்ல நிமித்தம், என்ன-எதனை, எதிர் கண்டு வந்தாய்-வரும் வழியில் முன்னல் பார்த்து வந்தனை, வல்ல அசுரர்-வல்லவராகிய அசுரர்களும், சுரர்-தேவர் களும், முனிவர்-தவத்தினர்களும், எல்லாம்-(ஆகிய) யாவர் களும், மயங்கும்-மயங்குதற்கு இடமாகிய, மாயையை-மாயை என்னும் எங்கள் தலைவியை, ஓர் புல்லின்-ஒரு தூசினும், எளி யள் என-எளியவள் என்று சொல்லும்படி, புல்ல நின்ருய்-(தானுக வந்து) தழுவும்படி நின்றனை, என-என்று, புன் முறுவ லொடு சொல்லி-சிறு நகையோடு சொல்லி, மகிழ்வுகொண்டு-வந்தசெயல் பலித்தது என்னும் மகிழ்ச்சியோடு, இறைவிபால்-மாயையினிடத்து, மீண்டனள்-திரும்பி வந்தனள். [எ-று.]

[கு-ரை.] எல்லாம் வல்ல அல்லமனை சாதாரண மத்தளிகளுக எண்ணுளாதலின் இவ்வளவு பெரிய நன்மை உன்னைத் தேடிவந்ததற்கு நீ புறபபட்டுவரும் வழியில் என்ன நல்லசகுனம் கண்டனை என்று கேட்ட னள் தோழி. நிறைந்த நீரையுடையகுடம், பாற்குடம், மது, எருக்கூடை, சுமங்கலி முதலியன முன்னுல் வருதல் நல் நிமித்தம் என்பதும் நூல்

இழந்தவள் வருகை, நெருப்பு எடுத்துவருதல், ஒற்றைப் பிராமணர் வருகை முதலியன தீநிமித்தம் என்பதும் சகுன சாத்திர முடையார் கொள்கை. இன்னும் இதன் விரிவை சகுன நூலிற் காண்க. நிமித்தம் பார்த்தல் என்பது சங்க காலத்திலும் உண்டென்பதும், பன்றி முதலிய மிருகங்கள்கூட நிமித்தம் பார்த்தல் உண்டென்பதும் பழய நூலால் அறியக்கிடக்கின்றது. சுடர்த்தொடி அன்மொழித்தொகை. ஏகாரம் ஈற்றசை. (47)

[மதமானி சென்றபின் மாயை நிலைமை]

அங்கு மாயை மதமானி
சென்ற தற்பி னகந்தளர்ந்து
மங்கை வாய்மை கூறியுடம்
படுக்கு மோமன் மகடனக்குப்
பங்க மாமென் றென்னுயிரைச்
சீறி யகலப் பண்ணுமோ
விங்கு நானென் செய்வளென
வறியே னென்ன விருந்தயர்வாள்.

[இ-ள்.] மதமானி சென்றதன் பின்-மதமானி என்னும் தோழி அல்லமனிருக்கும் இடத்திற்குப் போனபிறகு, அங்கு-கன்னிமாடமாகிய அவ்விடத்து, மாயை-மாயையானவள், அகம் தளர்ந்து-மனம் சோர்ந்து, மங்கை-மதமானியாகிய அத்தோழி, வாய்மை கூறி-உண்மைசொல்லி, உடம்படுக்குமோ-சம்மதிக்கச் செய்வாளோ, மன் மகள்தனக்கு-அரசனின் மகளுக்கு, பங்கமாம் என்று-இகழ்ச்சியாகும் என்று, என்னுயிரை-எனது உயிர் போற் சிறந்த அல்லமதேவனை, சீறி-கோபித்து, அகலப் பண்ணுமோ-நீங்கும்படி செய்வாளோ, இங்கு-இவ்விடத்து, நான்-யான், என்செய்வள் என-இவ்விரண்டுள் இது செய்வாளென்று, அறியேன்-தெரியாதவளாக இருக்கின்றேன், என்ன-என்று சொல்லி, இருந்து அயர்வாள்-தங்கி வருந்துவாள். [எ-று.]

[கு-ரை.] "முக்கண் அத்தனுக்கென்று வாளா அரசன் வைத்திருந்த பாவை மத்தளிகன் பின் போனாள்" என்று பிறிதோரிடத்தும் கூறுகின்றமைக்கேற்ப, இவ்விடத்தும் மாயை ஐயங்கொள்ளுகின்றாள். என்னுயிர் என்று அல்லமரைக் கூறுதற்கேற்ப உடம்பு அடுக்குமோ என தன்னுடன் சேர்த்தலைக்கூறும் நயம் மகிழ்தற்குரியது. உடம்படுத்தல் இரட்டுறமொழிதல். என்னுயிர் என்பது ஆறும் வேற்றுமை ஒற்றுமைப்பொருளில் வந்த தொடர். (48)

இதுவுமது

என்னோ வறிந்து போயினள்
சந்து பொருந்தா தெய்துமோ
வன்னோ வரசன் மகளென்ன
வஞ்சி யழக னகலுமோ
வின்னோ ரன்ன நினைவின்றி
யெனையே நினைந்திட் டிருக்குமோ
பொன்னோ டுறழும் வாண்முகங்கண்
டலது துயரம் போகாதே.

[இ-ள்.] என் நோவு அறிந்து போயினள்-எனது காம நோயைத்தெரிந்து சென்றவளாகிய மதமானி, சந்து-தூது, பொருந்தாது-பலிக்காமல், எய்துமோ-(வீணைக) திரும்பி வந்து விடுவாளோ, அன்னோ-ஐயோ, அரசன் மகள் என்ன-அரசனது மகள் என்று, அழகன்-அழகையுடைய அல்லமதேவன், அஞ்சி-பயந்து, அகலுமோ-நீங்கிவிடுவானோ, இன்னோர் அன்ன நினைவு இன்றி-இப்படிப்பட்ட நினைப்பு இல்லாமல், எனையே நினைந்திட்டு இருக்குமோ-என்னையே நினைத்துக்கொண்டு இருப்பானோ, பொன்னோடு உறழும்-பொன்னைப்போன்ற, வாள் முகம்-ஒளிபொருந்திய முகத்தை, கண்டு அலது-பார்த்தாலன்றி, துயரம் போகாது-எனது துன்பம் நீங்காது. [எ-று.]

[கு-ரை.] அன்னோ இரக்கக்குறிப்பு. அள்ளிக்கொள்ளும் பேரழகன் ஆதலின் அழகன் என்றார். அல்லமன் புற அழகையே நினைத்தாளேயன்றி அவனது குணம் முதலிய தன்மையை நினைந்தாளல்லள் என்றறிவுறுத்துவார் அழகன் என்றே கூறுவதாகக் கூறுகிறார். உறழ்தல் ஒத்தல் என்ற பொருளில் வந்தது. (49)

[அதுபோது மதமானி வருதல்]

என்னப் பலவு நினைந்துமட
மாயை யிருப்ப விகுளைமார்
மின்னற் கருங்க ணிடனுடைக்
குறிக ணல்ல விளங்குதலாற்
கன்னிக் குவளை கைகூடு
மென்ன விருக்குங் காலைதனில்
அன்னப் பெடைபோ னடந்துமத
மானி களிப்புற் றடைந்தனளால்.

[இ-ள்.] என்னப்பலவும் நினைந்து-என்று பலவாருக நினைந்து, மடமாயை யிருப்ப-இளமை தங்கிய மாயையானவள் இருக்க, இகுளைமார்-தோழிகள், மின்னல்-ஒளிவிடுகின்ற, கருங் கண்-கரிய கண்களுள், இடன் ஆட-இடதுகண் துடிப்பதி ஞலும், குறிகள்-நிமித்தங்கள், நல்ல விளங்குதலால்-நல்லன பல நிகழ்தலினுலும், கன்னிக்கு-மாயைக்கு, உவகை-மகிழ்ச்சி, கைகூடு மென்ன-சித்தியாகும் என்று, இருக்கும் காலைதனில்-இருக்கும்போது, மதமானி - மதமானியானவள், அன்னப் பெடைபோல் நடந்து-பெண் அன்னத்தைப்போல நடந்து, களிப்பு உற்று-மகிழ்ச்சியடைந்து, அடைந்தனள்-சேர்ந்தாள். [எ-று.]

[கு-ரை.] ஆல் அசை. மகளிர்க்குக் கண் இடம் ஆடுதலும் ஆடவர்க்கு வலம் ஆடுதலும் நல்நிமித்தம் என்றும், மாறி ஆடுதல் தீ நிமித்தம் என்றும் பிறநூல்களுள்ளும் கூறுதல் காண்க. (50)

[தோழியர் மதமானியை வினவலும் அவள் விடை யிறுத்தலும்]

வண்டா மரைபோன் முகமலர்ந்து
வந்தாள் சென்ற மதமானி
கண்டார் மகளி ரவனுள்ளங்
காயோ பழமோ கழறென்ருர்
தண்டார் வளைமென் குழன்மடவீர்
பழமே யென்று சாற்றினுள்
கொண்டா ருவகை யவர்மாயை
யுவகை யாரே கூறுவார்.

[இ-ள்.] சென்ற மதமானி- தூதுபோன மதமானி என் னும் தோழியானவள், வண் தாமரைபோல்-வளம்பொருந்திய தாமரை மலர்போல, முகம் மலர்ந்து-முகமலர்ச்சியுற்று, வந் தாள்-வந்தனள், கண்டார்-அவள் வரவினைக்கண்டவராகிய, மகளிர்-சேடியராகிய மங்கையர், அவன் உள்ளம்-அல்லமனது கருத்து, காயோ பழமோ கழறு என்ருர்-காயா பழமா சொல் லுக என்ருர்கள், தண்தார்-குளிர்ந்த மலா மாலையை, வளை-அணிந்துள்ள, மென்குழல்-மென்மையான கூந்தலையுடைய, மடவீர்-தோழியர்களே, பழமே என்று சாற்றினுள்-பழந்தான் என்று சொன்னுள், அவர்-அத்தோழிகள், (உடனே) உவகை கொண்டார்-மகிழ்ச்சி அடைந்தனர், மாயை உவகை-மாயை கொண்ட மகிழ்ச்சியினை, யாரே கூறுவார்-எவர் சொல்லுவார் கள். (சொல்ல முடியாது என்றபடி) [எ-று.]

[கு-ரை.] கண்டார் முற்றெச்சம். ஒரு செயலாற்றப்போய் திரும்பி வந்தவர்களைக் காயா பழமா என்று கேட்டல் உலக வழக்கு அதனை இங்கு கூறுதலால் உலக வழக்கு நவிற்சியணி. (51)

[பகற்காலத்தை மாயை ஆற்றி இருத்தல்]

மன்ன னறியி னென்னுமோ
அறியோ மிதனை மறைமினெனப்
பன்னி மகளி ருளத்தடக்கிக்
கங்குல் வரவு பார்த்திருந்தார்
அன்ன மனையா ளல்லமன்ற
னுடம்பா டுரைத்த வம்மொழியே
கன்னன் மதவே ளெய்தபசும்
புண்ணின் மருந்தாக் களிப்புற்றாள்.

[இ-ள்.] இதனை-இச்செய்தியை, மன்னன் அறியின்-அரசன் அறிவானாகில், என்னுமோ-யாதாய் முடியுமோ, அறியோம்-நாம் தெரியோம், மறைமின் என (அதனால்)-இதனை மறையுங்கள் என்று, பன்னி-பலகால் சொல்லி, மகளிர்-தோழி மங்கையர், உளத்து அடக்கி-மனதில் அடக்கி, கங்குல் வரவு-இரவினது வருகையை, பார்த்து இருந்தார்-பார்த்திருந்தார்கள், அன்னம் அனையாள்-அன்னம்போன்ற நடையையுடைய மாயையானவள், அல்லமன்தன்-அல்லமதேவனுடைய, உடம்பாடு உரைத்த-சம்மதத்தைச் சொல்லிய, அம்மொழியே-அந்த வார்த்தைகளையே, கன்னல் மதவேள்-கரும்பு வில்லையுடைய மன்மதனால், எய்த-எய்யப்பட்ட (அம்பினால் உண்டாகிய), பசும் புண்ணின்-பச்சைப் புண்ணிற்கு, மருந்து ஆ-மருந்துஆக எண்ணி, களிப்பு உற்றாள்-மகிழ்ச்சி அடைந்திருந்தாள். [எ-று.]

[கு-ரை.] அன்னம் ஆகுபெயர். மதவேள் இருபெயரொட்டு. ஆக என்பது ஆ எனக் குறைந்து நின்றது. பசும் புண் அப்போதே உண்டாகிய புண். தோன்றிய குழந்தையைப் பச்சைக் குழந்தை என்றலும் ஈன்றணிமையுடைய மகளிரைப பச்சைப் பிள்ளைத்தாய்ச்சி என்றலும் போல பசும்புண் என்றார் என்க. (52)

[ஞாயிற்றின் மறைவும் திங்களின் தோற்றமும்]

புனலின் விளையா டிருமைந்தர்
தம்மு ளெழுந்து போயோடிப்
புனலின் விழுவான் போல்விழுந்த
தொளிஞா யிறுபோய்ப் புணரியிடைப்

புனலின் விழுந்து மூழ்குபுவந்
தெழுவான் போலக் குணதுகடற்
புனலின் மிசைவந் தெழுந்ததிருள்
பருகிப் புதுவெண் டிங்களே.

[இ-ள்.] புனலில் விளையாடு இரு மைந்தர்-நீரில் விளையாடு தற்றொழிலையுடைய இரண்டு பிள்ளைகள், தம்முள் எழுந்து-தங்களுக்குள் ஒருவன் வஞ்சினம்கூறி எழுந்து, போய் ஓடி-விரைந்து சென்று, புனலில் விழுவான் போல்-நீரிலே விழுகின்ற வனைப்போல, ஒளிஞாயிறு - ஒளிபொருந்திய சூரியன், புணரியிடை-மேலைக் கடலில், போய் விழுந்தது-சென்று மூழ்கி விட்டது, புனலின் விழுந்து-நீரிலே விழுந்து, மூழ்குபு வந்து-முழுகிக்கொண்டே மறைந்துவந்து, எழுவான்போல்-மற்றொரு பக்கத்திலே எழுகின்ற மற்றவனைப்போல, இருள்பருகி-இருளை யுண்டு, புதுவெண் திங்கள்-புதிய வெண்மையான சந்திரன், குணது கடல் புனலின் மிசை-கீழைக்கடலினது நீரின்மேல், வந்து எழுந்தது-வந்து உதயமாயிற்று. [எ-று.]

[கு-ரை.] மைந்தர்கள் நீரின் முழுகி விளையாடல் ஓர் விளையாட்டு இதற்கு ஓரி பிடித்தல் என்பது மரபு. அவ்விளையாட்டை ஒத்திருந்தது. ஞாயிற்றின் மறைவும் திங்களின் தோற்றமும். அதனால் இச்செய்யுள் **உவமையணி.** நான்கு அடியினும் முதற்சீர் நான்கும் ஒரே சொல்லாக இருத்தலின் **யமகம் என்னும் சொல்லணி.** புதுவெண் திங்கள் முதலொடு குணம் இரண்டு அடுக்கி வந்தது. குணதுகடல் என்றமையின் மற்றொரு கடல் மேற்குக்கடல் என்று உரைக்கப்பட்டது. ஞாயிறு புணரியிடை விழுந்தது. எனவே மேற்குக்கடல் என்பது சொல்லாமலே விளங்கிற்று எனலும் ஆம். **விழுவான், எழுவான் வினையாலணையும் பெயர்கள்.** (53)

[விண் மீன் தோன்றல்]

தொக்க கமலம் வாய்மூடக்
கள்ளுண் டடறுஞ் சுரும்பினங்கண்
மொய்க்கு நறுமென் குவளைவாய்
திறந்த முகிறுஞ் சிளம்பொழிலிற்
புக்க மணிநீர்க் கயத்திரைதேர்
குருகு விண்மீன் பூத்தனவாற்
செக்க ரெனுஞ்செந் தீயினிடைப்
பொரிந்து தெறித்த பொரிபோல.

[இ-ள்.] தொக்க-நெருங்கிய, கமலம்-தாமரை மலர்கள், வாய் மூட-குவிந்த அளவில், கள் உண்டு-மதுவைக் குடித்து, இடறும்-மயங்குகின்ற, சுரும்பு இனங்கள்-வண்டின் கூட்டங்கள், மொய்க்கும்-மொய்க்கின்ற, நறுமென் குவளை - நறிய மென்மையாகிய நீலோற்பல மலர்கள், வாய் திறந்தன-மலர்ந்தன, முகில் துஞ்சு இளம்பொழிலில்-மேகம் தங்கப்பெற்ற உயர்ந்த இளமையான சோலையிடத்தில், மணிநீர் கயத்து-நீலமணிபோலும் நீரையுடைய தடாகத்தில், இரை தேர்-உணவை ஆராய்கின்ற, குருகு-நாரைகள், புக்க-அடைந்தன, செக்கர் எனும்-செவ்வானம் என்று சொல்லுகிற, செந்தீயினிடை-சிவந்த நெருப்பினிடத்தில், பொரிந்து - பொரியப்பட்டு, தெறித்த-தெறிக்கப்பட்ட, பொரி போல-பொரிகளைப்போல, விண்-வானத்தின்கண், மீன் பூத்தன-உடுக்கள் தோன்றின. [எ-று.]

[கு-ரை.] மூட என்னும் செய வென்னெச்சம் காரண காரியம் இரண்டும் இன்றி திறந்த என்னும் வினை கொண்டது. மொய்த்தல்-நெருங்கி இருத்தல். மேக மண்டலத்தை அளவிய சோலை என்பதற்கு முகில் துஞ்சு பொழில் என்றார். உயர்ந்த சோலை எனவும் பழமையான மரங்களையுடையது எனவும் பொருள் தாராதிருத்தற்பொருட்டு இளஞ்சோலை என்றார். இதனால் பொழிலின் வளம் கூறப்பட்டது. கள்ளுண்பவர் மயக்கம் உறுதல் என்பதனைக் கள்ளுண்டிடறும் என்பதனாற் கூறினார். கடைசி அடியில் **உவமையணி** வந்துளது. செவ்வானத்தைச் செந்தீ என உருவகித்தார். செந்தீ இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர். நீறுபூத்த நெருப்பைக் கருதின் இனமுள்ள பண்பெனினும் அமையும். இரண்டாம் அடியில் மொய்க்கும் என்பது ஆசிடை எதுகை. ஆல் அசை மாலைக் காலத்துத் தன்மையைக் கூறுதலால் தன்மையணியும் பின்னடியில் உவமையணியும் செக்கர் எனும் செந்தீ என உருவகமும் என பல வணிகள் வந்தமையின் **சங்கீரணை அணி.** "மொழியப்பட்ட அணிபல தம்முள் தழுவவுரைப்பது சங்கீரணமே" என்றார் தண்டியலங்காரமுடையார். (54)

[செவ்வானம் தோன்றி மறைதல்]

தூய சோதிப் பகலவன்போய்
மேலைப் புணரி தோய்ந்திடலு
மாயை நாமங் கொண்டிருந்த
மணிமென் கலாப மயிலைவா
ளுய கோம்பி கண்டுசினந்
துடலஞ் சிவப்புற் றடங்கல்போன்
மேய மாலைப் பொழுதிலிருஞ்
செக்கர் தோன்றி வீந்ததால்.

[இ-ள்.] தூய-தூய்மையான, சோதி-ஒளியையுடைய, பகலவன்-சூரியன், போய்-சென்று, மேலைப்புணரி - மேற்குக் கடலில், தோய்ந்திடலும்-முழுகிய அளவில், மாயை நாமம் கொண்டு இருந்த-மாயை என்கின்ற பெயரைக்கொண்டிருக்கின்ற, மணி மென்கலாப மயிலை-அழகிய மேன்மையான தோகையையுடைய மயிலை, வானுய கோம்பி-ஆகாயமாகிய பச்சோந்தி, கண்டு-பார்த்து, சினந்து-கோபித்து, உடலம்-சரீரம், சிவப்புற்று-சிவந்து, அடங்கல்போல்-மீளவும் அடங்குதலைப் போல, மேய-பொருந்திய, மாலைப்பொழுதில்-மாலை நேரத்தில், இரும்-பரந்த, செக்கர் - செவ்வானம், தோன்றி-தோன்றி, வீந்தது-அடங்கியது. [எ-று.]

[கு-ரை.] 'மணிமென்கலாபம்' மாயைக்கு ஆகும்போது அரதனம் இழைக்கப்பட்ட மென்மையான மேகலாபரணம் என்றும் மயிலுக்கு ஆகும் போது அழகிய மெல்லிய தோகை என்றும் சிலேடையாகக் கூறப்பட்டுளது. மயிலுக்குப் பகையானதினுல் பச்சோந்தி மயிலைக்காண்டலும் கோபித்தலும் பிறகு அடங்குதலும் இயற்கை; அதனை உவமையாகக் கூறினர். மாயையை மயிலாகவும், வானத்தைப் பச்சோந்தியாகவும் உருவகித்து பின்னர் பச் சோந்திபோல என செக்கர் வானத்தைக்கூறும் உவமையும் அறிந்து இன் புறற்பாலது. சிவப்பு என்ற சொல்லிற்கே வெகுளி என்று பொருள் கறுப் பும் சிவப்பும் வெகுளிப்பொருள் என்றதாற் பெறப்படுதலின் பச்சோந்தி கோபத்தாற் சிவந்தது என்றார். பச்சோந்தி அடிக்கடி நிறம் மாறும் தன்மையுடையது. செக்கர் வானம் தோன்றி மறைவதைப் பச்சோந்தி போல எனத் தற்குறிப்பேற்றுகின்றார். உருவகம் உவமை தற்குறிப்பு முத லிய அணிகள் இதனுள் வந்தமையின் இதுவும் சங்கீரண அணி. (55)

[மாயையின் காமநோயைக் கூறுதல்]

காலை யரும்பிப் பகலெல்லாம்
போதா யிருந்த காமமலர்
மாலை மலர்ந்து பொறுமலொரு
மாயை நாம மணிவல்லி
மூலை யிருந்து புறம்போந்து
விரிவெண் ணிலாவெண் முற்றத்திற்
பீலி மஞ்ஞை யெனவீழ்ந்து
மதநோய் மிகவாய் பிதற்றுமால்.

[இ-ள்.] காலை அரும்பி-காலைப்பொழுதில் அரும்பி, பகல் எல்லாம்-பகற்பொழுதெல்லாம், போதா இருந்த-மலரும் பரு வத்து அரும்பா இருந்த, காமமலர்-காமமாகிய பூ, மாலை மலர்ந்து-மாலைப்பொழுதில் மலர்ந்ததினுல், பொறுமல்-பொறுக்க முடியா

மல், ஒரு-ஒப்பற்ற, மாயை நாமம்-மாயை என்னும் பெயரை யுடைய, மணிவல்லி - அழகிய கொடியானது, மூலையிருந்து-உள்ளிடத்தினின்றும், புறம்போந்து - வெளியே வந்து, விரி வெண் நிலா முற்றத்தில்-பரந்த வெண்மையாகிய நிலாவொளி தவழும் முற்றத்தின்கண், பீலி மஞ்ஞை என-தோகையை உடைய மயிலைப்போல, வீழ்ந்து-விழுந்து, மதநோய் மிக-காமப் பிணி அதிகப்பட, வாய்பிதற்றும்-வாயினுற் பிதற்றலானுள். [எ—று.]

[கு-ரை.] "காலை அரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலை மலரும் இந்நோய்" என்னும் பொய்யா மொழியினை இச் செய்யுளில் காண்க. அரும்பி போதாகி மலரும் என்பதற்கு ஏற்ப மலர் என்றும் அதனை யுடைமைப் பொருளாக உடைமையின் வல்லி என்றும் நோய்க்குக் காரண மான காமம் ஈண்டு மலர் என்றும் கூறப்பட்டன. கூந்தல் மேகலை முதலியன நெகிழ்ந் திருந்தமையை உணர்த்துவார் பீலி மஞ்ஞை என்ருர். ஆல் அசை. வெண்நிலா. இனச் சுட்டில்லாப் பண்பு கொள் பெயர். (56)

[திங்களைப் பழித்தல்]

தாய்வா யடைந்து மிகுந்தலையை
மோதி மோதிச் சலித்தலறக்
காய்வாய் நிலவே யுடன்பிறந்தா
ளிருந்து வாழுங் கடிமனையை
நீவா னெழுந்து வந்தழிப்பா
யென்ருலந்தோ நிலையின்றித்
தேய்வாய் நின்னோ டியைபில்லா
வென்னை யென்ன செய்யாயே

[இ—ள்.] நிலவே-திங்களே, நீதாய் வாய் அடைந்து-நீ தாயினிடத்தில் தோன்றி, மிகும் தலையை மோதி மோதி-அவள் மிகவும் தலையினை மோதிமோதி, சலித்து-வெறுத்து, அலற-அலறும்படி, காய்வாய்-கோபிப்பாய், (மிகுந்த அலையை மோதி மோதி சலித்து அலறக் காய்வாய்-பெருகி அலையை வீசி வீசி அலைந்து ஒலிசெய்யும்படி நிலா வொளியை வீசுவாய் என்பது கருத்து) (அன்றியும்) உடன் பிறந்தாள்-கூடப் பிறந்தவளாகிய திருமகள், இருந்து-குடி இருந்து, வாழும்-வாழ்கின்ற, கடி மனையை-மணம் பொருந்திய தாமரை மலராகிய (காவலை யுடைய) வீட்டினை, வான்-ஆகாயத்தில், எழுந்துவந்து அழிப் பாய் என்ருல்-எழுந்து மேலே இருந்து அழித்துவிடுவாய் என்று சொன்னல், அந்தோ-ஐயோ, நிலையின்றித் தேய்வாய்-எப்போதும் ஒரே தன்மையாக இராது தேய்பவனே, நின்னேடு-

உன்னுடனே, இயைபு இல்லா-யாதொரு தொடர்ச்சியுமில்லாத, என்னை-என்றனை, என்ன செய்யாய்-யாது செய்யமாட்டாய்.
[எ—று.]

[கு-ரை.] பெற்ற தாயையும் உடன் தோன்றி சகோதரியையுமே வருத்துகின்ற செயல் உன்னுடையதானால் யாதொரு தொடர்ச்சியும் இல்லாத என்னை தொந்திரவு செய்வது வியப்பன்று என்பது கருத்து. பௌர்ணமியில் கடல் பொங்குவதும், இராக்காலத்தில் தாமரை குவிவதும் இயல்பு. அதனை ஆசிரியர் தற்குறிப்பேற்றுகிறார். வளர்வதும் தேய்வதுமாகிய தன்மை உடையை என்பதை நிலையின்றித் தேய்வாய் என்றார் நிலா என்ற சொல் குறியதின்கீழ் ஆக்குறுகலும் என்றபடி நில என நின்று விளித்தற்கண் ஏகாரம் உடம்படு வகரமெய்யும்பெற்று நிலவே என்றாகியது- திங்கள் தோன்றுவது கடலினிடமாதலின் அதனைத் தாயென்றும், பாற்கடலில் இலக்குமி தோன்றியபோது திங்கள் முதலியன உடன் தோன்றலின் திங்களுக்குத் திருமகளை உடன் பிறந்தாள் என்றும் இயைபு படுத்தினர். மிகுந்தலையை மோதி மோதிச் சலித்தலறக்காய்வாய். கடிமனை: இவைகளுக்கு இருபொருள் கூறப்பட்டன. (57)

### இதுவுமது

தக்கன் மகத்தி லொருஞான்று தாளிற் படுநீ தலையேறி
மிக்க முனிவர் மந்திரநீ ரிறைப்ப வின்னு மீண்டிலாய்
நக்கன் பவள வாய்ப்பட்டு களத்தே யிறங்கு நஞ்சுநினை
ஒக்கு மென்ப தறியாமை யன்றே வொளிர்வெண்
[மதியமே.

[இ—ள்.] ஒளிர்-ஒளிவிடுகின்ற, வெண் மதியமே-வெள்ளிய திங்களே, தக்கன்-தக்கனது, மகத்தில்-யாகத்தில், ஒரு ஞான்று-ஒரு நாள், நக்கன்-கடவுளுடைய, தாளில்-காலில், படும் நீ-அகப்பட்டு வருந்திய நீ, தலையேறி-அவர் தலையின்மேல் ஏறி இருந்து, மிக்க முனிவர்-சிறந்த தவத்தினர், மந்திர நீர் இறைப்ப-மந்திரம் சொல்லி தண்ணீரை இறைக்கவும், இன்னும்-இதுவரையிலும், மீண்டிலாய்-இறங்கவில்லை, பவளவாய்ப் பட்டு-அவனது பவளம் போன்ற சிவந்த வாயின்கண் பட்டு, களத்தே-கண்டத்தின் கண்ணே, இறங்கும்-இறங்குகின்ற, நஞ்சு-விடம், நினை-உன்னை, ஒக்கும்-ஒத்திருக்கும், என்பது-என்று சொல்லுவது, அறியாமை-அறியாமையேயாகும். [எ—று.]

[கு-ரை.] அன்று ஓ அசைகள். தக்கன் யாகம் செய்ய அதற்கு வந்திருந்தவர்களை வீரபத்திரன் தண்டித்தகாலத்து சந்திரனைக் காலால் தேய்த்தனர் என்னும் புராண கதையை உட்கொண்டது. வீரபத்திரன் செயலை

இறைவன் செயலாகவே சொல்லப்பட்டிருக்கிறது அங்ஙனம் கூறுதல் மரபாதலின். இறைவனை வேண்டி அவர் தலையில் வைக்கப்பட்டான் என்பதும், அந்தணர் காலை பகல் மாலைசெய்யும் நீர் இறைத்தல் சந்திரன் முதலியோரை நோக்கி என்பதும், அங்ஙனம் இறைத்தும் கீழே இறங்கி வரவில்லை என்பதும் புராண வரலாறுகள். இன்னும் விண்ணோர் கடலைக் கடைந்திட்ட காலத்துத் தோன்றிய நஞ்சினை ஏனையோரைப் பாதுகாத்தற் பொருட்டு இறைவன் உண்டு கண்டத்தின்கண்ணே நிறுத்திவைத்திருக்கிறானென்பதும் புராண வரலாறு. இச் செய்யுளும் **தற்குறிப்பேற்றவணி.** பவளவாய் உவமைத்தொகை. (58)

**இதுவுமது**

அங்க மதினஞ் சிருத்தினோ
    னங்க மல்லா வவிர்சடைமேற்
றங்க நினைவைத் திட்டதுநின்
    கொடுமைக் கருதித் தானன்றோ
பொங்கு மமுத கலையென்ன
    நின்னைப் புகறல் வெண்டிக்கா
ளிங்கு மனிதர் காராட்டை
    வெள்ளா டென்ப தொக்குமால்

[இ-ள்.] வெண் திங்கள்-வெண்மையாகிய சந்திரனே, அங்கமதில்-உடலுறுப்புகளின் ஒன்றாகிய கண்டத்திடத்தில், நஞ்சு இருத்தினோன்-விஷத்தை வைத்த பரமசிவன், அங்கம் அல்லா-உப அங்கமாகிய (புற உறுப்பு), அவிர்-ஒளிவிடா நின்ற, சடைமேல் - சடையின்மேல், தங்க - பொருந்த, நினை வைத்திட்டது-உன்னை வைத்தது, நின் கொடுமை-உனது தீமையை, கருதித்தான் அன்றோ-நினைத்து அல்லவா, பொங்கும்-ஒளிவிடும், அமுதகலை என்ன-அமுத கிரணத்தை (தான்) உடையவனென்று, நின்னைப் புகறல்-உன்னைச் சொல்லுதல், இங்கு-இவ்வுலகத்தில், மனிதர்-மக்களானவர்கள், கார்-கருமையாகிய, ஆட்டை-ஆட்டினை, வெள்ளாடு என்பது ஒக்கும்-வெள்ளாடு என்று சொல்வதற்கு ஒப்பாகும். [எ-று.]

[**கு-ரை.**] அங்கம் அகத்துறுப்பு. உபாங்கம்-புறத்துறுப்பு கால் கை முதலியன அகத்துறுப்புகள். மயிர் நகம் முதலியன புறத்துறுப்புகள். அகத்துறுப்புகளுக்கு நோய் உண்டானால் நாம் வருந்துவோம் புறத்துறுப்புகளுக்கு உண்டானால் வருந்துவதில்லை. மேலும் புறத்துறுப்புகளை அடிக்கடி கழித்துவிடுவோம். விஷமாக இருந்தும் அகத்துறுப்புள் ஒன்றாகிய உணவு செல்லும் வழியாகிய கண்டத்துள் வைத்த பரமசிவன் திங்களின் கொடுமை கருதி புறத்துறுப்புகளில் ஒன்றாகிய சடையில் வைத்தது திங்கள் விஷத்தினும்

கொடிது என்பதற்காகவே என்று நற்குறிப்பேற்றுகின்றார் ஆசிரியர். நஞ்சினும் கொடிய திங்களை அமுதகலை என்று சொல்வது காராட்டை வெள்ளாடென்பதனோடு ஒக்கும் என்று உவமை கூறுகிறார் உவமையணி: இயல்பு வழக்கு தகுதி வழக்கு என்னும் இரண்டனுள் தகுதி வழக்கின் பாற்படும். அதனுள்ளும் இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி என்னும் மூன்று வகையில் மங்கல வழக்கு என்பர் நன்னூல் உரைகாரர். புகலுதல் என்பது புகல்தல் என ஆகி பின்னர் புகறல் என வந்தது. அமுதகலை-பண்புத்தொகை. (59)

இதுவுமது

உருப்ப மிகுவன் றழல்சிவப்புற்
றுலகர் காண வொளிதரவு
நெருப்பு வெண்மை யென்பதுநன்
னியாயர் நின்னைக் குறித்தன்றோ
பொருப்பு நறுஞ்சந் தனச்சேறு
புலர்ந்து பொரியப் பூவணையும்
விருப்ப மலருங் கொளுந்தவழல்
வீசி யெழுந்த வெண்டிங்காள்.

[இ-ள்.] பொருப்பு-பொதியமலையிற் பிறந்த, நறும்-நல்ல, சந்தனம்-சந்தனக்கட்டைகளாலாகிய, சேறு-குழம்பு, புலர்ந்து-காய்ந்து, பொரிய-பொரிந்துபோம்படி யாகவும், பூஅணையும்-பூக்களால் ஆனபடுக்கையும், விருப்பமலரும் - விருப்பத்தைச் செய்யும் பூமாலைகளும், கொளுந்த-எரிந்துபோம்படியாகவும், அழல்-நெருப்பினை, வீசி-சொரிந்து, எழுந்த-தோன்றிய, வெண் திங்காள்-வெண்மையாகிய நிலாவே, உருப்பமிகும்-வெப்பம் மிகுந்த, வன்தழல்-வலிய நெருப்பு, சிவப்புற்று-சிவந்து, உலகர்-உலகிலுள்ளார், காண-நேரில் காணும்படி, ஒளிதரவும்-பிரகாசியா நிற்கவும், நல் நியாயர்-நல்ல தருக்கநூல் வல்லவர். நெருப்பு-தழலினை, வெண்மை என்பது-வெள்ளை நிறத்தை யுடையதென்று சொல்வது, நின்னைக் குறித்து அன்றோ-உனது குணத்தை ஆராய்ந்த காரணத்தாலல்லவா? [எ-று.]

[கு-ரை.] பொரிய கொளுந்த என்னும் செயவென்னெச்சங்கள் அடுக்கி எழுந்த என்னும் பெயரெச்சம் கொண்டு முடிந்தது. வெண்திங்கள் இனச்சுட்டில்லாப் பண்புகொள் பெயர். வெண்திங்கள் பண்புத்தொகை. (60)

இதுவுமது

இன்றோ ருலகி லெனக்கொன் று
பிறர்க்கொன் றாகி யிருக்கின்றாய்
நன்றோ வுனக்கு மதியமே
ஞாயி றேபோல் வாழாமன்
முன்றோ கையர்க ளியாவரையு
மொப்பக் காணு முயற்சியா
லன்றோ தேய்ந்து போகின்றா
யந்தோ வதனை யறியாயோ.

[இ—ள்.] மதியமே-திங்களே, இன்று-இப்பொழுது, ஓர் உலகில்-ஒரே உலகத்தினிடத்தே, எனக்கு ஒன்று-எனக்கு ஒரு தன்மையும், பிறர்க்கு ஒன்று-பிறர்க்கு ஒரு தன்மையாகவும், இருக்கின்றாய்-இருக்கின்றனை, உனக்கு நன்றோ-(நீ இப்படி இருத்தல்) உனக்கு நல்லதாகுமா, முன்-முற்காலத்தில், தோகையர்கள் யாவரையும்-உனது மனைவிமார் எல்லாரையும், ஒப்பக் காணுமுயற்சியால்-சமமாக நோக்காத தன்மையால், அன்றோ-அல்லவா, ஞாயிறேபோல்-சூரியனைப்போல, வாழாமல்-வாழ்ந்து இருக்காமல், தேய்ந்து போகின்றாய்-நாளுக்கு நாள் குறைந்து போகின்றனை, அந்தோ-அய்யோ, அதனை-அந்த தன்மையை, அறியாயோ-(நீ) தெரிந்துகொள்ளவில்லையோ. [எ—று.]

[கு-ரை.] சந்திரனுக்கு அசுபதி முதலாக ரேவதி ஈறாக உள்ள இருபத்தேழு விண்மீன்களும் மனைவியர்கள் என்பதும், அவர்களுக்குள் ரோகணி இடத்துமட்டும் பெரிதும் விருப்புடையனாக சந்திரன் இருந்தமைபற்றி ஏனைய மகளிர் தங்கள் தந்தையாகிய தக்கனிடத்தில் முறையிட்டுக்கொள்ளவும், தக்கன் மருமகனுக்குப் பலகால் எல்லா மங்கையரிடத்தும் சமமான அன்புடையனாக இருக்கவேண்டும் என்று வற்புறுத்தியும் கேளாததால் நினது கலைகள் தேய்ந்து அழிந்துபோகக்கடவாய் என்று சாபமிட்டனன் என்பதும் புராண வரலாறு. அதனைக்கருதி பின்னிரண்டடிகள் கூறப்பட்டுளது. தலைவனைக்கூடிய மகளிர்க்கு நிலவு குளிர்ந்திருக்கும் என்பதும் பிரிந்த மகளிர்க்கு வெப்பமாக இருக்கும் என்பதும் கருதி மங்கையர்களை ஒப்பக் காணுமையின் வந்த துன்பத்தை மறந்து இப்போதும் அங்ஙனமே ஒழுகுவது மிகவும் இரங்கத்தக்கது என்றும் அதனை இப்போது நினைந்து இனிமேலாவது ஒரே தன்மையாக இரு என்றும் கூறுகின்றதாக இச்செய்யுள் அமைக்கப்பட்டுளது. அந்தோ இரக்கக்குறிப்பு. சூரியன் என்றும் ஒரே தன்மையாக இருக்கின்றான் என்பதுபற்றி ஞாயிறேபோல் வாழாமல் என்றார். (61)

[தென்றலைப் பழித்தல்]

கொல்லா நோன்பு முனிமலையிற்
றோன்றி யென்னைக் கொல்கின்றாய்
பொல்லா மந்த மாருதமே
யென்னோ கருணை பூண்டிலாய்
சொல்லாய் திருப்பாற் கடலினிடைத்
தோன்றுங் கடுவின் றன்குணமே
யல்லா லமுத குணமுண்டோ
நின்னை வெறுப்ப தறிவன்றே.

[இ-ள்.] பொல்லா-கொடிய, மந்தமாருதமே-இளந்தென்றலே, கொல்லா நோன்பு-கொல்லாத விரதத்தையுடைய, முனி மலையில்-அகத்தியர் வாழ்கின்ற பொதிய மலையில், தோன்றி-பிறந்தும், என்னைக் கொல்கின்றாய்-என்னை வருத்துகின்றாய், என்னோ-யாது காரணமோ, கருணை பூண்டிலாய்-அருளை யுடையையாக யில்லை, சொல்லாய்-சொல்லுவாயாக, திருப்பாற்கடலினிடை-திருப்பாற்கடலிடத்தே, தோன்றும் கடுவில்-பிறந்த விஷத்தினிடத்தில், தன்குணமே யல்லால்-அதனது விஷத் தன்மையுடைய குணமே யல்லாமல், அமுத குணம் உண்டோ-அமுதத்தின் குணம் உண்டாகுமோ, (ஆதலால்) நின்னை வெறுப்பது-நின்னை வெறுத்துச் சொல்வது, அறிவன்று-அறிவல்ல. [எ-று.]

[கு-ரை.] சிறந்த தவத்தினனாதல்பற்றி கொல்லா நோன்பு முனி என்றார். கொல்லா. பொல்லா. ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள். "அமுத கலை என்ன நின்னைப் புகறல்" என்று மேலே கூறியதற்கேற்ப அமுதகுணமுண்டோ என்றார். உடன் றோன்றிய கடுவின் குணமே இருக்கும் என அறிந்தும் நின்னை வெறுத்தல் தக்கதன்று என்கின்றாள். (62)

[குயிலைப் பழித்தல்]

உயிர்த்த பொழுதே நின்குரல்கே
ளாமுன் னோடிற் றீன்றதாய்
நயத்தின் வளர்த்த தாய்குரல்கேட்
டலுமே நடுங்கத் துரந்ததாற்
பயத்த மலர்ப்பூங் காவகத்தி
லிருந்து பல்காற் கூவினுற்
செயிர்த்து நின்னைக் குயிலேநான்
வெறுத்தல் செப்பல் வேண்டுமோ.

[இ—ள்.] குயிலே - குயிலே, உயிர்த்தபொழுதே-பெற்ற பொழுதே, ஈன்றதாய்-பெற்றதாய், நின்குரல் கேளாமுன்-உன் ஓசை கேளாமுன்னமே, ஓடிற்று-ஓடிவிட்டது, நயத்தின்-இன் பத்தின், வளர்த்ததாய்-வளர்த்தசெவிலிததாய், குரல் கேட்ட லும்-உன்னோசையைக் கேட்ட அளவிலேயே, நடுங்க-அஞ்ச, துரந்தது-உன்னைத் துரத்திவிட்டது, பயத்த-பயனைச் செய்யா நின்ற, மலர்-பூக்களையுடைய, பூங்காவகத்தில்-பூஞ்சோலையினி டத்தில், இருந்து-தங்கி இருந்து, பலகால் கூவினால்-பலதடவை கூவினால், செயிர்த்து-கோபித்து, நின்னை-உன்னை, நான் வெறுத் தல்-நான் கோபித்துப் பேசுதல், செப்பவேண்டுமோ-சொல்ல வேண்டுமோ. [எ—று.]

[கு-ரை.] குயில் காக்கையின் கூட்டில் முட்டையிட்டுச் செல்வது வழக்கமென்றும் காக்கை தன் முட்டை வேற்று முட்டை என்றறியாது அடைகாத்துக் குஞ்சு பொரிக்கும் என்றும் குஞ்சுகள் கூவ ஆரம்பித்தவுடன் காக்கை தன் குஞ்சு அல்ல வென்றறிந்து அக்குஞ்சினை விரட்டிவிடும் என் றும் சொல்வர் பறவை நூல் வல்லார். அதனைக்கொண்டு இவ்வாசிரியர் குயிலின்மீது கொடுமைஏற்றித் தற்குறிப்பேற்றுகின்றார்.- பெற்றவளும் செவிலியுமே நின்னை வெறுத்தாளென்றால் வேறு பிறளாகிய யான் வெறுப் பது அதிசயம் இல்லை என்பதும் குரல் கேளாமுன்னும் கேட்ட உடனும் அவர்கள் வெறுத்தார்கள் என்றால் பலகால் உன் குரலைக் கேட்டால் வெறுக்காதிருக்க முடியுமோ என்பதும் வெளிப்பட கவி கூறும் நயம் பாராட்டத்தக்கது. நடுங்க என்னும் செயவென்னெச்சம் துரந்தது என்னும் பிறகருத்தாவினை கொண்டது. ஆல் அசை. ஓகாரம் எதிர்மறை. மலர்ந்த பூக்களையுடைய சோலையின் நடுவிலிருந்து என்பார் மலர்ப்பூங்காவகம் என்றார். (63)

[மன்மதனைப் பழித்தல்]

கன்னற் சிலையா யென்மனத்தைக்
கலக்குங் காளை கவின்கண்டு
முன்னிற் பதற்கு நாணியோ
பிங்கே நின்று முனிகின்றாய்
தன்னிற் பெரியர் இல்லையெனு
மவனைச் சமரிற் றாக்காமல்
நன்னர்த் தளிரின் மெலியாரை
யடர்த்தா யாண்மை நன்றரோ.

[இ—ள்.] கன்னல் சிலையாய்-கரும்பு வில்லையுடைய மன் மதனே, என் மனத்தை-எனது நெஞ்சினை, கலக்கும்-கலக்கு கின்ற, காளை-காளைபோன்ற ஆடவனாகிய அல்லமதேவனது,

கவின்கண்டு-அழகைப்பார்த்து, முன்னிற்பதற்கு - அவனுக்கு எதிரில் நிற்பதற்கு, நாணியோ-வெட்கமுற்றோ, இங்கேநின்று-(பெண்ணாகிய) எனக்கு முன் இங்கு நின்று, முனிகின்றாய்-கோபிக்கின்றாய், தன்னில் பெரியர்-தன்னைக்காட்டிலும் பெரியவர், இலை என்னும் அவனை-இல்லை என்று எண்ணும் அவ் வல்லமனை, சமரில்-போரில், தாக்காமல்-தோல்வியடையச் செய்யாமல், நன்னர்-நல்ல, தளிரின்-தளிரைவிட, மெலியாரை-மெல்லியராகிய மாதரை, அடர்த்தாய்-பொருதாய், ஆண்மை-உனது ஆண்பிள்ளைத் தன்மை, நன்று-நன்றாக இருந்தது. [எ-று.]

[கு-ரை.] சிறந்த வீரனானவன் தன்னோடு ஒத்தவனான, அல்லது தன்னிற் சிறந்த வீரர் இல்லை என்னும் தருக்குற்ற வீரனான ஒருவனையே வெல்வதுதான் ஆண்மை. அவ்வாறன்றி பெண்பாலிடத்து போருக்கு வருதல் ஆண் தன்மை இல்லை என்றாளாயிற்று. "வீறின்மையின் விலங்காமென மதவேழமும் எறியான், ஏறுண்டவர் நிகராயினும் பிறர் மிச்சிலென்றெறியான, மாறன்மையின் மறம் வாடும் என்றிளையாரையும் எறியான், ஆறன்மையின் முதியாரையும் எறியான் அயில் உழவன்" என்பது, "ஆடவர் நகையுற ஆண்மை மாசுற, தாடகை எனும் பெயர்த் தையலாள் பட, கோடியவரிசிலை இராமன்" என்பதும் ஈண்டு நோக்குக. அரோ அசை முனிகின்றாய் அடர்த்தாய் முன்னிலை வினைகள். (64)

[தோழி மாயையினிடத்து அல்லமனை அனுப்புதல்]

என்று புலம்பி மயன்முதிர்ந்து
மாயை யிரங்கி யிருந்தயர
மன்றன் மலர்பெய் மெல்லணைப்பூம்
பள்ளி யறையின் மதமானி
சென்று நம்பி யல்லமனை
முன்றந் திருத்தித் தேரையூண்
வென்றி மடங்கற் கிடுதல்போ
லவனை விடுத்தா ளவ்வறையுள்.

[இ-ள்.] என்று புலம்பி-இவ்வாறாகச் சொல்லி வருந்தி, மாயை-மாயையானவள், மயல் முதிர்ந்து-மயக்கம் அதிகரித்து, இரங்கி-அழுது, இருந்து - தங்கியிருந்து, அயர - மனஞ்சோர, மன்றல்-வாசனைபொருந்திய, மலர்பெய்-பூக்கள் பெய்யப்பட்ட, மெல்-மெதுவாகிய, அணை-படுக்கையுடைய, பூம்-பொலிவு பொருந்திய, பள்ளியறையில்-படுக்கை அறையில், மதமானி-மதமானி என்னும் தோழியானவள், சென்று-போய், நம்பி அல்லமனை-ஆடவரில் சிறந்த அல்லம தேவனை, முன் தந்து

இருத்தி-முன்னே அழைத்துக்கொண்டுவந்து இருக்கச்செய்து, தேரையூண்-தேரையாகிய உணவை, வென்றி-வெற்றியை யுடைய, மடங்கற்கு-சிங்கத்திற்கு, இடுதல்போல்-உண்ண வைத்தல்போல், அவளை-அம்மாயையை, அவ்வறையுள்-(அல் லமனிருந்த) அப்பள்ளியறையுள், விடுத்தாள் - அனுப்பினுள். [எ-று.]

[கு-ரை.] தவளை உணவை சிங்கத்திற்கு இடுதல்போல, மாயையை அல்லமனிருக்கும் அறைக்குள் விடுத்தனள் என உவமை காண்க. **உவமை யணி.** சிங்கம் தவளையைத் தின்னுதுபோல அல்லமனும் மாயையை அனுபவிக்கமாட்டான் என்பதும் பெறப்படும். முன் தந்து என்பது "னல முன் றனவும் ணளமுன் டணவும் ஆகும் தநக்கள் ஆயுங்காலே" என்ற விதிப் படி முன்றந்து என்ருயிற்று. மதமானி தந்து இருத்திவிடுத்தாள் என வினை முடிவு காண்க. அயர என்னும் செயவென்னெச்சம் விடுத்தாளென்னும் காரண வினைகொண்டு முடிந்தது. (65)

[மாயை அல்லமனைப் புல்லுதல்]

வேறு

வேனினண் பகலின் வெய்ய பாலையுணீர்
    வேட்டவ னங்நிலத் துறுநீர்
தானெதிர் கண்டு பருகவோ டுதல்போற்
    றண்மல ரணைமிசை யமர்ந்த
ஞானநல் விளக்கை விழியுறக் கண்டு
    நகையொடு திருமுக மலர்ந்து
பானலங் கண்ணி புணர்முலை விம்மப்
    பரிந்துமேல் விழுந்துபுல் லினளால்.

[இ—ள்.] வேனில்-கோடைக்காலத்தில், நண்பகலில்-உச் சிப் பொழுதில், வெய்ய-வெப்பத்தையுடைய, பாலையுள்-பாலை நிலத்தில், நீர்வேட்டவன்-தாகங்கொண்டவன், அந்நிலத்து உறு நீர்-அப்பாலை நிலத்தில் உள்ள நீராகிய கானலை, தான் எதிர் கண்டு-தானே நேரில் பார்த்து, பருக-குடிப்பான்வேண்டி, ஓடு தல்போல்-ஓடுகின்ற தன்மையைப்போல, தண்-குளிர்ச்சி பொருந்திய, மலர் அணைமிசை-பூப்படுக்கையின்மீது, அமர்ந்த-வீற்றிருந்த, ஞான நல் விளக்கை-நல்ல அறிவின் வடிவமான விளக்கமாகிய அல்லமனை, விழியுறக்கண்டு-கண்கள் நிரம்பக் கண்டு, நகையொடு-புன் சிரிப்பொடு, திருமுக மலர்ந்து-அழகிய முகம் மலர்ச்சியுடையவளாய், பானலங்கண்ணி - நீலோற் பலத்தை ஒத்த அழகிய கண்களையுடையவளாகிய மாயை,

புணர்முலை-நெருங்கிய நகில்கள், விம்ம-பூரிக்க, பரிந்து-விரும்பி. மேல் விழுந்து-அல்லமன் மேலே விழுந்து, புல்லினள்-அணைத்துக்கொண்டனள். [எ—று.]

[கு-ரை.] கானலுக்கு அல்லமனையும் நீர்வேட்டவனுக்கு மாயையும். உவமையாகக் கூறப்பட்டமையின் உவமையணி. பாலை நிலத்துள் நீர் அரிதென்பதும் கானல் நீர்போலத் தெரியும் என்பதும் வழக்கு. "கானலை நீர் என்றெண்ணி கடுவெளி திரியும் மான்போல்" என்றார் பிறரும். மணலும் மணல் சார்ந்த இடமும் பாலை என்ப. பாலை நிலத்துக்குரிய வேனிலாகிய பெரும்பொழுதும் நண்பகலாகிய சிறு பொழுதும் வந்துள்ளன. அல்லமனைக் கானல் நீர் என்றதற்கேற்ப 'ஞான நல் விளக்கு' என உருவ அருவப்பொருளாகக் கூறினர். ஞானம் அருவம். விளக்கம் உருவம். விளக்கு கண்ணுக்குத் தோன்றுமாயினும் கையால் பற்றமுடியாதென்பது கருதி ஞான விளக்கினை உருவா ரூபமாகக் கூறப்பட்டது. ஆல் அசை. ஞான மயமான இறைவனை ஞானத்திற்கேதுவாகிய ஒருமைப்பட்ட மனத்தால் காண முடியுமேயன்றி விழியால் காணமுடியாது. ஆதலின் மாயை அல்லமனது உண்மையை அறிய முடியாதவளென்பார் விழியுறக்கண்டு என்றார். (66)

[அல்லமனைப் புல்லமுடியாமல் மாயை வருந்துதல்]

நாடிய வாடி நிழலென வணைமே
    னண்ணுறத் தோன்றிய விறையை
யோடினள் விழுந்து தழுவுறத் தழுவ
    வுருமையி னணைமிசை விழுந்தே
யாடியி னிழலைப் பற்றநீட் டியகை
    யாடியிற் றாக்கநின் றழுது
வாடுறு மழலைப் பேதையே போல
    வருந்தினண் மதர்விழி மாயை.

[இ—ள்.] மதர்-களித்த, விழி-கண்களையுடைய, மாயை-மாயையானவள், நாடிய-பார்த்த, ஆடி நிழலென-கண்ணாடியிற் காணப்படுகிற வடிவத்தைப்போல், அணைமேல்-படுக்கையின் மேலே, நண்ணுற-பொருந்த, தோன்றிய-காணப்பட்ட, இறையை-அல்லமனை, ஓடினள்-ஓடினவளாகி, விழுந்து-மேல் விழுந்து, தழுவுறத்தழுவ-அணைத்துப் பொருந்தும்படி புல்ல, உருமையால்-கைகளுக்கு அகப்படாமையினால், அணைமிசை-படுக்கையின்மேல், விழுந்தே-வீழ்ந்து, ஆடியினிழலை-கண்ணாடியிற் காணும் வேறு வடிவத்தை (பிரதி பிம்பத்தை) பற்ற-பிடிக்க, நீட்டிய கை, நீட்டப்பெற்ற கைகள், ஆடியில் தாக்க-

கண்ணுடியில் மோத, நின்று அழுது-அங்கே நின்றுகொண்டு அழுது, வாடுறும்-வாட்டமுறுகின்ற, மழலை-குதலைச் சொற்களையுடைய, பேதையேபோல - இளங்குழந்தையைப்போல, வருந்தினள்-வருத்தமுற்ருள். [எ-று.]

[கு-ரை.] கண்ணுடியிற்கண்ட நிழல் வடிவம் அல்லமனுக்கும் பேதைக் குழவி மாயைக்கும் உவமையாக உரைக்கப்பட்டமையினுல் வினைபற்றிவந்த **உவமையணி**. கண்ணுக்குத் தெரிகின்ருரேயன்றி கைகளுக்கு அகப்படவில்லை அல்லமனுதலின் நிழல் உவமையாகக் கூறப்பட்டது. நாடிய செய்த என்னும் வாய்ப்பாட்டுப் பெயரொச்சம். (67)

[அல்லமனை மாயை உருவெளி என ஐயுறல்]

சொல்லரு மழகன் றிருவுரு விழியிற்
தோன் றலான் மீளவு மெழுந்து
புல்லினண் மலர்மென் கைகளால் வெளியைப்
புல்லல்போற் சுவைத்தனள் வெறுவாய்
வல்லியிவ் வாறு வெளிமயக் குற்று
வள்ளறன் கைப்படா மையினு
லல்லம னலனீ துருவெளி யென்ன
வயிர்த்தன ளுண்மையை யன்றே.

[இ-ள்.] சொல் அரும் அழகன்-சொல்லுதற்கு அருமையாகிய அழகையுடைய அல்லமனது, திருவுரு-வடிவம், விழியில் தோன்றலால்-கண்களுக்குப் புலப்படுதலால், மீளவும்-மறுபடியும், எழுந்து-(இருக்கையினின்றும்) எழுந்து, மலர்மென் கைகளால்-மலர்போன்ற மென்மையான கைகளால், வெளியைப் புல்லல்போல்-வெளியான இடத்தைத் தழுவுதல்போல, புல்லினள்-தழுவினுள், வெறுவாய்-வெறுமையான வாயினை சுவைத்தனள்-சுவைத்தாள், வல்லி-கொடிபோன்ற மாயை, இவ்வாறு-இப்படியாக, வெளி மயக்குற்று - வெளியைக்கண்டு மயங்கி, வள்ளல்-அல்லமன், தன் கைப்படாமையினுல்-தனது கைகளில் அகப்படாத காரணத்தினுல், அல்லமன் அலன்-அல்லமதேவன் அல்லன், ஈது-இங்கே காணப்படுகிற இவ்வடிவம், உருவெளி என்ன-உருவெளித்தோற்றம் என்று, உண்மையை-அல்லமனது உண்மையான வடிவத்தை, அயிர்த்தனள்-ஐயமுற்ருள். [எ-று.]

[கு-ரை.] அல்லமனைத் தழுவி அவனை வாயால் பருக எண்ணின மாயை மீளவும் வெளியைத் தழுவுதல்போலத் தழுவி வெறுவாய் சுவைத்தலால் வடிவத்தை உருவெளி என மயங்கினுள் என்க. வல்லி உவம ஆகுபெயர். குற்றியை மகனென்றும் இப்பியை வெள்ளியென்றும் **உணர்தல்**

போல உண்மையைப் பொய்யென்று எண்ணினுள்; "மாலெலாம் பிறப்பதற் கிடமாகிய மாயை" என இவ்வாசிரியர் வேறோரிடத்துக் கூறியதற்கேற்ப. (68)

[மாயை காம மயக்கத்தினுல் வருந்தல்]

அருந்தவ நெடுநாண் முயன் றுதான் பெற்ற
வமுதைவாய் வைத்திடு மளவிற்
கரந்தவ றுதல்போ லல்லம தேவன்
கட்புலத் துற்றுமென் ரோளிற்
பொருந்துற வெளிபோல் வராமையாற் றீயிற்
புழுவெனப் பதைபதைத் தரிவை
வருந்தினள் காம மல்லம னன்றி
வடிவுளார் யார்கடந் திடுவார்.

[இ—ள்.] அரும்தவம்-செய்வதற்கு அருமையான தவத்தை, நெடுநாள்-பலநாட்கள், முயன்று-முயற்சியோடு செய்து, தான் பெற்ற-தன்னுல் பெறப்பட்ட, அமுதை-அமுதினை, வாய்வைத்திடும் அளவில்-வாயின்கண் வைக்கின்ற சமயத்தில், கரம்-கைகளினின்றும், தவறுதல்போல்-தவறி விடுகின்றதைப்போல, அல்லமதேவன்-அல்லமனுகிய இறைவன், கட்புலத்து உற்றும்-கண்ணிடத்திற்ரேன்றியும், மென் தோளில்-மெல்லிய தோளிடத்தில், பொருந்துற-அணைக்க, வெளிபோல்-வெற்றிடத்தைப்போல, வாராமையால் - அகப் படாமையால், தீயில்-நெருப்பினிடத்தில், புழுவென-புழுவைப் போல, பதை பதைத்து-பதை பதைப்புற்றவளாகி, அரிவை-மாயையானவள், வருந்தினள்-வருத்தம் உற்றனள், காமம்-காம மயக்கத்தை, அல்லமன் அன்றி-அல்லமனே அல்லாமல், வடிவுளார்-உருவம் உடையார்கள், யார் கடந்திடுவர்-எவர் நீங்கவல்லவர்கள். [எ—று.]

[கு-ரை.] அரிவை - பருவங்குறியாது வந்தது. கரந்தவறுதல்போல் என்பதும் தீயிற்புழுவென என்பதும் உவமையணிகள்; இவைகளை அங்கமாகக் கொண்டுவந்தது **வேற்றுப்பொருள் வைப்பணி.** தீயின் ஏழாம் வேற்றுமை. (69)

[மாயையின் துன்ப நிலை]

கன்னிகை யென்று மிறைமக ளென்றுங்
கருதிடா தவாவிளைத் திட்டு
மென்னிள முலைகள் மார்புறத் தழுவி
யிதழ்சுவைத் தணைமிசைப் புணர்வுற்

றின்னலி லின்பக் கடலிடை மூழ்க
விவன்றனுற் பெற்றிலே னென்று
தன்னக நைந்து வெய்துயிர்ப் பெறிந்தா
டவத்தரை யலைத்தவம் மடந்தை

[இ-ள்.] தவத்தரை-துறவிகளை, அலைத்த-வருத்தின, அம் மடந்தை - அம்மாயையானவள், கன்னிகை என்றும் - மணமாகாதவளென்றும், இறைமகள் என்றும்-அரசன் மகள் என்றும், கருதிடாது-ஆராய்ந்து எண்ணாது, அவா விளைத்திட்டும்-ஆசையை உண்டாக்கியும், என்-என்னுடைய, இணை முலை-இரண்டாகிய நகில்கள், மார்பு உறத்தழுவி-மார்பினிடத்தில் பொருந்தும்படி அணைத்து, இதழ்சுவைத்து-அதரபானம்செய்து, அணைமிசை-படுக்கையின்மேல், புணர்வுற்று-புணர்ந்து, இன்னல்இல்-துன்பம் இல்லாத, இன்பக்கடலிடை-இன்பக்கடலினிடத்து, மூழ்க-மூழ்கும் செயலை, இவன்தனுல்-இவ்வல்லமனுல், பெற்றிலேன்-அடைந்திலேன், என்று-என்று, தன் அகம் நைந்து-தனது மனம் நொந்து, வெய்து உயிர்ப்பு எறிந்தாள்-வெம்மையாகிய பெருமூச்சு விட்டாள். [எ-று.]

[கு-ரை.] முன் தவத்தரை அலைத்ததின் பயனுக இப்போது மாயை வருந்துகிருள். முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும என்றும். பிறர்க்கின்னு முற்பகற்செய்யின் றமக்கின்னு பிற்பகற்றுமேவரும் என்றும் பிறரும் கூறுதல் காண்க. "கட்டழல் காமத்தீயிற் கன்னியைக் கலக்கினுனும்...... நரகம் தன்னுள் குளிப்பவர்" என்றதால் கன்னிகைக்கு மயல்லூட்டுவது பாபம் என்பதையும் உணரவில்லை. அரசமகள் என்ற உயர்நிலைக்குப பழுதாமே என்ற மனத்தையும் ஆலோசிக்காமல் ஆசையை உண்டாக்கி தன் காம விருப்பத்தைக் தீர்த்தானில்லையே என்று வருந்துகிருள். நான் என்னும் பெயர் வேற்றுமை எற்பான்வேண்டி என் எனத் திரிந்துநின்றது. (70)

[அல்லமன் அரிய தன்மை]

பொழிந்திழி மழையால் வளிநனைந் திடுமேற்
புகைந்தெழு மெரியில்வான் வேமேன்
முழங்குவெண் டிரைப்பே ராழியக் கலய
முனிவனை யழுத்துமே னஞ்ச
மெழுந்தரன் றன்னை வருத்துமேன் மயக்க
மெய்துவ னல்லம தேவன்
ஞெழிந்தவர் தம்மை யொழிவர மயக்கு
மொருத்தியு மவன்றனை மயக்கும்.

[இ-ள்.] பொழிந்து-மேகத்தால் பெய்யப்பட்டு, இழி-கீழே இறங்காநின்ற, மழையால்-நீர்த்தாரைகளால், வளி-காற்று, நனைந்திடுமேல்-நனையுமாகில், புகைந்துஎழும்-புகைந்துகொண்டு மேல் நோக்கி எழும்புகின்ற, எரியில்-நெருப்பினுல், வான்வேமேல்-ஆகாயம் வேகுமாகில், முழங்கு-ஒலிக்காநின்ற, வெண்திரை-வெண்மையான அலைகளையுடைய, பேர் ஆழி-பெரிய கடல், அக் கலய முனிவனை-அந்த குடத்துள் தோன்றிய அகத்தியனை, அழுத்துமேல்-மூழ்கப்பண்ணுமாகில், நஞ்சம்-விஷம், எழுந்து-மேல் தோன்றி, அரன் தன்னை-சிவபெருமானை, வருத்துமேல்-துன்பப்படுத்துமானுல், அல்லமதேவன்-அல்லமனுகிய இறைவன், மயக்கம் எய்துவன்-மயக்கம் அடைவான், ஒழிந்தவர் தம்மை-அல்லமதேவனல்லாதவரை, ஒழிவு அற-எப்பொழுதும், மயக்கும்-மயக்காநின்ற, ஒருத்தியும்-மாயையும், அவன் தனை-அல்லமதேவனை, மயக்கும்-மயக்குவாள். [எ-று.]

[கு-ரை.] மழையால் காற்று நனைவதும் நெருப்பால் ஆகாயம் வேவதும்! அகத்தியனைக் கடல் மூழ்கடிப்பதும், விஷம் சிவபெருமானை வருத்துவதும் ஆகிய செயல்கள் நடவாதன அவையேபோன்று மாயையால் அல்லமனும் மயங்கமாட்டான் என்று கூறினுர். **பலபடப் புனைவுஅணி.** ''கலையை மதிக்கும் புலவர்தமை சித்தர்குழாத்தைக் கடவுளரை.........நெடியோனை விழுங்கி உமிழாத் திறல் மாயை'' என்றதற்கேற்ப, அல்லமன் ஒழிந்தவர் தம்மை ஒழிவு அற மயக்கும் மாயை என்றனர் இங்கும். நீர் கீழ் நோக்கும் தன்மையது நெருப்பு மேல்நோக்கும் தன்மையது என்பதற்கேற்ப, இழிமழை என்றும் எழும் எரி என்றும் கூறப்பட்டது. முழங்கு பேராழி என்பது இனமில்லாத அடை. ''பொருள் முதல் ஆறும் அடைசேர் மொழி இனம் உள்ளவும் இல்லவும் ஆம் இரு வழக்கினும்'' என்றபடி வந்தது. வெண்திரைப்பேராழி. அடைசினை முதல் முறையே வந்தன. அகத்தியன் குடத்தில் இருந்து தோற்றுவிக்கப்பட்டமையால் குடமுனி என்றும் கும்பமுனி என்றும் கலசமுனி என்றும் கூறுவர். ''பரவையுண்ட முனியும் இப் பரத்துவாசன் மைந்தனும் ஒருவையின்கண் முன் பிறந்தது'' என்று பிறர் கூறுமாற்றுனும் அறிக. ஒருவை—குடம். (71)

[மாயை கனவும் ஞாயிறு தோற்றமும்]

விண்ணினைக் குத்திக் கையினைப் பவர்போல்
வேனெடுங் கண்ணியங் கிருந்த
அண்ணலைத் தழுவித் தழுவிமெய் வருந்தி
யவசமுற் றணைமிசை யுறங்கி

யெண்ணுறு நினைவா லவன்புணர்ந் ததுபோ
லின்கன வொன்றுகண் டெழுந்தாள்
கண்ணக னிலத்தி னிருள்குடிப் பவனுங்
கருங்கடன் முகட்டினி லெழுந்தான்.

[இ-ள்.] விண்ணினை-ஆகாயத்தை, குத்தி கைஇளைப் பவர்போல்-குத்திக்கை வருந்துபவர்களைப்போல, வேல் நெடுங் கண்ணி-வேலைப்போன்ற நெடிய கண்களையுடைய மாயை, அங்கிருந்த-அவ்விடத்தே இருந்த, அண்ணலை-அல்லமனை, தழுவித்தழுவி-அணைத்தணைத்து, மெய்-உடம்பு, வருந்தி-துன் புற்று, அவசம்உற்று-பரவசம் அடைந்து, அணைமிசை-படுக் கையின்மீது, உறங்கி-தூங்கி, எண்ணுறு நினைவால்-முன்னர் எண்ணிய எண்ணத்தின் நினைப்பினால், அவன்-அல்லமன், புணர்ந்ததுபோல்-கூடியதுபோல, இன்-இனிய, கனவு ஒன்று-ஒருகனவினை, கண்டு எழுந்தாள்-கண்டு விழித்தெழுந்தாள், கண்ணக னிலத்தில்-இடமகன்ற வுலகத்தில், இருள் குடிப்ப வனும்-இருளை விழுங்குகின்ற சூரியனும், கருங்கடல் முகட்டி னில்-கரிய கடலின்மேல், எழுந்தான்-உதித்தான். [எ-று.]

[கு-ரை.] சாக்கிரம், சொப்பனம். சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் அவத்தை ஐந்தனுள் இரண்டாவது கனவு. கனவு எனினும் சொர்ப்பனம் எனினும் ஒன்றே. கனவு என்பது சாக்கிரமாகிய நனவுக்குப் பின்னும் சுழுத்தியாகிய தூக்கத்திற்கு முன்னும் உண்டாகும் நிலையில் தோன்றும் அறிவு மயங்கிய நிலை. உடல் கோளாறால் உண்டாவதும், நன வில் கொண்டுள்ள எண்ணமே நடைபெறுவதாகத் தோன்றுவதும் யாதொரு காரணமும் இன்றித் தோன்றுவதும் என்று கனுநிலை மூவகை. அதனுள் முன்னிரண்டும் பலன் தராது. பின்னையது பலன் தரும் முறையைக் கனு நூலின் விரிவாகக் காண்க. இவற்றுள் மாயையின் எண்ணமே கனவாகக் காண்டலின் பலியாததாயிற்று முன்னிரண்டடியுள் உவமையணியும், கடைசியடியில் சமாதியணியும் வந்துளது. தழுவித்தழுவி அடுக்குத் தொடர். கருங்கடல் இனமுள்ள அடை செங்கடல். மஞ்சட்கடல், வெள்ளைக்கடல் இவைகளினின்றும் பிரிக்கப்பட்டமையால். குடிப்பவன்-வினையாலணையும் பெயர். (72)

[மாயை தோழியிடத்து நிகழ்ந்தது கூறல்]

காலையின் மாலை வார்குழன் மாதர்க்
கண்டுரை செய்வளல் லமன்றன்
கோலமென் சொல்வேன் விழியெதிர் தோன்றிக்
குறுகிலென் கைப்படா னதனல்

சாலவு நைந்து துயின் றனன் கனவிற்
றடமுலை குழைந்திடப் புல்லி
மேலுநல் லருள்செய் துன்னைநா னென்றும்
விடுகிலே னென் றனனென்றாள்.

[இ—ள்.] காலையில்-உதயநேரத்தில், மாலைவார்குழம்-பூமாலையை யுடைய நீண்ட கூந்தலையுடைய, மாதர்க்கண்டு-தோழிகளைப் பார்த்து, உரைசெய்வள்-(மாயை)சொல்லுவாள், அல்லமன் றன்-அல்லமனது, கோலம் என்சொல்வேன்-விளையாட்டை என்னவென்று சொல்வேன், விழியெதிர் தோன்றி-கண்ணிற்கு முன்னால் தோன்றி, குறுகில்-அண்மையிற் சென்றால், என் கைப்படான்-என் கைகளுக்கு அகப்பட மாட்டான், அதனால்-ஆதலினால், சாலவும்-மிகவும், நைந்து-வாடி, துயின் றனன்-தூங்கினேன், கனவில்-(அதுபோது யான் கண்ட) கனவில், தடம்-பருத்த, முலை-நகில்கள், குழைந்திடப் புல்லி-குழையும்படி அணைத்து, மேலும்-மறுபடியும், நல் அருள் செய்து-நல்ல கருணையைச் செய்து, உன்னை-உன்றனை, யான்-நான், என் றும்-எப்பொழுதும், விடுகிலேன் என் றனன்-விட மாட்டேன் என்றான், என்றாள்-என்று சொன்னாள். [எ—று.]

[கு-ரை.] காலை மாலை முரண்தொடை. சால, உரிச்சொல். துயின் றனன். அன்விகுதி தன்மைக்கண் வந்தது. (73)

[தோழியர் மாயைக்கு உரைத்தல்]

அருந்தவ மழிக்கு மழகுடை யணங்கிற்
ககப்படா விறலினன் யாரோ
புரந்தர னயன்மால் சுரர்முனி வரர்கிம்
புருடர்வித் யாதரர் என்னப்
பரந்தவர் தம்மு ளலனிவ னொருவன்
பார்த்திடிற் பராபர னென்று
திருந்திழை மகளிர் மனத்துளே வியந்து
தெரிவையோ டுரைத்தன்மே யினரால்.

[இ—ள்.] அருந்தவம்-துறவினரது அரிய தவத்தினை, அழிக்கும்-போக்காநின்ற, அழகுஉடை-வனப்பினையுடைய, அணங்கிற்கு-இம்மாயைக்கு, அகப்படா-உட்படாத, விறலினன்-வெற்றி யையுடையவன், யரோ-எவரோ, புரந்தரன்-இந்திரன், அயன்-பிரமன், மால்-விஷ்ணு, சுரர்-தேவர்கள், முனிவரர்-

முனிவர்கள், கிம்புருடர் - கிம்புருடர்கள், வித்யாதரர்-வித்யாதரர்கள், என்ன-என்று சொல்ல, பரந்தவர் தம்முள்-விரிந்திருக்கின்ற இவர்களுக்குள், அலன்-சேர்ந்தவனல்லன், பார்த்திடில்-யோசித்துப் பார்க்குமிடத்து, ஒருவன்-ஒப்பற்றவனாகிய, இவன்-இந்த அல்லமன், பராபரன்-மேலான இறைவன், என்று-என்று தீர்மானித்து, திருந்து இழை-திருந்திய அணிகளையுடைய, மகளிர்-தோழிப்பெண்கள், மனத்துளே-தங்கள் மனதிற்குள்ளே, வியந்து-அதிசயித்து, தெரிவையோடு-மாயையோடு, உரைத்தல்-சொல்ல, மேயினர்-தொடங்கினர். [எ-று.]

[கு-ரை.] வித்யாதரர் கிம்புருடர் முதலியோர் தேவர் வகுப்பைச் சேர்ந்த பதினெட்டுவகையினைச் சேர்ந்தவர். அகப்படா ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். ஆல் அசை. அழிக்கும் என்னும் பெயரெச்சம் அழகு என்னும் காரணப்பெயர் கொண்டது. (74)

[தோழியர் மாயைக்குத் தேறுதல் கூறல்]

ஆசைநின் னுளத்தில் மிகவளர்ப் பதற்கா
யல்லம னிவ்வகை நடித்தான்
பேசுறு கனவின் பயனுனக் குரைப்பிற்
பின்புனை மெய்யுற வணைவன்
வாசமென் குழலா யென்றவண் மனத்தின்
வருத்தமற் றிடவறிந் துரைத்தார்
காசணி மருங்குன் மடந்தையர் மாயை
கவலைதீர்ந் துள்ளுளே களித்தாள்.

[இ-ள்.] ஆசை-விருப்பத்தினை, நின் உளத்துள்-உன்னுடைய மனதுள், மிக வளர்ப்பதற்காக-அதிகமாக வளர்க்கும் பொருட்டு, அல்லமன்-அல்லமதேவன், இவ்வகை நடித்தான்-இந்த விதமாக விளையாடினான், பேசுறு-சொல்லிய, கனவின் பயன்-(நீ கண்ட) கனவினது பலனை, உனக்கு உரைப்பின்-உனக்குச் சொல்லின், பின்பு-மீண்டும், உனை-உன்றனை, மெய்உற-உடலிற் பொருந்த, அணைவன்-புல்லுவன், வாசமென் குழலாய்-வாசனை பொருந்திய மென்மையான கூந்தலையுடைய மாயையே, என்று-என்று, அவள் மனத்தில்-மாயையின் உள்ளத்தின், வருத்தம் அற்றிட-துன்பம் நீங்க, அறிந்து-ஆலோசித்து, காசுஅணி-மேகலையணிந்த, மருங்குல்-இடையையுடைய, மடந்தையர்-தோழியர்கள், உரைத்தார்-சொன்னார். மாயை-(அதனைக்கேட்ட) மாயையானவள், கவலைதீர்ந்து-துன்பம் நீங்கி, உள்ளுளே-மனதின் உள்ளே, களித்தாள்-மகிழ்ந்தாள். [எ-று.]

[கு-ரை.] வருத்தம் அற்றிட அறிந்து உரைத்தார் என்றமையால் துன்பத்தைப் போக்கச் சொன்னார்களேயன்றி கனவின் உண்மைப் பலனைக் கூறினாரில்லை; ஏனெனில் எண்ணிக்கொண்டிருக்கும் எண்ணம் கனவில் வருமானால் பலிக்காது ஆதலின். ஆக என்பது ஆ என நின்றது. கனவின், இன் சாரியை. உரைப்பின், பின்வினை யெச்சவிகுதி (75)

[தோழியர் மோகினியிடத்து மொழிய அவள் வந்து மாயையிடத்துக் கூறல்]

இன்னண மாயை மாதிடை நிகழ்ந்த
வியல்பினை மோகினி சிலர்போய்ப்
பன்னுற வறிந்து மானமீக் கூரப்
பருவரற் கடலிடைப் படிந்து
தன்னொரு மகள்வாழ் மாளிகை யெய்தித்
தனயையைப் பாங்கிமா ரொடுகூ
யென்னிது செய்தா யையகோ பேதா
யென்றுநைந் தின்னன புகன்றாள்.

[இ-ள்.] இன்னணம்-இப்படியாக, மாயை மாதிடை-மாயையென்னும் பெயரையுடைய பெண்ணினிடத்து, நிகழ்ந்த-நடந்த, இயல்பினை-செய்கையை, சிலர் போய்-சில தோழியர் சென்று, பன்னுற-சொல்ல, மோகினி-மாயையின் தாயாகிய மோகினியானவள், அறிந்து-உணர்ந்து, மான மீக்கூர-அபிமானம் அதிகரிக்க, பருவரல்-துன்பமாகிய, கடலிடை-கடலின் கண், படிந்து-மூழ்கி, தன் ஒருமகள் வாழ்-தனது ஒப்பற்ற மகளாகிய மாயையானவள் தங்கி வாழாநின்ற, மாளிகை-அரண்மனையை, எய்தி-அடைந்து, தனயையை-மகளாகிய மாயையை, பாங்கிமாரோடு-தோழியர்களோடு, கூய்-கூப்பிட்டு, என் இது செய்தாய்-என்ன இந்தக் காரியம் செய்தனை, ஐயகோ-அந்தோ, பேதாய்-அறிவில்லாதவளே, என்று-என்று சொல்லி, நைந்து-மனம் வாடி, இன்னன-கீழ்க்கண்ட இவைகளை, புகன்றாள்-சொன்னாள். [எ-று.]

[கு-ரை.] மோகினி அறிந்து படிந்து எய்தி கூய் நைந்து புகன்றாள் என்று வினைமுடிவு செய்க. (76)

[மோகினி கூறுதல்]

மானமு முயிரு மொருங்கு நில்லாத
வழியுயிர் தன்னையே விடுத்துத்
தானுறு பொருளாய் மானமே கொளுமுன்
றந்தைதன் செவிப்படி லென்னும்

பாணுவு மதியு மியங்குறு மளவும்
பழியிது வழிவழி வராதோ
யானுனை வருந்தி யீன்றது மிதற்கோ
வென்செய்தாய் பாவியென் றிசைப்பாள்.

[இ—ள்.] மானமும்-சிறந்துள்ளதாகிய மானமும், உயிரும்-ஆன்மாவும், ஒருங்கு நில்லாத வழி-ஒன்றாக நில்லாதவிடத்து, உயிர் தன்னையே விடுத்து-உயிரைவிட்டு, தான் உறுபொருளாய்-தான் அடையவேண்டிய பொருளாக, மானமேகொளும்-மானத்தையே காக்கின்ற, உன் தந்தைதன்-உனது தகப்பனது, செவிப்படில் என்னும்-காதில் விழுந்தால் யாதாகும், பானுவும்-சூரியனும், மதியும்-சந்திரனும், இயங்குறும் அளவும்-சஞ்சரித்துக் கொண்டிருக்கிறவரைக்கும், இதுபழி-இந்தப்பழியானது, வழி வழி வராதோ-பிள்ளை பிள்ளை தலைமுறைக்கும் வழங்காதோ, யான் உனை-உன்னை நான், வருந்தி-வருத்தப்பட்டு, ஈன்றதும் இதற்கோ-பெற்றதும் இப்பழியை அடைவதற்குத்தானு, பாவி-ஏ பாவியே, என் செய்தாய்-என்ன காரியம் செய்தாய், என்று-என்று சொல்லி, இசைப்பாள்-மேலும் சொல்லுவாள். [எ—று.]

[கு-ரை.] "மானம் தன்னிலையிற்றாழாமையும் தாழ்வு வந்தவிடத்து உயிர் வாழாமையும்" என்பர் பரிமேலழகர். "மயிர்நீப்பின் வாழாக் கவரி மானன்னார் உயிர் நீப்பார் மானம்வரின்" என்றதற்கு ஏற்ப மமகாரனை மாயையின் தந்தை இப்பழிச்சொல்லைக்கேட்பானுனல் உயிரை விடுவான் என்றாளாயிற்று. நோய், பழியிலாத கால்வழியில் வந்த பெண்கள்தான் மணத்திற்குச் சிறந்தவள் எனக்கூறுதல் மரபாதலின் தன் பெண்ணிற்குத் தகாத பழி வந்துவிட்டதே என்றும் இது பரம்பரையாகச் சொல்லப்படுமே என்பதற்காகவும் வருந்திக் கூறுகின்றாள் மோகினி. (77)

இதுவுமது

குரவர்தா மியைந்து கொடுத்தில ராயிற்
குமரவே ளனையவ ரேனு
மருவரா நிற்பர் தந்தைதாய் தங்க
ளாணையி னெழுகுகன் னியர்தா
முருவிலர் ரெனினுங் குரவருண் மகிழ்வுற்
றுதவுறி னனையவர் தமமைப்
பரவுவான் கடவு ளாகவே நினைந்து
பண்பொடும் பயிலுவ ரன்றே.

[இ-ள்.] தந்தைதாய் தங்கள்-தகப்பன் தாயாரது, ஆணையின்-கட்டளையின்படி, ஒழுகும்-நடக்கும், கன்னியர்தாம்-மகளிர்கள், குரவர்தாம்-தந்தைதாயர், இயைந்து-உடன்பட்டு, கொடுத்திலராயின்-கொடுக்காவிட்டால், குமரவேள்-முருகனை, அனையவர் ஏனும்-ஒத்தவராக இருப்பினும், அருவரா நிற்பர்-(அவ்வாடவனை) அருவருப்பார்கள், உருவிலார் எனினும்-அழகில்லாதவராக இருந்தாலும், குரவர்-தந்தைதாயர், உள்மகிழ்வுற்று-மனம் விரும்பி, உதவுறின்-கொடுப்பார்களானால், அனையவர்தம்மை-அந்த ஆடவர்களை, பரவு-துதிக்கப்படுகின்ற, வான்கடவுளாகவே-மேலான தேவனாகவே, நினைந்து-எண்ணி, பண்பொடும்-இனிமையோடும், பயிலுவர்-பழகுவார்கள்.

[எ-று.]

[கு-ரை.] குமரவேள் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. அன்று, ஏ. அசைகள். "நதியளித்தவனேவலிற்றூதர்போய் நயந்துடன் காந்தார பதியளித்த மெய்க்கன்னியைத் தருக பூபதிக்கென மண நேர்ந்தார், மதியளித்த தொல்குலத்தவன் விழியிலா மகனெனத்தமர் சொல்ல, விதியளித்த தென்றுளமகிழ்ந்தனள் வடமீனெனத் தகுங் கற்பாள்" "இமைத்த கண்ணிணை மலர்ந்தினி நோக்கிலேன் யாரொருவரை யென்று, சமைத்த பட்டமொன்றினிற்பொதி பெதுப்பையை.....கடிவிளைத்திட்டார்". என வில்லி புத்தூரார் கூறுதற்கேற்ப ஈண்டு கூறினர். (78)

### இதுவுமது

மணம்புரி வதன்முன் குரவரா ணையினு
மணவினை முற்றிய பின்னர்
இணங்குற வருள்செய் கொழுந னாணையினு
மிருப்பர்தம் வயமில ரென்று
மணங்கனை யவர்தா மென்பதை யறிந்து
மடாதவிச் செயலினைச் செய்தாய்
பிணங்குவா ரிலையென் றிருந்தனை போலும்
பேதைநீ யென்றுதாய் முனிந்தாள்.

[இ-ள்.] அணங்கு அனையவர்தாம்-தெய்வ மகளிரை ஒத்த மகளிர்கள், மணம்புரிவதன்முன்-கல்யாணம் செய்வதற்கு முன்னே, குரவர் ஆணையினும்-தாய் தந்தையர் கட்டளைப் படியும், மணவினை முற்றிய பின்னர்-கல்யாணம் செய்த பின்பு, இணங்கு உற அருள்செய்-தன் வசப்படும்படி நன்மை செய்யா நின்ற, கொழுநன் ஆணையினும்-கணவன் கட்டளைப்படியும், இருப்பர்-நிற்பார்கள், என்றும் தம் வயம் இலர்-எப்போதும் தன்வசத்தினரல்லர், என்பதை - என்று ஆன்றோர்களால்

சொல்லப்படுவதை, அறிந்தும்-தெரிந்திருந்தும், பேதை-அறிவற்றவளே, நீ அடாத இச்செயலினை-நீ தகாத இந்தக் காரியத்தை, செய்தாய்-செய்தனை, பிணங்குவார்-உன்னைக் கோபிப்பவர், இலை என்று-இல்லை என்றெண்ணி, இருந்தனைபோலும்-இருந்தாய்போலும், என்று-என்று சொல்லி, தாய்-தாயாகிய மோகினி, முனிந்தாள்-கோபித்தாள். [எ—று.]

[கு-ரை.] "மங்கையை வாழுநாளில் வளமொடு பிதாவே காப்பான், பொங்கிய யௌவனத்தில் பொருந்து பர்த்தாவே காப்பான், தங்கிய மூப்பிற் றங்கள் தனயரே காக்குமன்றிச், சங்கையாமொருகாலத்துஞ் சுதந்திரமில்லை தானே" என்னும் நீதிசாரச்செய்யுளின் கருத்தை ஒத்துளது இச்செய்யுள். குரவர், அரசன், உபாத்தியாயன், தாய்தந்தை, குரு என்பவர். பிறர் பிறவாறும் கூறுவர். தாய்தந்தையரை எவரும் சேர்த்துச் சொல்வர் ஆதலின் தாய் தந்தையரைக் குரவர் என்றார். ஐங்குரவர் ஆணை மறுத்தல் பாபம் என்பர் "ஐங்குரவர் ஆணை மறுத்தலும்," "குரவர் தம்முரை மறுக்கினும், பிறர் புரிந்த நன்றியது கொல்லினும்.........இரவியுள்ளளவும் மதியமுள்ளளவும் இவர்களே நரகில் எய்துவார்." "குரவர்தம்முரை கடக்கும் கொடியனும்" எனக் கூறுதலையும் அறிக. (79)

[மாயையின் மனோநிலையும் தாயின் பெருங்கருணையும்]

தான்செயுந் தவறுந் தாய்செயு முனிவுந்
தன்மனந் தனைநனி வருத்த
நான்செய்வ தென்னென் றிருநில நோக்கி
நாணிநீர் விழியுக விருந்தா
டேன்செய் மென்மொழியாண் மோகினி கண்டு
சினந்தவிர்ந் தகங்கரைந் துன்மேன்
மான்செயும் விழியாய் பிழையிலை என்றாண்
மனங்கரை வன்னைபோ லுண்டோ.

[இ—ள்.] தேன்செயும் மொழியாள்-தேன்போலும் இனிமையாகிய சொல்லையுடைய மாயையானவள், தான் செயும் தவறும்-தான் செய்த குற்றமும், தாய்செயும் முனிவும்-தாய் செய்கின்ற கோபமும், தன்மனம்தனை-தனது மனதை, நனி வருத்த-மிகவும் துன்புறுத்த, நான் செய்வது என்-(இதற்கு) நான் என்ன செய்வேன், என்று-என்று சொல்லி, நாணி-வெட்கமுற்று, இருநிலம் நோக்கி-பெரிய பூமியைப் பார்த்து, நீர்விழி உக-கண்ணினின்றும் நீர்த்துளி சிந்த, இருந்தாள்-இருந்தனள், மோகினிகண்டு-(இந்த செயலை) தாயாகிய மோகினி பார்த்து, சினம் தவிர்ந்து-கோபம் நீங்கி, அகம் கரைந்து-மனம் உருகி, மான்செயும் விழியாய்-மானினது கண்போன்ற கண்ணையுடைய

மாயையே, உன்மேல்-நின்மீது, பிழையிலை என்ருள்-குற்றம் இல்லை என்று கூறினுள், மனம் கரைவு-மனது உருகுதலில், அன்னைபோல் உண்டோ-தாயைப்போல் ஒருவருண்டோ.
[எ—று.]

[கு-ரை.] அன்பினிற் சிறந்தவர் தாயைப்போல் வேறு ஒருவரும் இல்லை ஆதலின் மனங்கரைவு அன்னைபோல் உண்டோ என்ருர். 'தாயினும் அன்பன்' "தாயிற் சிறந்த தயாவான தத்துவனே" எனப் பிறர் கூறுமாற்ருனும் அறிக. தான் செய்தது தவறு என்று உணர்ந்து வருந்துவதே குற்றத்தை மன்னிப்பதற்கு உறுதுணை ஆதலினுலும், தலையன்புடைய தாயானதினுலும், நின்மேல் பிழையிலை என்று மோகினி கூறினுள் எங்க மகளிர் தவறு செய்வார்களானுல் அதைக் கேட்பவர்களுக்கு முன்னுல் தலை குனிந்து இருநிலம் நோக்கலும் கால் விரலால் நிலங்கிளைத்தலும் மரபு. (80)

[மோகினி தோழியரை முனிதலும் அவர்கள் விடையும்]

மங்கைமீர் நீயிர் சூழ்ந்தன ரிருந்தும்
வளை தரு வேலியில் பயிர்போ
லெங்கடம் மடந்தை நிறையழிந்தொழிய
என்செய்தீர் பாவிகா ளென்ருள்
அங்குறு மடவார் சொல்வரெம் பிராட்டி
யருளொடு கேண்மதி மதனுல்
உங்குல மடந்தை யுயிர்விடா திருந்த
துன் தவ மென்றுநைந் துரைத்தார்.

[இ—ள்.] மங்கைமீர்-தோழியர்களே, நீயிர்-நீங்கள், சூழ்ந்தனர்-சூழ்ந்தவர்களாக, இருந்தும்-(சுற்றிலும்) இருந்தும், வளைதரு-வளைந்த, வேலிஇல்-வேலி இல்லாத, பயிர்போல்-பயிரைப்போல, எங்கள் தம் மடந்தை-எங்கள் பெண்ணுகிய மாயையினது, நிறை அழிந்து ஒழிய-கற்பு அழிந்து நீங்க, என் செய்தீர்-என்ன காரியம் செய்தீர்கள், பாவிகாள்-பாவியர்களே, என்ருள்-என்று மோகினி சொன்னுள், அங்கு உறும் மடவார்-அவ்விடத்து இருந்த தோழிகள், சொல்வர்-சொல்லுவாராயினர், எம்பிராட்டி-எங்கள் தலைவியே, அருளொடு கேள்-(யாங்கள் சொல்வதை) அன்பின் மிகுதியோடு கேட்பாயாக, மதனுல்-மன்மதன் செய்யும் துன்பத்தால், உம் குலமடந்தை-உங்கள் குலத்திற் பிறந்த பெண்ணுகிய மாயை, உயிர்விடாது இருந்தது-உயிரை உடலினின்றும் விடாமல் இருந்த தன்மை, உன் தவம்-உனது அரிய தவமாகும், என்று-என்று, நைந்து-வருந்தி, உரைத்தார்-சொன்னுர்கள்.
[எ—று].

[கு-ரை.] வேலியில்லாத பயிர்போல என்னும் பழமொழி வந்துளது. சூழ்ந்தனர்-முற்றெச்சம். கேண்மதி-மதி முன்னிலை அசை. நிறை "மறை பிறர் அறியாமை நெஞ்சினை நிறுத்தல்" என்பர் கலித்தொகை ஆசிரியர். (81)

[மோகினி சகளையை வினுதல்]

பாங்கியர் பகரச் சினம்சிறி தவிந்து
பாங்கியர் குழுவினுட் சிறப்புற்
ரோங்கிய சகளை் தன்முக நோக்கி
யுரைப்பண் மோகினிஎனு மரசி
பூங்கணை மதவே ளனைய வல்லமனைப்
புறத்துநின் றகற்றிடா தெங்க
ளீர்ங்கதிர் முகமெல் லியன்முனம் விடுத்தாய்
என்கொலோ வெனவவள் உரைப்பாள்.

[இ-ள்.] பாங்கியர்-தோழியர், பகர-சொல்லியமாத்திரத்தில், மோகினி எனும் அரசி-மோகினி என்று சொல்லப்படுகிற அரசன் தேவி, சினம்-கோபம், சிறிது-கொஞ்சம், அவிந்து-நீங்கி, பாங்கியர் குழுவினுள்-தோழியர் கூட்டத்துள், சிறப்பு உற்று ஓங்கிய-மிகவும் சிறப்புபெற்று உயர்ந்துள்ள, சகளைதன் முகம்நோக்கி-சகளையின் முகத்தைப் பார்த்து, உரைப்பள்-சொல்லுவாள், பூங்கணை மதவேள் அனைய-பூவம்புகளை உடைய மன்மதனை ஒத்த, அல்லமனை-அல்லமதேவனை, புறத்து நின்று-வெளியே நின்று, அகற்றிடாது-துரத்தாமல், எங்கள்-எங்களுடைய, ஈர்ங்கதிர் முகம்-குளிர்ந்த மதியை ஒத்த முகத்தையுடைய, மெல் இயல் முனம்-மென்மையான இலக்கணமுடைய மாயைக்கு முன்பு, விடுத்தாய் - அனுப்பினுய், என்கொலோ என-இது என்ன காரணமோ என்று சொல்ல, அவள் உரைப்பாள்-சகளை சொல்லுவாள். [எ-று.]

[கு-ரை.] மதவேள் இருபெயரொட்டு. கொல் ஐயம். பூ+கணை= பூங்கணை என-"பூப்பெயர் முன் இனமென்மையும் தோன்றும்" என்னும் விதிப்படி வந்தது. முன்னம்-என்பது முனம் எனத் தொகுத்தல் விகாரமாய் நின்றது. (82)

[சகளை கூற்று]

மானிடப் பிறவி யரிததி லரசர்
மக்களா குதலரி ததனி
லூனுறுப் பமைத லரிததி லரிதா
லுணர்வொடு போகங்க ளுகர்தல்

தானெனப் பெரியர் கூறலா லன்னாய்
தவம்பல முயன்றுநீ பெற்ற
மீனெனப் பிறழுங் கண்ணியை வெகுண்டு
வெறுப்பது தகாதென வுரைத்தாள்.

[இ—ள்.] மானிடப்பிறவி-மனிதராகப் பிறத்தல், அரிது-கிடைத்தற்கு அருமை, அதில்-அப்படிப்பிறத்தலிலும், அரசர் மக்களாகுதல்-அரசர் பிள்ளைகளாகப் பிறத்தல், அரிது-கிடைத்தற்கு அருமை, அதனில்-அப்படிப் பிறத்தலினிலும், ஊன் உறுப்பு-ஊனோடு கூடிய அங்கங்கள், அமைதல்-குறைவறப் பிறத்தல், அரிது-அருமை, அதில்-அப்படிப் பிறத்தலிலும், உணர்வொடு-அறிவோடு, போகங்கள்-இன்பங்களை, நுகர்தல்-அனுபவித்தல், அரிது-கிடைத்தற்கு அருமையாகும், என-என்று, பெரியர்-சான்றோர்கள், கூறலால்-சொல்லுகின்ற காரணத்தால், அன்னாய்-தாயே, தவம்பல முயன்று-தவங்கள் பலவற்றை முயற்சியோடு செய்து, நீ பெற்ற-நின்னால் பெறப்பட்ட, மீன் எனப்பிறழும்-மீனைப்போலப் புரளுகின்ற, கண்ணியை-கண்ணையுடைய மாயையை, வெகுண்டு-கோபித்து, வெறுப்பது-முனிவது, தகாது-தகுதியன்று, என உரைத்தாள்-என்று சொன்னாள். [எ—று.]

[கு-ரை.] ஆல், தான், அசைகள். "அரிது அரிது மானிடராதல் அரிது" என்பன போன்றன எண்ணுதற்குரியன. அன்னை என்ற சொல் அன்னாய் என விளியாயிற்று. "ஐயிறு பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும் உருபாம்." என்ற விதிப்படி ஐ ஆயாயிற்று. (83)

[மோகினி கூற்று]

மோகினி சகலை புகன்மொழி கேட்டு
முகமலர்ந் தென்றவப் பயனும்
பாகெனு மொழியா டவறிலள் யாழோர்
பயின்மண மரசர்மேற் றென்ப
ராகலி லிவளுக் கல்லமன் றூனே
யருமணத் தலைவனங் கவன்பாற்
போகம் வேண்டியவா கொள்கெனப் புகன்று
புகன்றனள் பின்னுமோர் மாற்றம்.

[இ—ள்.] மோகினி-மோகினியானவள், சகலைபுகல்மொழி கேட்டு-சகலையென்னும் தோழி சொன்ன சொற்களைக்கேட்டு, முகமலர்ந்து-முகம் மகிழ்ச்சி பூத்து, என் தவப்பயனும்-எனது

தவத்தின் பயனாகிய, பாகு எனும் மொழியாள்-வெல்லப்பாகை யொத்த மொழியையுடைய மாயை, தவறிலள்-குற்றம் உடைய வளல்லள், யாழோர்-யாழ் வாசித்தலில்வல்ல கந்தருவர், பயில்-இயல்பாகக் கொள்ளுகின்ற, மணம்-திருமணத்தினை, அரசர் மேற்றென்ப-மன்னர்களுக்கு உரித்தென்று கூறுவர், ஆகலில்-ஆகையினால், இவளுக்கு-இம்மாயைக்கு, அல்லமன்தானே-அல்லமனே, அருமணத்தலைவன்-அரிய மணத்திற்கு உரிய நாயகனாவான், அங்கவன்பால்-அவனிடத்தில், வேண்டியவா-விரும்பியபடி, போகம்கொள்க - இன்பத்தை அனுபவிக்க, எனப்புகன்று-என்று சொல்லி, பின்னும் ஓர் மாற்றம்-மீண்டும் ஒரு சொல்லை, புகன்றனள்-சொன்னாள். [எ—று.]

[கு-ரை.] "உளமலி காதற் களவெனப்படுவது ஒரு நான்கு வேதத்து இரு நான்கு மன்றலுள் யாழோர் கூட்டத்து இயல்பினதென்ப"... என இலக்கணநூல் கூறுமாற்றானும் கந்தருவ மணம் எண்வகை மணத்துள் சிறந்த ஒன்றென்னும் தமிழ்நூல் வழக்கை ஒட்டி மோகினி இவ்வாறு கூறினாளாயிற்று. பிரமம் முதலிய நான்கு மணத்தை மனதில்கொண்டு "குரவா தாம். மணம்புரிவதன் முன்" என்ற செய்யுளிற் கண்டபடி மகளை வெறுத்த மோகினி. தமிழர் வழக்கப்படி யாழோர் மணப்படி மாயை செய்த செயல் தவறில்லை என்று கூறுகின்றாள் இங்கு. கொள்க வியங்கோள். (84)

### இதுவுமது

உலகெலா மறிய வதுவைசெய் காறு
  முலகமன் னவனறி யாமற்
றிலகவா ணுதலா ளொழுக்கநீர் மறைமின்
  தேமொழி யீரிவ டீமை
நலமெலா நுமதே யாதலா னுமக்கு
  நான்சொல்வ தென்னென மகளுக்
கலகிலா வுவகை செய்துபோ யினடன்
  னகத்தினுண் முனிவுற வந்தாள்.

[இ—ள்.] தேமொழியீர்-இனிமையான சொற்களையுடைய தோழிகளே, உலகு எலாம் அறிய-உலகிலுள்ள அனைவரும் அறியும்படி, வதுவை செய்காறும்-கல்யாணம் செய்யும் அளவும், உலகம்-உலகிலுள்ள மக்களும், மன்னவன்-அரசனும், அறியாமல்-தெரிந்துகொள்ளாமல், திலகம்-பொட்டினை அணிந்த, வாள்-ஒளி பொருந்திய, நுதலாள்-நெற்றியையுடைய மாயையினது, ஒழுக்கம்-செயலினை, நீர் மறைமின்-நீங்கள் மறையுங்கள், இவள்-இம் மாயையினது, தீமை-தீமையும்,

நலம்-நன்மையும், எலாம்-ஆகிய எல்லாம், நுமதே-உமதாகும், ஆதலால்-ஆகையினால், உமக்கு-உங்களுக்கு, நான் சொல்வது என்-நான் சொல்லக்கிடப்பது என்ன இருக்கின்றது, எனு-என்று, மகளுக்கு-மாயைக்கு, அலகு இலா-அளவில்லாத, உவகைசெய்து-மகிழ்ச்சியைச்செய்து, போயினள்-சென்றாள், தன் அகத்தினுள்-தனது மனதிற்குள், முனிவுற வந்தாள்-கோபம் பொருந்த வந்தவளாகிய மோகினி. [எ—று.]

[கு-ரை.] உலகு இடவாகுபெயர். தேன்மொழி தேமொழி என வந்தது. ''தேன்மொழி மெய்வரின் இயல்பும் மென்மைமேவின் இறுதி யழிவும்'' என்பது விதியாதலின். இலா ஈறுகெட்ட எதிர்மறைப் பெய ரெச்சம். எனு என்பது செய்யா என்னும் வினையெச்சம் செய்து என்னும் பொருளில் வந்தது. (85)

[மாயை தோழியரிடத்துக் கூறல்]

என்பிழை பொறும லன்னையோ டென்பா
 லிருந்தவ ரேசொலி னதனு
லன்புடை யன்னை முனியுமோ வென்ன
 வறைந்தன ள் மாயைகேட் டறைவாள்
பொன்புரை சகளை நங்குரு வுனக்குப்
 புராரியே தலைவ னென்றிருப்பப்
பின்பிது நீசெய் தனையெனி னினைப்
 பிழைசொல்வார் மேற்பிழை யுண்டோ.

[இ—ள்.] மாயை-மாயையானவள், என்பிழை-யான்செய்த குற்றத்தை, பொறுமல்-பொறுக்காமல், அன்னையோடு-தாயோடு, என்பால்-என்னிடத்து, இருந்தவரே-இருந்த தோழியர்களே, சொலின்-சொன்னால், அதனால்-அதற்காக, அன்புடை அன்னை-என்னிடத்து அன்புள்ள தாய், முனியுமோ என்ன-கோபிப்பாளோ என்று, அறைந்தனள்-சொன்னாள், பொன் புரை-இலக்குமியை ஒத்த, சகளை-சகளை என்னும் தோழி, கேட்டு அறைவாள்-(மாயை சொன்னவற்றைக்) கேட்டு சொல்லுவாளாயினாள், நம் குரு-நமது குருவாகிய சாந்தவாங் காரனென்னும் பெயரையுடையவர், உனக்கு-உன்றனக்கு, புராரியே-சிவபெருமானே, தலைவன் என்று இருப்ப-நாயகன் என்று சொல்லி இருக்கவும், பின்பு-பின்னர், நீ இது செய்தனை-நீ இந்தத் தகாத காரியத்தைச் செய்தனையானால், நினை-உன்னைக்குறித்து, பிழை சொல்வார்மேல்-குற்றம் சொல்லுபவரிடத்தில், பிழையுண்டோ-குற்றம் உண்டா. [எ—று.]

[கு-ரை.] புரம்+அரி=புராரி வடமொழிப்புணர்ச்சி; திரிபுரத்திற்குப் பகைவன் என்பது பொருள். ஓகாரம் எதிர்மறை. 'தாயொக்கும் அன்பின்' என்று பிறரும் கூறியதனால் அன்புடை அன்னை என்றார். (86)

[சகளை மீண்டும் கூறல்]

மானனை யாய்நந் தாயறிந் தமையான்
மறைந்தது நொய்துபட் டன்றிக்
கோனிதை யறிவ னெனினெளி தாமோ
கோமள வல்லிநீ கேண்மோ
போனது போக வினியவன் றன்னைப்
புறத்தினில் விடுவதே யறிவு
தானென வுரைத்தாண் மாயைகேட் டயர்ந்து
தாங்கருந் துயரமோ டிருந்தாள்.

[இ-ள்.] மான் அனையாய்-மானை ஒத்த மாயையே, நம் தாய் அறிந்தமையால்-நம்முடைய தாய் தெரிந்துகொண்டபடியால், நொய்துபட்டு-அற்பமாக, மறைந்தது-மறைந்துவிட்டது, அன்றி-அல்லாமல், கோன்-அரசன், இதை அறிவான் எனில்-இச்செய்தியை அறிவானேயானால், எளிதாமோ-எளிமையாக முடியுமா, கோமளவல்லி-அழகிய கொடியையொத்த மாயையே, நீ கேண்மோ-நீ கேட்பாயாக, போனதுபோக - போனது போகட்டும், இனி அவன் தன்னை-இனிமேலாவது அந்த அல்லமதேவனை, புறத்தினில் விடுவதே-அப்புறப்படுத்துவதே, அறிவுதான் எனவுரைத்தாள்-அறிவின் பயனாகும் என்று சொன்னாள், மாயை கேட்டு-மாயையானவள் அம்மொழியைக் கேட்டு, அயர்ந்து-சோர்ந்து, தாங்க அரும்-தாங்குதற்கு அருமையான, துயரமொடு-துன்பத்தோடு, இருந்தாள்-இருந்தனள். [எ-று.]

[கு-ரை.] மான் முதலாகுபெயர். கோ-னகரச்சாரியை பெற்றது "ஆமா கோனவ்வணையவும் பெறுமே" என்பது விதியாதலின். கோமளம்-இளமைச்செவ்வி வல்லி உவமையாகுபெயர். கேண்மோ என்பதில் மோ முன்னிலையசை. [87]

(அல்லமன் வினவும் சகளையின் விடையும்]

அல்லம னறிந்து நுந்திரு மடந்தைக்
கடுத்ததென் புகலெனச் சகளை
வல்லிநின் மாயை வலையிடைப் பட்ட
மறையெலா மிறைமனை நிறைந்த

தொல்லைநல் வினையா லறிந்திலன் வேந்த
னொருவனும் யாமுய்ய வேண்டிச்
சொல்லுவ தொன்றுண் டையநீ புறத்தோர்
சூழலி லிருத்தனன் றென்றாள்.

[இ–ள்.] (பின்பு) அல்லமன் அறிந்து-அல்லமதேவன் இச் செய்திகளைத் தெரிந்துகொண்டு, நும் திருமடந்தைக்கு-நுங்கள் திருமகளை ஒத்த மாயைக்கு, அடுத்தது என்-நேர்ந்தது என்ன, புகல் என-சொல்லுக என்று கேட்க, சகளை-சகளை என்னும் தோழி, வல்லி-கொடியை ஒத்த மாயையானவள், நின் மாயை-நினது மாயமாகிய, வலையிடைப்பட்ட-வலையின் மத்தியில் சிக்கிக்கொள்ளப்பட்ட, மறையெலாம்-இரகசியங்களெல்லாம், இறை மனை-அரசன் வீடு, நிறைந்த-நிறைந்துவிட்டன, தொல்லைநல் வினையால்-பழய புண்ணியத்தால், வேந்தன் ஒருவனும்-அரசன் ஒருவன்மட்டும், அறிந்திலன்-தெரிந்தானில்லை, யாம் உய்யவேண்டி-நாமெல்லாம் பிழைக்கவேண்டி, சொல்லுவது-உன்னிடத்தில் யாங்கள் கேட்டுக்கொள்வது, ஒன்று உண்டு-ஒரு செய்தி உண்டு, (அதாவது) ஐய-ஐயனே, நீ-நீவிர், புறத்து ஓர் சூழலில்-வெளியில் ஓரிடத்தில், இருத்தல் நன்று-இருப்பது நல்லதாகும், என்றாள்-என்று சொன்னாள். [எ–று.]

[கு-ரை.] வல்லி ஆகுபெயர். மறை காரணப்பெயர். நிறைந்த அன்பெறாத அகர ஈற்றுப் பலவின்பால் படர்க்கை வினைமுற்று. மாயை உண்மையைப் பொய்யென்றும் பொய்யை உண்மை என்றும் மயங்க வைப்பது. (88)

[அல்லமன் கூறல்]

மாயையை யகன்றா னடக்கக்கா லெழுமோ
வாயிடை மாற்றமொன் றுண்டோ
போயொரு விடய முணமனம் வருமோ
பொருந்துறு பகலிர வுளவோ
காயமு முயிருங் கலந்துவாழ் வுறுமோ
கண்டன மெனவெனை யொருவர்
நீயறி வுறவிங் குரைப்பவ ருளரோ
நேரிழா யென்றன னண்ணல்.

[இ–ள்.] மாயையை அகன்றால்-மாயையைவிட்டு நீங்கினால், கடக்கக் கால் எழுமோ-நடப்பதற்குக் கால் எழுமோ,

வாயிடை-வாயினிடத்து, மாற்றம் ஒன்று உண்டோ-ஒரு சொல் வருமோ, போய் ஒரு விடயம்-ஒரு விஷயத்தில் சென்று, மனம் உணவருமோ-மனமானது உண்ணுதற்கு செல்லுமோ, பொருந்துறும்-பொருந்திய, பகல் இரவு உளவோ-பகலும் இரவும் உள்ளனவாகுமோ, காயமும்-உடலும், உயிரும்-ஆன்மாவும், கலந்து-சேர்ந்து, வாழ்வுறுமோ-இன்பம் அனுபவிக்குமோ, கண்டனம்-பார்த்தேம், எனஎனே-என்று என்னே, ஒருவர்-ஒருத்தர், நீ அறிவுற-நீ தெரிந்துகொள்ளும்படி, இங்கு-இவ்விடத்தில், உரைப்பவர் உளரோ-சொல்லுபவர் இருக்கின்றார்களா, நேரிழாய்-ஒத்த அணி அணிந்த சகளையே, என்றனன் என்று சொன்னான், அண்ணல்-பெருமையிற் சிறந்த அல்லமன். [எ—று.]

[கு-ரை.] அல்லமன் சகளையிடம் மாயையைவிட்டு விலகினால்தான் பிரிவுத் துன்பத்தால் இவ்வித துன்பத்தை அடைவேன் என்று வெளிப்படையாகக் கூறினும் உள்ளக் கிடக்கை வேறு கூறினார். கால் எழுதல், மாற்றம் உண்டாதல், உணமனம் வருதல், பகல் இரவு என்னும் வேறுபாடு அறிதல், காயமும் உயிரும் கலந்து வாழ்தல், கண்டனம் என உரைத்தல், முதலியவற்றிற்குக் காரணம் உயிருக்கு உயிராக விளங்கும் இறைவன் இன்றேல் முடியாதென்றும், ஆதலின் இறைமைத் தன்மையான தான் விலகின் மாயை அடையும் துன்பத்திற்கு அளவில என்பதும் பெறப்படுகின்றது. காணப்படும் வடிவம் முதலிய உறுப்புகள் மாயையின் தன்மையென்றும், காணப்படாத அருவமாகிய ஆன்மா முதலியன இறைவன் தன்மையென்றும், இறைவன் பிரியின் உடனே அவனுடைய தன்மையாகிய ஆன்மா விலகும் விலகவே சடமாகிய உறுப்புகளால் யாதொரு பயனும் இல்லை என்றும் கூறினாராயிற்று. ஓகாரங்கள் வினா எதிர்மறைப் பொருளில் வந்தன. நேரிழை, பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. நேரிழை ஐகார ஈற்று உயர்திணைப்பெயர் ஆயீறாகத் திரிந்து விளி யேற்றது. (89)

[சகளை கூற்று]

கருத்தினை யறியா தவன்மொழி தனக்குக்
காட்டிய பொருளையே கொண்டு
விரைத்துணர் மலர்மென் குழலினள் புணரும்
விதியுள தென்னிலெங் கொடியைத்
தரித்தெவ ணொருநீ யிருப்பினு முனக்குத்
தருமிதி லையம்வேண் டாவென்
றுரைத்தனள் கருணை யென்றுசெய் குவனென்
றுழன்றவ ளண்ணலை நோக்கி.

[இ–ள்.] கருத்தினை அறியாது-அல்லமன் கூறிய நினைப்பின் பொருளை யறியாது, அவன்மொழி-அவ்வல்லமன் சொல், தனக்குக் காட்டிய பொருளையே கொண்டு-தனக்குத் தெரிவித்த மேற்போக்கான பொருளையே கொண்டு, விரை-மணம் மிகுந்த, மென்மலர் துணர்-மென்மையான பூங்கொத்துகளை அணிந்த, குழலினுள்-கூந்தலையுடைய மாயையானவள், புணருப்-கூடும், விதியுளது எனில்-ஊழ் இருக்குமானுல், எங்கொடியை-எங்கள் கொடிபோன்ற மாயையை, ஒரு நீ-ஒப்பற்றவனுய நீ, எவண் தரித்து இருப்பினும்-எவ்விடத்து நிலைத்து இருந்தாலும், உனக்குத் தரும்-கொண்டுவந்து உனக்குக் கூட்டிவைத்துக்கொடுக்கும், இதில் ஐயம் வேண்டாம் என்று-இக்காரியத்தில் உங்கட்கு ஐயம் வேண்டியதில்லை என்று, உரைத்தனள்-சொன்னுள், என்று கருணை செய்குவன்-எப்போது அருள் செய்வான், என்று உழன்றவள்-என்று வருந்துக்கொண்டிருந்தவளாகிய சகளை, அண்ணலை நோக்கி-அல்லமதேவனைப்பார்த்து. [எ–று.]

[கு-ரை.] கொடி. உவம ஆகுபெயர். உழன்றவள் வினையாலணையும் பெயர். "ஊட்டும் ஊழ் எங்குற்றுலும் உருத்து வந்தூட்டிடாதோ. (90)

[அல்லமன் விலகுதல்]

சகளை இவ்வாறு மொழிதர நங்காய்
சாலவு நன்றுநன் றென்று
நகைமதி தவழும் செஞ்சடை மதுகை
நாயகன் திருமுனஞ் சென்று
முகிழ்முலை நடிக்கும் பொழுதுதன் செயல்செய்
முயற்சியி னின்றனன் றனக்குத்
தகுமென வளர்பே ரறிவினுற் றன்னைத்
தானலா தறிதரப் படாதான்.

[இ–ள்.] சகளை இவ்வாறு மொழிதர-சகளையென்னும் தோழி இவ்விதம் சொல்ல, தனக்குத்தகும் என-இது தனக்குத் தக்கது என்று, வளர்பேர் அறிவினுல்-வளராநின்ற பெரிய அறிவினுல், தன்னைத்தான் அலாது-தன்னைத்தானே உணரில் அல்லாது, அறிதரப்படாதான்-பிறரால் உணரமுடியாதவனுகிய அல்லமதேவன், நங்காய்-பெண்ணே, சாலவும்-மிகுதியும், நன்று நன்று-நல்லது நல்லது, என்று-என்று சொல்லி, நகைமதி-வெள்ளிய திங்கள், தவழும்-ஊராநின்ற, செஞ்சடை-சிவந்த

சடையையுடைய, மதுகைநாயகன்-மதுகேசனது, திருமுனம் சென்று-சந்நிதியில் வந்து, முகிழ்முலை-அரும்பை ஒத்த முலையை உடைய மாயையானவள், நடிக்கும்பொழுது-ஆடும் போது, தன்செயல்-தனது தொழிலை, செய்முயற்சியில்-செய் கின்ற செய்கையில், நின்றனன்-இருந்தான். [எ—று.]

[கு-ரை.] முற்றறிவினன் தனக்குவமையிலாதான் மாயை சம்மந்த முடைய பிறர் யாரானும் அறியப்படாதவன் என்பன போன்ற இறைமைக் குணங்கள் கடைசியடியில் கூறப்பட்டன. நங்கை என்ற ஐகார ஈற்று உயர் திணைப்பெயர். நங்காய் என விளியேற்றது. ''ஐயிறு பொதுப்பெயர்க்கு ஆயும் ஆவும் உருபாம் அல்லவற்று ஆயும் ஆகும்'' என்பது விதியாதலின். முகிழ்முலை உவமத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. சால உரிச்சொல். நன்று நன்று அடுக்குத்தொடர். (91)

பிரபுதேவர் வந்த கதி முற்றிற்று.

சிவஞான பாலய தேசிக சுவாமிகள் திருவடி வாழ்க.



விழுப்புரம் - ஹனுமான் அச்சியந்திரசாலையிற் பதிப்பிக்கப்பெற்றது.

# பாட்டு முதற் குறிப்பு

